ஸ்ரீ:

# இரண்டாம்பதிப்பின் முகவுரை.

இற்றைக்குப் பதினோராண்டுகட்குமுன் என்னால் எழுதப்பெற்ற தொல்காப்பியப் பொருளதிகாரவாராய்ச்சி வெளிவந்ததுமுதல் தமிழ் மக்களால் அது விருப்புடன் ஏற்றுப் படிக்கப்பெற்றுவருதற்கும், சென்னைச் சருவகலாசங்கத்தாரால் (Madras University) உயர்தர ஆங்கிலப்பரீக்ஷைகட்கும் வித்வான்பரீக்ஷைக்கும் பலமுறை பாடமாக வைத்துக் கௌரவிக்கப்பெற்றுவருதற்கும் யான் பெரிதும் உவப்பும் ஊக்கமும் அடைகின்றேன். இதன் முதற்பதிப்பு முழுதும் செலவாயினமையால், இரண்டாமுறையாக இப்பதிப்பு இப்போது வெளியிடப் பெறுகின்றது. பெரிய மாற்றங்களின்றிப் பெரும்பான்மை முன்னமைந்த முறையையே இப்பதிப்புங் கொண்டுள்ளது. ஆயினும், இன்றியமையாத திருத்தங்களும், புதிய செய்திகளும், கீழ்க்குறிப்புக்களும் ஆங்காங்கு அமைத்துள்ளேன். இறுதியிலுள்ள பொருட்குறிப்பகராதி (Index) புதியதாகவே சித்தஞ்செய்யப்பட்டது. பலர் விருப்பத்தின்படி, இப்பதிப்பினை நல்லகடிதத்திற் சிறப்பாகவும், விரைவாகவும் அச்சிட்டு முடித்து உதவிய மதுரைத் தமிழ்ச்சங்கத்தாரது காலத்தினாற் செய்த உதவி மாணப் பெரிதாகும். இப்பதிப்புக்கு உரியவற்றையெல்லாம், 'செந்தமிழ்' உதவிப்பத்திராதிபர் ஸ்ரீ: திரு. கி. இராமாநுஜஐயங்காரவர்கள், எனக்கு ஒரு சிரமுமின்றி முன்போலவே செய்துதவிய அன்பினை நான் மறுமுறையும் பாராட்டாதிருக்கக்கூடவில்லை. தமிழ் மக்கள் இப்பதிப்பினையும் அபிமானிப்பார்கள் என்று உறுதியுடையேன.

திருவல்லிக்கேணி
2—12—28.

இங்ஙனம்,
மு இராகவையங்கார்.



# முதற்பதிப்பின் முகவுரை.

கொழும்புமாநகர்த் தமிழ்ப்பிரபுக்களுள் ஒருவராகிய ஸ்ரீமாந் Dr. கு. ஸ்ரீகாந்தனவர்கள், 1912-ஆம் எனக்கு அனுப்பிய கடிதம்—முன்பக்கம் பதிப்பிக்கப்பட்டிருப்பதை நோக்குவோர்க்கு, இவ் வியாசத்தையான் எழுதநேர்ந்தகாரணமும் பிறவும் நன்குவிளங்கக்கூடுமென்று எண்ணுகிறேன். மேலும் இவ்வாராய்ச்சி தமிழறிஞராற் சிறப்பாக மதிக்கப்பெற்றசெய்தி அப்போது வெளிவந்த பத்திரிகைகள்வாயிலாகப் பலர்க்குந் தெரிந்திருத்தல் கூடியதே. ஆதலால், இந்நூலின் வரலாறு பற்றி அதிகமாக நான் எழுதுவது மிகையேயாம். இவ்வியாசத்தை நான எழுதிமுடித்து ஏறக்குறையப் பத்துவருஷங்களாகியும், இது வரை அச்சிடப்படாமல் தாழ்க்கும்படி நேர்ந்தது என் துரதிருஷ்டமே. இவ்வாறு தாமதிக்கநேர்ந்ததற்கு—இதனை எழுதுவித்த பிரபுவினிடம் இருந்த இதன சுத்தப்பிரதியை அவர் நண்பரொருவர் பார்வையிடும் பொருட்டு இட்டாலி (Italy) தேசத்திற்குக் கொண்டுபோகும்படி நேர, அப்போது ஐரோப்பிய மகாயுத்தந்தொடங்கி அத்தேசத்தையும் பிடித்ததே முக்கியகாரணமாகும். அப்பெரும்போர் முடிந்தபின்பே இதன் கையெழுத்துப்பிரதியை அவர்கள் பெறும்படியாயிற்று. பிரதி கிடைத்ததும் என் விருப்பத்திற்கிணங்கி யானே அச்சிட்டுக்கொள்ளுமாறு அப்பிரபு அவர்கள் அன்புகூர்ந்து அதனை அனுப்பியுதவினர்கள்.

இப்போது சிற்சில திருத்தங்களும் கீழ்க்குறிப்புக்களும் ஆங்காங்கு அமைத்திருப்பது தவிர, யான அனுப்பியிருந்த அம் மூலப்பிரதியில் உள்ளவாறே இவ்வியாசம் பதிப்பிக்கப்படலாயிற்று. தொல்காப்பியப் பொருளதிகாரத்துக்கு இளம்பூரணவடிகள் எழுதிய உரையுள் அகத்திணை புறத்திணைப்பகுதிகள்மட்டும் இப்போது வெளிவந்துள்ளனவாதலால், அப்பகுதிகளிற்கண்ட விசேடங்களையும் கீழ்க்குறிப்பிற் காட்டியிருக்கிறேன்.

பரிசுக்கு எழுதப்படும் வியாசங்கள் (இப்புத்தகவுருவில்) 100-பக்கங்கட்கு மேற்போகாமல் அமைந்திருத்தல்வேண்டும்' என்று நூலையாக்குவிக்கவர்கள் ஆதியில் நியமித்திருந்தார்கள். அதன்படி குறித்த

அளவுக்குள் வரும்படி கூடியவரை சுருக்கியெழுதியும், வியாசம் 144-பக்கங்கள் ஆயின. ஆயினும், பொருளதிகாரத்தின் அருமையையறிந்த தமிழறிஞர்க்கு, இங்ஙனம் பக்கங்கள் பெருகநேர்ந்த மிகையாகத் தோன்றாதென்பது திண்ணம்.

பொருளதிகாரத்தின் இடங்கள் விளங்கும்படி சூத்திரவெண்களும் பக்கவெண்களும் ஏற்றபெற்றி இவ்வியாசத்துக் காட்டப்பட்டுள்ளன. சூத்திரவெண்கள் (12) என்றாற்போலவும் பக்கவெண்கள் (பக். 12) என்றாற்போலவும் அமைந்திருக்கும். உரைபெருகிக்கிடக்கும் இடங்களை எளிதில் அறிந்துகொள்வதற்காகப் பக்கவெண்களைக் காட்டுவது இன்றியமையாததாயிற்று. இவ்வெண்கள் யாவும் காலஞ்சென்ற ஸ்ரீ: சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள் பதிப்பித்த பொருளதிகாரப்பிரதியையே அநுசரித்தவை என்பது அறிதற்குரியது. வேறுநூலென்பது குறிப்பிடப்பட்டாலன்றி மேற்குறித்த இருவகை எண்களும் பொருளதிகாரத்தைப்பற்றியனவாகவே கொள்ளற்பாலன.

அகப்பொருட்செய்திகள், அதற்குரிய இயல்களில்மட்டுமன்றி, ஏனையியல்களிலும் ஆசிரியராற் பரக்கக் கூறப்படுகின்றன. அங்ஙனம் பரவிக்கிடக்கும் செய்திகளைத் தொகுத்து, அகப்பொருள் எளிதில் விளங்குமாறு ஒரு கோவைப்படுத்தி எழுதியுள்ளேன். யானெழுதிய முறை இறையனார்களவியலுரை முதலிய பின்னூல்களோடும் பெரும்பான்மை ஒத்ததேயாம். அன்றியும், சூத்திரங்களாலும் மேற்கோட்செய்யுள்களாலும் இப்பகுதி நிரம்பாமலிருத்தல் கருதி ஏற்புடைய சிலவற்றுக்கே அவை காட்டப்படலாயின.

புறத்திணையியல், அகமொழிய ஒழிந்த இயல்களினுஞ் சிறந்த தொன்றாதலால், அப்பகுதிக்கு அதிகமாகவே பக்கங்கள் கொடுக்கப்பட்டன. புறச்செய்திகள் பெரும்பாலவும் பழைய தமிழ்மக்களின் வாழ்க்கைமுறைகளைக் குறிக்கக்கூடியனவாதலால் அவற்றின் பெரும்பாகமும் இவ்வியாசத்துட் குறிக்கப்பட்டிருக்கின்றன.

உவமவியல் மெய்ப்பாட்டியல்களைப்பற்றி யான் எழுதியவை, அவற்றிற் கூறப்படும் பொருட்டொகுதிகளைச் சுருக்கமாக உணரவிரும்புவோர்க்கு உதவியாகுமென்றே நம்புகிறேன். ஆனால், செய்யுளியல்

பகுதியாதலாலும் அதன் பேராசிரியருரையுள் எண்ணிறந்த டங்களுண்மையாலும் அதன் பொருட்கூறுகளையெல்லாம் இச்சிறு நூலுள் விளக்குதல் இயலாததாகும். ஆயினும், செய்யுளியலைப்பற்றிப் பொதுவாகத் தெரிதற்குரிய பாகங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. மர பியலுட் பண்டைவழக்குகளைப்பற்றிய விசேடங்களுட் பெரும்பாலவும் காணக்கூடும்.

ஆசிரியரால் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் கூறப்பட்ட சரித் திரக்கூறுகளையும், மக்களியல்புகளையும், பண்டை வழக்கவொழுக்கங்களை யும் தெரிந்தவரை உரியவிடங்களிலெல்லாம் விளக்கியிருக்கின்றேன். இதன்பொருட்டுத் தமிழ்நூல்களும் பிறநூல்களும் கூடியவரை ஆராய்ச்சி செய்யப்பட்டுள்ளன என்பது நோக்குவார்க்கு நன்குவிளங்கும்.

இவ்வியாசத்துக்கூறப்படும் பொருள்களை இடநோக்கியுணர்தற்கு உதவியாகப் பொருட்குறிப்பகராதி ஒன்று இறுதியிற் சேர்க்கப்பட்டது. முடிவிற் காட்டப்பட்ட பிழைகளை அவற்றின் திருத்தங்களுடன் படித் துக்கொள்ளும்படியும், காட்டப்படாத குற்றங்குறைகளைத் திருத்தி யமைத்துக்கொள்ளும்படியும் நல்லறிஞரை வேண்டிக்கொள்ளுகின்றேன்.

இவ்வாராய்ச்சியை வேறு கவலையின்றி எளிதில் எழுதிமுடிப்பதற் குத் தக்க சௌகரியம் எனக்கு வாய்த்தது, இராமநாதபுரம் ஸம்ஸ்தா னாதிபதிகளாய் விளங்கும் மாட்சிதங்கிய ஸ்ரீமத்- ஸேதுபதியரசரவர்கள் ஆதரவின்கீழ் யான் என் சொந்தவூரில் வசிக்கநேர்ந்தகாலத்தேயாதலால், இச்சிறுநூல் அடைந்த நன்குமதிப்புக்கு அவ்வரசரவர்கள் அளித்த ஆதரவே சிறந்தகாரணம் என்பதை ஈண்டுப் பாராட்டவேண்டியவனா யிருக்கின்றேன்.

இவ்வியாசத்தை மதுரைத்தமிழ்ச்சங்கத்துப் பிரசுரங்களுள் ஒன் றாகப் பதிப்பிக்கும்படி அனுமதியளித்த அச் சங்கத்தாருடைய அன் புடைமை, என்னால் என்றும் மறக்கத்தக்கதன்று.

இந்நூலை அச்சிடுமுயற்சியில் எனக்குச் சிறிதுங் கவலையில்லாமல் அச்சுக்கு உரியவற்றையெல்லாம் என் விருப்பப்படிசெய்துதவிய "செந் தமிழ்" உதவிப்பத்திராதிபர் ஸ்ரீமத். திரு. கி. இராமநுஜ ஐயங்கார் அவர்கட்குப் பெரிதும் நன்றியறிதற்கடப்பாடுடையேன்.

Dr. ஸ்ரீகாந்தனவர்கள், என் விருப்பத்தின்படி சமீபத்தனுப்பிய ஆங்கிலமுன்னுரையையும் (Foreword) முன்பக்கத்திற் பதிப்பித்துள்ளேன்.

"கடல்கண் டோமென்பர் யாவரே முடிவுறக் கண்டார்" என்று கம்பநாடர் கூறியவாறு, தொல்காப்பியக்கடலில் என் மனக்கண்ணுக் கெட்டியவரை கண்ட ஒரு சிறுபகுதியையே இவ்வியாசத்துள் எழுதலாயினேன். பின்னும் காணுதற்குரிய பாகங்கள் எத்தனையோ உள்ளன. அவற்றை நல்லறிஞரே ஆராய்ந்து காண்டற்குரியர்.

திருவல்லிக்கேணி,
சென்னை
20—1—22.

இங்ஙனம்,
மு. இராகவையங்கார்.

# பொருளடக்கம்.

**C. Sri-Kanta**
*Litt. D.*

**Sri Vilas,**
**Rosmead Place,**
**Colombo.**
**28—8—1912.**

செந்தமிழ்ச் செல்வர்களாகிய ஸ்ரீமத் மு. ராகவையங்காரவர்களுக்கு விஞ்ஞாபனம்.

இவ்விடம் க்ஷேமம். அவ்விடம் க்ஷேமத்தை அடிக்கடி தெரிவிக்க விரும்புகிறேன்

சில மாதங்களுக்குமுன் பத்திரிகைகளிற் பிரசுரம்செய்வித்திருந்தபடி, எனக்கு வந்த தொல்காப்பியப் பொருளதிகார வியாசங்களைத் தக்க மத்தியஸ்தர்களைக்கொண்டு ஆராய்ந்து பார்க்கச்செய்ததில் தாங்கள் எழுதியதே முதன்மைபெற்றுவிளங்குவதாகத் தெரிந்தமையின், முன்பு பரிசுகொடுப்பதாக வாக்குத்தத்தஞ்செய்திருந்த ரூ. 200-ஐயும் இன்று மணியார்டர்மூலந் தங்களுக்கு அனுப்பியிருக்கிறேன். அதனை மிகவும் பெரிதாக மதித்து அங்கீகரித்துக் கொள்ள வேண்டுகிறேன்.

தங்களுடைய பாஷாஞானமும் ஆராய்ச்சி வன்மையும் மிகவும் மெச்சத்தக்கன. தாங்கள் இதுபோன்ற காரியங்களைச் செய்துகொண்டு நீடூழிகாலம் வாழ்ந்திருக்கும்படி எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளின் திருவருளைச் சிந்திக்கின்றேன்

இங்ஙனம்,
அன்பன்,
கு. ஸ்ரீகாந்தன்.

# FOREWORD



With pleasure I accept the duty of writing a few ' of introduction to this *Essay on Tolkappiyam*, whicl originally written at my request.

The *Tolkappiyam* is so wealthy of content tl hundred commentators may annotate it, and leave i though untouched, to a hundred more. That this ar work should have excited the interest and curiosity c Tamil people, age after age, is not to be wondered at. subject-matter is the history of the race itself, the li ancient Tamilakam.

Pundit Sri. *M. Raghava Iyangar* has done his well. His book, like so many others from the same has a rare combination of deep learning and feli phrasing.

"Good wine needs no bush," says the English pr And even so with this rare essay. It justifies itself tasted. My humble office is merely to say: "*Taste*.

SRI VILAS,
Rosmead Place,
COLOMBO.
14th Jan. 1922,

*(Sd.) C. Sri-Kan*



ஸ்ரீ:

# தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி.

தொல்காப்பியத்தின் பெருமை.

இந்நிலவுலகின்கண்ணே, மக்கட்சாதியாரால் வழங்கப்பெற்றுவரும் பாஷைகள் எண்ணிறந்தனவேனும், அவற்றுள்ளே பழமையும்பெருமையு முடையவாய்ச் சீர்திருந்தம் பெற்றுவிளங்கும் மொழிகள் சிலவேயாம். அங்ஙனம் சீர்திருத்தம் பெற்ற பரதகண்டத்துப் பழம்பாஷைகளிலே வடமொழியாகிய ஆரியமும், தென்மொழியாகிய தமிழும் சிறந்தனவையென்பது நல்லறிஞர் பல்லோரால் முன்னரே தெளியப்பட்டது; ஆதலால் அதனை ஈண்டாராய்ப்புகுவது மிகையாகும். இனி யிவ்விருமொழிகளுள் வடமொழியின் பழம்பெருமையை நிலைநாட்டுதற்கு அதன்பாலுள்ள வேதசாஸ்திரங்கள் எவ்வாறு சிறந்துவிளங்குவனவோ அவ்வாறே தென்மொழியின் பழம்பெருமையைக் குறித்தற்குரிய நூலொன்று மிகநெடுங்காலமாகத் தமிழ்மக்களாற் சேவிக்கப்பெற்றுவருகின்றது. அவ்வரிய பெரிய நூலாவது தொல்காப்பியமே. இப்போது வழங்கும் தமிழ்நூல்களிலே இதனினும் முற்பட்டதொன்று தென்மொழியில் இல்லையென்றே சொல்லலாம். இதன் ஆசிரியர் "ஆணைப் பெருமை யகத்திய னென்னும்—அருந்தவ முனிவ னாக்கிய முதனூல்-பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோ"ருட் சிறந்தவரும், பார்க்கவ குலத்தவரான சமதக்கினியின் புதல்வரும், திரணதூமாக்கினியென்னும் இயற்பெயரினருமாகிய தொல்காப்பிய முனிவர்.* இம்முனிவர்பெருமான், இடைச்சங்கமிருந்த நிலந்தருதிருவிற்

* 'தொல்காப்பியன்—பழைமையான காப்பியக்குடியில் உள்ளோன்' என்பது உரை; காப்பியம் என்பது பார்ப்பாரது பழைய குடிவகையு ளொன்று என்பது "காப்பியத் தொல்குடி கவின்பெற வளர்ந்து" என்னுஞ் சிலப்பதிகார வடியாலும் (30—83) விளங்கும். காப்பியம்=காவியம்: கவியாகிய சுக்கிரனது வமிசம் என்பது பொருள். இவ்வமிசத்தோர் பிருகு மஹருஷியின் மரபினராதலால், பார்க்கவர் எனவும் படுவர். பல்காப்பியனார், வெள்ளூர்க்காப்பியனார், காப்பியாற்றுக் காப்பியனார், முதலாய புலவர்களும், பார்க்கவ அல்லது காவிய

## தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி.

பின்காலத்தவரென்பதூஉம், தமிழ்நாட்டில்வழங்கிய உலகவழக்குச் செய்யுள்வழக்குகளையும், தம்மாசிரியர் அகத்தியனாரியற்றிய முதனூலையும் ஆராய்ந்து இலக்கணநூலொன்று இயற்றினரென்பதூஉம், இயற்றியதனை முற்கூறிய பாண்டியனது அவைக்களத்தே அதங்கோட்டாசான் என்ற நல்லிசைப்புலவர்கேட்ப அரங்கேற்றினர் என்பதூஉம், பிறவும், இம்முனிவர்க்கு ஒருசாலைமாணாக்கரான பனம்பாரனார்கூறிய பாயிரச்செய்யுளால் அறியப்படுகின்றன. இடைச்சங்ககாலந்தொடங்கி நல்லறிஞர்க்கெல்லாம் பெரும்பிரமாணமாக விளங்கும் இலக்கணநூல் இத்தொல்காப்பியம் ஒன்றுமேயாம். இதன் முதனூலாகிய அகத்தியம், இடைச்சங்ககாலம்வரை வழங்கியதாகத் தெரியவரினும், கடைச்சங்ககாலத்திலே அதன் வழக்கு வீழ்வதாயிற்று. இப்போதோ, அந்நூலிற் சிலசூத்திரங்கள் ஆங்காங்கு உரைகாரர்களால் எடுத்தாளப்படுதல் தவிர வேறு காணப்படவில்லை. இவ்வாறு "வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத்,—தாங்கா நல்லிசைத் தமிழ்க்கு விளக்காகென" அருந்தவ முனிவரான அகத்தியனாரால் ஆக்கப்பட்ட முதனூலானது முற்றும் வழக்கொழிந்ததற்கு நச்சினார்க்கினியர் வேறு கதைக்காரணங் கூறுவர். ஆயினும், அதன் வழிநூலாகத் தோன்றிய தொல்காப்பியத்தின் அருமை பெருமைகளே அம் முதனூலின்வீழ்ச்சிக்கு சிறந்தகாரணமென்று சொல்லலாம். இத்தொல்காப்பியந் தோன்றியகாலந்தொட்டு அது விதிக்கின்ற ஆணைப்படி நடப்பதையே முன்னோரும் பின்னோருமாகிய தமிழ்மக்களெல்லாம் தமக்குரிய கௌரவமாகக்கொண்டொழுகினர். "கூறிய குன்றினு முதனூல் கூட்டித் தோமின் றுணர்தல் தொல்காப் பியன்றன்—ஆணையின் தமிழறிந் தோர்க்குக் கடனே" எனப் பல்காப்பியனார் என்னும் பழம்புலவர் கூறுதலுங் காண்க (தொல். பக்-௮௦௬). இடைச்சங்கத்தில் இதனுடன் உதித்த நூல்களெல்லாம் எறக்குறைய இறந்தொழியவும் இந்நூன்மட்டும் இன்றுவரை நின்றுநிலவுவது தமிழ்நாட்டாரது பெரும் பேறேயாம்.

---

குலத்தவராதல்வேண்டும். இனிக் கபிலர் என்ற புலவரின் வேறுபாடறிய, தொல்கபிலர் (குறுந்-14) என்ற புலவர் சங்கநூலிற் சிறப்பிக்கப்படுதல்போல, காப்பியர்பலரின் வேறுபாடறிதற்குத் தொல்காப்பியர் என அடையுடன்வழங்கப்பட்டார் எனினும் பொருந்தும்; பராசரரென்ற முனிவரினின்று வேறுபாடறிதற்கு "விருத்தபாராசரர்" என வேறொருவர் வடநூலுட் கேட்கப்படுதலுங்கண்டுகொள்க.

தொல்காப்பியப் பகுப்பு.

இத்தகைய பெருமைவாய்ந்த தொல்காப்பியமா எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்னும் மூன்று பெரும்பகுதியுடையதாய், அவ்வெழுத்துச் சொற் பொருள்களின் இலக்கணங்களை விரித்துச்செல்வதாம. எழுத்துஞ் சொல்லும் ஆராய்ந்து, அச்சொற்றொடர் கருவியாகப் பொருளுணர்ச்சி பெறவேண்டுதலால், அம்முறையில்வைத்துத் தொல்காப்பியம் அவற்றைக் கூறுவதாயிற்று. எழுத்துஞ் சொல்லும் ஆராய்ந்த மாணாக்கன் பொருளதிகாரங் கற்பது இன்றியமையாததாக முன்னோர் கருதிவந்தனரென்பது, "எழுத்துஞ் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே; பொருளதிகாரம் பெறேமேல் இவை பெற்றும் பெற்றிலேம்" என்று களவியலுரை* நுதலிப்புகுதலால் விளங்கும். தொல்காப்பியத்தின் மூன்றதிகாரங்களும் தனித்தனி ஒன்பதியல்கள் உடையனவாக ஆசிரியரால் வகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள், பொருளதிகாரத்து அமைந்துள்ள இயல்களையுஞ் சூத்திரத்தொகையையும் பற்றிய இரண்டு வெண்பாக்கள்† அடியில் வருமாறு:—

"ஈட்டு மகத்திணையு மேய்ந்த புறத்திணையுங்
காட்டு களவியலுங் கற்பியலும்—மீட்டும்
பொருளியல்மெய்ப் பாடுவமம் போற்றிய செய்யுண்
மரபியலு மாம்பொருளின் வைப்பு"

"பூமலர்மென் கூந்தால்! பொருளியலின் சூத்திரங்க
ளாவவறு நூற்றிருபத் தைந்தாகும்—மூவகையால்
ஆயிரத்தின் மேலுமறு நூற்றுப் பத்தென்ப
பாயிரந்தொல் காப்பியங்கற் பார்"

இவற்றாற் பொருளதிகாரவியல்கள் ஒன்பதென்பதும், சூத்திரங்கள் ௬௬௫-என்பதும, தொல்காப்பிய முழுமைக்குமுரிய சூத்திரத் தொகை ௧௬௧௦-என்பதும விளங்குவனவாம். இப்போது பொருளதிகாரச் சூத்திரத்தொகை ௬௬௬ ஆக உள்ளது. இஃது ஒரு சூத்திரத்தை இரண்டாகக்கொண்டு உரைகாரர் பொருள்கூறியதனாற் போந்ததாம். இவ்வொன்பதியல்களில் அகத்திணையியல, களவியல், கற்பியல்,

*களவியல் - இறையனாரகப்பொருள் (தொல். பக்-௭௪௮).

†செந்தமிழ், தொகுதி-௨; பக். ௧௧௯.

என்ற நான்கும் அகப்பொருளையும், புறத்திணையியல் புறப் பொருளையும், ஏனையியல்கள், முறையே மெய்ப்பாடு, உவமம், யாப்பு, மரபுகளையும் விளக்குவன.

**உரைகளும் வழிநூல்களும்**

இத்தொல்காப்பியம் பழைய உலகவழக்கையும், செய்யுள் வழக்கையும் இலக்கணமுறையால் விளக்குவதாதலால், அவற்றைத் தெரிதற்கு முன்னோர் இயற்றிய உரைகள் பேருதவியாவன. இவ்வுரைகளின் உதவி இல்லையேல், பெரும்பாகமும் இருண்டுகிடக்கும் தொல்காப்பியக்கடலிலுள்ள அரும்பெறன்மணிக ளின் தன்மைகள் நம்மால் அளந்தறிய முடியாவாம். அதனால் அவ் வுரைகாரர் கூற்றுக்கள் மூலத்தோடொத்த பெருமையுடையனவாக மதிக் கற்பாலன. தொல்காப்பியத்துக்கு உரையெழுதியவருள், இளம்பூரண வடிகள், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர் என்ற நால்வருஞ் சிறந்தோராவர். இவருள், நச்சினார்க்கினியரியற்றிய உரையே பொருளதி காரத்துக்கு இப்போது கிடைத்திருப்பது.* ஆயின் அச்சேறிய பொரு ளதிகாரப்பதிப்பிலே செய்யுளியலுக்குள்ள பகுதி, நச்சினார்க்கினியரதன் றிப் பேராசிரியரியற்றிய தென்பது, "செந்தமிழ்" வாயிலாக முன்னரே பிரசித்தமானது.† இதுபோலவே அவ் வச்சுப்பிரதியிற்கண்ட மெய்ப் பாடு, உவமம், மரபியல்களின் உரைப்பகுதிகளும், நச்சினார்க்கினியரெழுதி யன வல்லவென்பதற்குப் பல காரணங்கள் கூறுவர்.‡ ஆராய்ச்சியில் எவ ருரையாகமுடியினும், அவ்வுரைகள் பழமையும் பெருமையும் உடையன வாகவே காணப்படுதலால், அவற்றினுதவிகொண்டு தொல்காப்பியத்திற் கண்ட அருமபொருள்களைத் தெரிந்துகொள்ளத் தடையில்லையாம்.

---

*பொருளதிகாரத்துக்கு, உரையாசிரியராகிய இளம்பூரணவடிகள் எழு திய உரையுள் அகத்திணையியல், புறத்திணையியற்பகுதிகள் இப்போது அச் சாகி வெளியேறியுள்ளன. அவ்வுரையுட்கண்ட விசேடங்களை ஆண்டாண்டுக் கீழ்க்குறிப்பிற் காட்டியுள்ளேம்.

†இவ்விஷயம், சேதுஸம்ஸ்தானவித்வான் ஸ்ரீமத்-ரா. இராகவையங்கா ரவர்களால் முதன்முதல் ஆராய்ந்தறியப்பட்டு, அவர்களால், செந்தமிழ்ப் பத்திரிகையில் ௨-ம் தொகுதி ௧௧-ம் பகுதியில் வெளியிடப்பட்டது. இப்போது நச்சினார்க்கினியரது செய்யுளியலுரை முழுதும் தனிப்புத்தகமாக அவர்களால் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின்வாயிலாக வெளியிடப்பட்டுமுள்ளது.

‡செந்தமிழ். தொகுதி-௨. பகுதி-௧௧.

அன்றியும், இப் பொருளதிகாரத்துக் கூறப்பட்ட அகம், பாடு, உவமம், யாப்பு, மரபு என்பவற்றின் கருத்துக்களைத் தெ... தொல்காப்பியத்துக்குப் பின்னெழுந்த இறையனார்களவியல், ... ராசநம்பியகப்பொருள், புறப்பொருள்வெண்பாமாலை, தண்டியலங்காரம், வீரசோழியம், முதலிய உரையுடன்கூடிய இலக்கணநூல்களும், சங்கச் செய்யுள்களும் பிறவும் தக்க கருவியாக உள்ளன. ஆதலால் இவ் வாராய்ச்சிக்கு அந்நூல்களும் உதவிபெற்றுக் கொள்ளப்படுமெனக. இனி நூலுட் கூறப்படும் விஷயங்களுட் புகுவோம்.

பொருளதிகாரம் பொருளதிகாரமென்பது பொருளினது இலக்கணத்தை உணர்த்தும் அதிகாரம் என விரியும். [அதிகாரம் — முறைமை] பொருளாவன அகப்பொருளும் புறப்பொருளுமாம். அன்றி, அகத்திணையில் இன்பத்தையும், புறத்திணையில் அறம் பொருள் வீடுகளையும் ஆசிரியர் கூறுதலால் உறுதிப்பொருள் நான்கையும் இவ்வதிகாரம் உணர்த்துவதென்று கொள்ளவும் படும். (பக் ந)

இனி, மேற்கூறிய பொருள்களையே கூறவந்த ஆசிரியர், மெய்ப்பாடு, உவமம், செய்யுள், மரபு என்பவற்றையும் சேர்த்துப் பொருளதிகாரத்துக் கூறியதென்னை? எனின், கூறுவேன். தொல்காப்பியனார் எழுத்ததிகாரத்துஞ் சொல்லதிகாரத்துஞ் செய்யுள்வழக்கிற்கும், உலகவழக்கிற்கும் உரியவற்றைக் கலந்து கூறிப் பொருளதிகாரத்திற் பெரும்பான்மை உலகவழக்குக்கு வேண்டுவனவே கூறத்தொடங்கினார்: தொடங்கினவர் அவ்வுலகவழக்கை உணர்த்துவதற்குப் பெரிதும் உபகாரப்படுதலையுடைய மெய்ப்பாடு உவமங்களையும், அவ்வழக்குப்பற்றிப் பாடுதற்குரிய செய்யுளிலக்கணங்களையும், உலகவழக்குஞ் செய்யுள்வழக்கிரண்டற்கும் பொதுவாகிய மரபுகளையும் பொருளியல்களோடு சேர்த்துக் கூறுவாராயினார் என்க. (செய்யுண் மரபியல்களின் அவதாரிகை.)

அகமும் புறமும். இனி, ஆசிரியர் தாம் கூறப்புகுந்த பொருட்டொகுதியைத் தமிழ்மக்கள் முறைப்படி* அகத்திணை புறத்திணை என இரண்டுபகுதியாகக்கொண்டு, அவற்றுக்கேற்ப இயல்கள்

* "தமிழின் முறைவாய் நுழைந்தனையோ" என்னும் திருக்கோவையடியின் (20) விசேடவுரையிற் பேராசிரியர் "தமிழ்நூன் முறைகளாவன, ஈண்டகமும் புறமுமாகிய பொருட்கூறு" என்றெழுதுதல் காண்க. வடநூன் முறையாயின் அறம், பொருள், இன்பம் எனப் பாகுபாடுபெறுமென்பர் பரிமேலழகர் (குறள் காமத்துப்பால். அவதா.).

இவை. அவற்றுள், அகத்திணை என்பது, அகவொழுக்கம்; ஒத்த அன்பொடு ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்றகாலத் தெழுந்த வின்பம், அக்கூட்டத்தின்பின் இவ்வாறிருந்ததெனப் பிறர்க் குக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்ப முறுவதாம்; புறத்திணை என்பது புறவொழுக்கம்; அஃது ஒத்த அன் புடைய தலைவன், தலைவி, இவரன்றி, எல்லாராலும் துய்த்துணரப் படுவதும், இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுவதுமாம். இவற் றுள், இன்பப்பகுதியான அகத்திணையானது களவு கற்பு என இரண் டாகப் பகுக்கப்பட்டு இப்பொருளதிகாரத்தே பல இயல்களால் விரிக்கப் படுகின்றது.

அகப்பொருளின் சுருக்கவரலாறு.

இவற்றுட் களவென்பது ஒருவனும் ஒருத்தியும் அந்தரங் கத்திற் கூடுங் கூட்டம். இக்கூட்டம்பற்றித் தமிழ்நூல் கள் கூறும் வரலாற்றை முதலிற் சுருக்கமாகத் தெரிந்து கொள்ளுதல் பின்வருஞ் செய்திகளையறிவதற்குப் பெரிதும் உபகார மாகும். அவ்வரலாறுவது:—உருவுந் திருவும் அறிவுங் குலமு முதலிய வற்றால் ஒப்புயர்வற்றுவிளங்குந் தலைவனொருவன் வேட்டைவிருப்பால் மலைச்சாரலொன்றன்பக்கத்தே தனியனாய் வந்தானாக—ஆங்குத் தன் தோழியரோடு தினைப்புனங்காத்துவந்தவளும் உரு, திரு முதலியவற்றால் ஒப்புயர்வற்றவளுமாகிய மலைவாணர்மகளொருத்தி விளையாட்டுவிருப்பாற் றோழியர் தனித்தனி பிரிந்தநிலையில், தானுந் தனியளாய்ச்செல்லும் போது அத்தலைவன்முன்பு எதிர்ப்பட்டனள். எதிர்ப்பட, இருவரும் ஊழ்வயத்தால் உள்ளங்கலந்து அவ்விடத்தே கூடிமகிழ்ந்து, பின்னர் ஒருவர்க்கொருவர் பிரிவாற்றாது ஒருவாறு ஆற்றுவித்துக்கொண்டு தத்த மிடநோக்கிச் சென்றனர். இவ்வாறு விதியாற் கூட்டப்பட்டுப் பிரிந்த தலைமகன் தான் காதலுற்றதலைவியைத் திரும்பக்காணுமவாவினாற்றூண் டப்பட்டு, முன்னாட்கூடிய இடத்தையே நாடிச்செல்ல, அங்ஙனமே அன்புதூண்ட ஆங்குவந்தெதிர்ந்த தலைவியைத் தலைவன் முன்போல எதிர்ப்பட்டுக் கண்டு மகிழ்ந்து காதலாற் கலந்தான். இவ்விதம் மூன்று முறை கூடும்போது தன் பாங்கனால், தலைவியிருப்பிடமறிந்துசென்று அவளைச் சேர்வன். இனித் தோழியரால் எப்பொழுதுஞ் சூழப்பட்டுள்ள தலைவியை இங்ஙனமே பலநாளுந் தனியிடத்தெதிர்ப்பட்டுக் கூடுதல் அருமையாயிருத்தல்பற்றித் தலைவியைத் தடையின்றி அநுபவிக்கக்

கருதியவனாய், அதற்குத் தக்க துணையாவாள் அவள் க[illegible] என்பதை அறிந்துகொண்டு அவள்பாற்சென்று, குறிப்பாகவும் வெ[illegible]படையாகவும் தன் குறைகூறி வேண்ட, அவள் பலபடியாக ஆராய்ந்து இருவர்க்குங் கூட்டமுண்மை உணர்ந்து, பின் 'இனி நாமும் இதற்கு உடம்படலே நலம்' என்று அவ்விருவரையும் கூட்டுதற்கு முயல்வள். இங்ஙனம் தோழியாற் பலமுறை தலைவன் கூடிவருமிடையில், தலைவியாற் காக்கப்பட்டுவருந் தினைப்புன முற்றிக் கதிர்கொய்தலேனும் பிறகாரணமேனும் நிகழத் தலைவிக்கு அக்காவல்நீங்கி மனையகத்தே தங்கும்படிநேர்தலும், அக்காலத்து இரவில், தோழி அவ்விருவரையுங் கூட்டமுயலுவள். இங்ஙனம் நிகழும் களவொழுக்கம் முதலிற் சிறுகச் சிலர்பலர்க்குத் தெரியவந்து நாளடைவில் ஊரிற் பேரலராய்ப் பரவ, அதுகாரணத்தாற் பெற்றோர் தலைவியை இற்செறித்துத் தக்கபடி காவற்படுத்துவர். அதனால் தலைமகனைக் காணப்பெறாத ஆற்றாமை தலைவிமாட்டுப் பெருகுதல்கண்டு, தோழி, கற்புநெறிப்பட்ட இவள் இனி இறந்துபடவுங்கூடுமென்று கருதி இதற்கு வேறு உபாயமொன்றுங் காணாதநிலையில், அவள் தலைவனையடைந்து 'நீர் இவளை உடன்கொண்டுசென்று மணந்துகொள்வதே இனிச் செய்யற்பாலது' என்றுகூறி, ஒருவரும் அறியாவகை தலைவியை வெளியேற்றித் தலைமகன்பாற் சேர்ப்பிக்க, அவன் அவளை உடனழைத்துக்கொண்டு, தன்னூர்நோக்கிச் செல்வன்; செல்லுமிடையில், தலைவியின்சுற்றத்தார் அக்களவறிந்துவந்து தலைவனை மேற்செல்லாவாறு தடுக்கவும், அவள் தன்காதல்முழுதும் தலைவன்பாற்சார்த்தி நிற்பதுகண்டு 'இவள் கற்புநெறிப்பட்டாள்' என்று அறிந்துகொண்டு அவ்விருவர்க்குந் தீங்குசெய்யாது திரும்பிச்செல்வர். இங்ஙனமாகத் தலைவனுடன் மகிழ்ந்துசென்ற தலைவி அவனூரடைந்து வாழ்வளென உணர்க.

கற்பாவது இங்ஙனம் உடன்கொண்டுபோய தலைவன் தன்னூரிலேனும், தலைவியின் சுற்றத்தார் சம்மதித்துவேண்ட அவளூரிலேனும் விதிமுறைப்படி அவளை மணம்புரிந்து இல்லறநடாத்தலும், பின் உலகின் நிலையின்மையை யுணர்ந்து வீடுபேறு முயறலுமாம்.

அப்பொருள் பற்றிய இருவகைநூற்குள்

இவற்றால், வேறுசில வேறுபாடுகளுமுண்டேனும், மேற்குறித்த வரலாறே களவு கற்புக்களின் சுருக்கம் என்பது தெரியலாம். ஆகவே, இவ்விரண்டுபகுதிகளும் தமிழ்

# தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி.

அநாதியானவாழ்க்கைமுறையில், விவாகத்துக்குமுன்னும் னும் நிகழும் இரண்டு முக்கியநிலைகள் என்பது அறியப்படும். வ்விருநிலைகள்பற்றியமைந்த ஒழுக்கங்கள் தமிழ்மக்கள் தொன்று ாட்டுவழங்கிய உலகியல்களாய்ப், பின்னரே புலவர்களாற் சிறப்பித் ப் பாடப்பெற்றும், இலக்கணங் கற்பிக்கப்பட்டும் செய்யுள்வழக் நடந்தன என உணர்க. இஃது, "உயர்ந்தோர் கிளவியும் வழக்கொடு ணர்தலின்—வழக்கவழிப் படுத்தல் செய்யுட்குக் கடனே" "நாடக ழக்கினு முலகியல் வழக்கினும்—பாடல் சான்ற புலனெறி வழக்கம்" ன ஆசிரியரே குறிப்பித்தலால் அறியத்தக்கது. நச்சினார்க்கினியரும், இஃது இல்லதெனப்படாது உலகியலேயாம்; உலகியலின்றேல், 'ஆகா ப்பூ நாறிற்று' என்புழி அது சுட்டுத்தவாருமின்றி மயங்கிக்கூறி )ச் செ று உலகம் இழித்திடப்படுதலி இதுவும் இழித்திடப்படும்" க்-நு, ந,) என்றெழுதினர் இவ்வாறு, இக் களவு கற்புக்கள் ஒரு ர் மக்களின் வழக்கத்தோடு சம்பந்தப்படாத வெறுங் கற்பனைகளே ாயின், அவற்றின் பல்வேறு விகற்பங்களைச் செய்யுள்வழக்கோடும் உல யல்களோடும் பொருந்தவைத்து இத்துணையவாகப் பழையநூல்கள் டுத்தோதா என்க. எனவே, பொருளதிகாரத்துக்கண்ட அகப் பொருள்பற்றிய செய்யுள்வழக்கெல்லாம் பண்டைத் தமிழ்மக்கள் கொண் டொழுகிய ஒருவகை உலகவழக்கினின்றே உற்பத்தியாகியிருக்குமென் பது போதரும்.

இனி அவ்வுலகவழக்கம் ஆதியில் எவ்வாறு அமைந்திருந்த

உலகவழக்கம். தென்பதை முதலில் நோக்குவோம். மேற்கூறிய அகப் பொருட் சுருக்கத்தை யாராயுமிடத்து—இல்வாழ்க்கை படைவதற்குமுன் ஒருவன் ஒருத்தியை மறைவிற்கண்டு, தன்பாலுள்ள அன்பை அவட்கு வெளியிட்டுக் கூடி ஒழுகுதலும், அக்கூட்டம் வெளிப் பட்டபின் பெண்ணின்பெற்றோர் அதற் கிணங்குதலும் இணங்காராயின் அவரறியாமலப்பெண்ணைக் கரந்தழைத்துச்சென்று தனக்குரிய மனையா ளாகக்கொண்டு வாழ்தலும் போன்றமுறை இந்நாட்டில் வழங்கிவந் தமை அறியப்படும். படவே, தமிழ்மக்களது பண்டையொழுக்கமானது எண்வகைமணங்களுள், ஒருவர்க்கொருவர் மனமொத்துக்கூடும் காந் தருவமணம் போன்றதென்று சொல்லலாம். ஆனால், களவுக்கூட்டத்தின் பின்னர், ஒருவன் ஒருத்தியை அவள் சுற்றமறியாவகை உடன்கொண்டு

போதலும் பழையவழக்கில் நிகழ்ந்ததாகத் தெரியவருகின்ற ... லும் தலைவியின் சம்மதம்பெற்றே அவ்வுடன்போக்கு நிகழ ... செய்யுள்வழக்கம் காணப்படுதலால், இவ்வொழுக்கத்தை ஒருதலைக்காம மாகிய இராக்கதமுறைப்படுத்தாது ஒத்த அன்புபற்றிய காந்தருவ முறையாகவே கொண்டனர் முன்னையோர். இங்ஙனம், செய்யுள்வழக்கி லே பழைய தமிழ்மணமுறையை மிகவும் சுத்தமுடையதாக முன்னோர் புனைந்து கூறியிருப்பினும், உலகவழக்கானது அச்செய்யுள்வழக்கினும் சிறிது வேறுபட வழங்கியிருத்தல் கூடியதேயாம்; அஃதாவது தலைவி யின் உடம்பாடுபெற்றன்றிப் பெருமலும் அவள்சுற்ற மறியாமல் ஒரு வன் ஒருத்தியைக் கொண்டுசெல்வது முதலியனவாம். தலைவியின் உடம்பாடின்றி அவளை வலிந்துகொள்வதும் முன்பு நிகழ்ந்துவந்ததென் பதைத் தொல்காப்பியனார், "மகட்பாற்காஞ்சி" என்ற புறத்துறையால் வெளிப்படக்கூறியதோடு, "பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்-ஐயர் யாத்தனர் கரணம் என்ப" என்ற கற்பியற்சூத்திரத்தாலுங் குறிப்பிட் டுள்ளனர். பிற்கூறிய சூத்திரத்தின்கருத்தாவது:—உலகியலாகிய பழைய களவுமணத்தில்* "பொய்யும் வழுவும் மிகுந்துதோன்றியதனால் அக் குற்றங்கள்நீங்கக் கற்புமுறையை முனிவர் தமிழ்மக்கட்கு விதிக்கலாயி னர்" என்பதாம். பழைய உலகியன்மணத்துத்தோன்றிய குற்றங்கள் என்றது-ஒருத்தியின் உடம்பாடுபெற்று அவளை அன்பாற் கூடியொழு காது நினைத்தவன் நினைத்தபடி ஒருத்தியை வலிந்துகொள்வது முதலி யனவாதல் வேண்டும். ஆகவே தமிழ்நாட்டில், காந்தருவம்போன்ற ஒழுங்கான களவுமுறையன்றி, ஒழுங்கற்ற களவுமுறையாகிய இராக்கதம் போன்றனவும் முற்காலத்து வழங்கலாயின என்பது உய்த்துணரத்தக்க தாம். "மையின் மதியின் விளங்குமுகத்தாளை - வௌவிக் கொளது மறனெனக் கண்டன்று" என்னுங் குறிஞ்சிக்கலியடிகளும் இக்கருத்தை வலியுறுத்துதல்காணலாம் (கூஉ). இவ்வாறு ஒழுங்கற்ற மணமுறைகளை விலக்கி ஒத்த அன்புபற்றிய காந்தருவத்தையும், அதன்பின்னர்க் கற் பியலையும் ஆரியமேலோர் தமிழ்நாட்டார்க்கு நன்கு விதித்துப்போந்தன

*இம்மணம் "தமிழ்கூறு நல்லுலகத்து" வழக்காகிய ஒழுக்கத்தையே பெரும்பான்மை குறிக்குமென உணர்க.

"இங்ஙனம் விதிக்கப்பட்ட களவுங் கற்புமே இத்தொல்காப்பியத் றப்பட்டன எனவும் உணர்ந்துகொள்க.*

மேற்குறித்த கொள்கையை அடியிற்காணும் செய்திகளும் நன்கு வலியுறுத்துவன: இக் களவொழுக்கமானது எல்லாநிலத்துக்கும் பொதுவாக உரியதேனும் (பக்-25. சூத்-105) குறிஞ்சியொழுக்கமாகவே பழைய நூல்கள் இதனைச் சிறப்பித்தலால் மலைநாட்டில் இவ்வழக்கு மிக்குவழங் கியமை உய்த்துணரப்படுகின்றது. இதற்கேற்ப, மலைவாணராகிய மக்களிடத்தே, அதன் மாதிரிகைகள் இன்றும் நன்றாகக் காணப்படுகின் றன. இம்மக்கள் நிகழ்த்தும் விவாகச்சடங்குகளை நோக்குமிடத்து, அவை, அவரது புராதன சரித்திரத்தைப் புலப்படுத்துவனவென்றும், அம் மணமுறையினின்று இராக்கதமணம்போன்றதே அவர் கொண் டொழுகிய ஆதிவிவாகமென்பது நன்கறிப்படுமென்றும், அதுவே பிற் காலத்தில் கட்டுமுறையாக மாறி நடக்கலாயிற்றென்றுங் கூறுவர்.† இம் மலைவாணராவார்—கஞ்சம்பிரதேசத்தே கொண்டர் சவரர்களும், கோதா வரியிற் கோயிகளும், கோயம்புத்தூரில் ஊராளிகளும், திருவாங்கூர்ச் சீமையில் முதுவர்களும் வேறுசிலருமாவர். இவரெல்லாம் விவாகநிகழ்ச் சிக்குமுன் மெய்யாகவோ பொய்யாகவோ, தாம் விரும்பியபெண்ணை ஒரு வரு மறியாவகை களவிற் கொண்டுசெல்வதும், கொண்டுபோமிடையிற் பெண்ணின்சுற்றத்தார்வந்து தடுக்கச் சம்பந்திகளைச்சார்ந்த இருபாலார்க் கும் போலியுத்தம் நிகழ்வதும், பின்னரே சுற்றத்தாரால் மணமுடித்

---

*இராக்கதமணமானது தமிழ்நாட்டார்க்குள்மட்டுமென்றி ஆரியமக்களாலும் ஒருகாலத்தே பிரபலமாக அனுஷ்டிக்கப்பட்டதேயாகும். இதனை, வியாசபார தத்தில் "எட்டாவதான ராக்ஷஸமே அறிஞர்களால் விரும்பப்பட்டதென் றறி யுங்கள்............தருமசாஸ்திரமறிந்தோர் வலிந்து கொண்டுபோகப்பட்டவளே சிறந்தவளென்று கூறுகின்றனர்" எனவரும் பீஷ்மர்வாக்கியங்களால் அறிய லாம். (ஆதிபர்வம். பக். 404; ஸ்ரீ. ம. வி. ராமாநுஜாசாரியரவர்கள் பதிப்பு). முற்காலத்தே க்ஷத்திரியர்க்குள் இம்மணம் மிக்கிருந்ததினால், ராக்ஷஸவிவாகத் துக்கு "க்ஷாத்ரம்" என்று ஒருபெயர் வடநூல்களில் வழங்கியதென்பர். "காந் தர்வ ராக்ஷஸ மிரண்டும் க்ஷத்திரியர்க்குச்சிறந்தனவாதலால் இவற்றுள் இரண்டே னும் ஒன்றேனும், அரசர் செய்துகொள்ளலாம்" என மனுவுங் கூறுதல் அறியத் தக்கது (அத். 3; சு. 26).

†E. Thursten's Ethnographic Notes in Southern India p. 8.

துக்கொள்வதும் வழக்கங்களாக உடையர். இவருள் ஊராளிகளு முதுவர்களும், தமிழ்முதுகுடியைச் சார்ந்தவர்கள். பிற்கூறிய முதுவரது மணநிகழ்ச்சியில், மணமகன் தான்விரும்பிய கன்னி தண்ணீரெடுக்கவேனும் விறகு பொறுக்கவேனும் வெளியேறும் சமயம்பார்த்திருந்து, அவளை ஒருவரும் அறியாவகை களவிற் கொண்டுசெல்வதும், சென்று மலையின் ஏகாந்தமான பிரதேசமொன்றிற் சிலவாரம்வரை கூடிவசிப்பதும், இதற்கிடையிற் சுற்றத்தார் அவளைத்தேடியுங் காணாது போவாராயின், அவ்விருவரும் திரும்பிவந்து பெண்ணின் பெற்றோரால் மணமுடித்துக்கொள்வதும் இன்னும் நிகழ்ந்துவரும் வழக்கங்கள் என்பர்.* இம் முதுவர் குறிஞ்சிநிலத்துப் பழைய தமிழ்மக்களே என்பதை, அவர் பெயரே குறிப்பிக்கும். இம்மலைநாட்டுப் புராதன மக்களிடம் பெண்கோடலை முற்காலத்தரசரும் விரும்பிவந்தனரெனவும், பெண்கொடுக்க அவர் மறுத்தனராயின், அவ்வரசர் தம்வலிகாட்டி வலிந்து கொண்டுசெல்ல முயன்றுவந்தனரெனவும், தொல்காப்பியனாரே கூறுதல் நோக்கற்பாலது. இதனை நிகர்த்தும் மேல்வந்த வேந்தனொடு முதுகுடி-மகட்பா டஞ்சிய மகட்காஞ்சி யானும் (பக். கஅரு) என்னும் புறத்திணைப் பகுதியால் உணர்க. இதன்பொருள் - "பெண்கொள்ளுதற்கு ஒத்தவனாயிருந்தும், மறுத்தலால் வலிந்துகொள்ளவந்த அரசனோடு அப்பெண்ணுக்குரிய முதுகுடித் தலைவர் தம் மகளைச் சேர்த்தற்கு அஞ்சிய மகட்பாற் காஞ்சியாலும்" என்பது. இதனுட்கண்ட "முதுகுடி" என்பதற்கு நச்சினார்க்கினியர், வணிகர் வேளாளரும் பிற கலப்புச் சாதியாருமே என்று பொருள்கூறினராயினும், மலைவாணராகிய பழைய மக்களையே அது குறிப்பதாம்; என்னை? "முதுகுடிப் பிறந்த முதிராச் செல்வியை - மதிமுடிக் களித்த மகட்பாற் காஞ்சி" என இளங்கோவடிகள், இக்காஞ்சித்துறையை மலைவாணரொழுக்கமாகவே கருதுதலால் என்க. இவ்வடிகளிலே பர்வதராஜனாகிய இமவான் தன் மகள் பார்வதீ தேவியைச் சிவபிரானுக் களித்த முறையை இக்காஞ்சித்துறைப்பாற்

---

*E. Thurston's Ethnographic Notes in Southern India p. 13.
"வேடர் மறக்குலம் போலே வேண்டிற்றுச் செய்தென மகளைக்-கூடிய கூட்டமேயாகக் கொண்டு குடிவாழுங் கொலோ" எனப் பெரியாழ்வாரும், களவிற் கொண்டு மகளிரை மணம்புரியும் வேடர் மறவர் வழக்கத்தைக் குறிப்பிடுதல் அறியத்தக்கது. (திவ். பெரியாழ். 3. 8. 5.)

த்துக் கூறியிருத்தல் கண்டுகொள்க. இத்துறைபற்றிப் புறநானூற்றில் வரும் ௩௩௫-முதல் ௩௫௪-வரையுள்ள ௩௩-பாட்டுக்களை நோக்குமிடத்தும் தமிழர்க்குள் ஒருகாலத்து இராக்கதமணமும் பெருவழக்குடையதாயிருந்ததென்பது புலப்படத் தடையில்லையாம்; ஒரு பெண்ணை வலிந்து கொண்டுசெல்ல அரசர் பலர் முயன்றசெய்தி இப்புறப்பாட்டுக்களால் வெளியாகின்றமையின்* இஃது இராக்கதப்பாற்படுமேயன்றிக் காந்தருவமுறைக்கு ஒவ்வாததென உணர்க.† இம்மகட்பாற்காஞ்சிக்கு உரியாராக ஆசிரியர் கூறிய 'முதுகுடி' என்பதும் தமிழ் மலைவாணருள் "முதுவர்" என்ற கூட்டத்தார் பழைய ஒழுக்கத்தோடு இன்றுங் காணப்படுவதும் ஈண்டு ஒப்பிடத்தக்கன.

இனிக் களவுக்கூட்டத்தின்பின் நிகழ்வது கற்புமுறையாகும். ஆனால், களவொழுக்கமின்றியே தனிக்கற்புமுறை முன்பு வழங்கியதில்லையென்பது, "முற்படப் புணராத சொல்லின் மையிற்-கற்பெனப் படுவது களவின் வழித்தே" (இறை. களவி) என முன்னோர் மொழிதலாற் றெரியலாம்.‡ இக்கற்பிலே தலைவியின் பெற்றோர் கொடுப்பக் கொள்வதேயன்றி, ஒருவரு மறியாமல் தலைவன் அவளை உடன் கொண்டு பேரனவிடத்துக் கொடுப்போரின்றியும் சடங்கின்வழியா லவளை அவன் மணப்பது உண்டெனபர் தொல்காப்பியனார். ஆரியவருணத்தார்மூவர்க்குமே இருடிகளால் ஆதியில் விதிக்கப்பட்ட இக்கற்புமுறை தங்கள் புராதனமுறையொன்றில் நின்றொழுகிவந்த தமிழர் முதலியோர்க்கும், பிற்காலத்தே அவர்களால் நியமிக்கப்படலாயிற்றென்று ஆசிரியரே கூறுகின்றார். இதனை "மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்-கீழோர்க்

---

*பறம்புமலைக்கரசனாகிய வேள்பாரியின்மகளிரைத் தமிழ்வேந்தர் மணம்புரியவிரும்பிக்கேட்டும், அவன் இணங்காது மறுத்தமைபற்றியே, அப்பாரியின்மலையை மூவேந்தரும் முற்றுகையிட்டு அவனையும் வஞ்சத்தாற் கொன்றனர்; இச்செய்தி கபிலர் பாடிய 109, 110, 111-ஆம் புறநானூற்றுப் பாடல்களாலும், 'மகண்மறுத்தல்' என்னுந் துறைக்குறிப்பாலும் விளக்கமாகும்.

†கலம்பகங்களில் வரும் "மறம்" என்ற பகுதி இம் மகட்பாற்காஞ்சித் துறைபற்றியதாதல்வேண்டும்.

‡ "உலகியல்வழக்காய்ப் பின்பு இல்லறநிகழுங் களவொழுக்கம்" என நச்சினார்க்கினியர் எழுதுதலுங் காண்க (கலித். 136 உரை.).

காகிய காலமும் உண்டே"* என்ற கற்பியற் சூத்திரத்தால் (கூ) இதனால் ஆரியாது கற்பியல் விதிகளைத் தமிழர் அறிந்திராத காலம் ஒன்றிருந்ததென்பது வெளியாம். பிற்காலத்தே இருடிகள் கற்பு முறையைத் தமிழர்க்கு விதித்ததன் காரணம் அவரது களவியன்முறையிற் "பொய்யும் வழுவும் தோன்றிச் சீர்கெட்டதேயாம்" என்பது முன்பும் விளக்கப்பட்டது.

செய்யுள்வழக்கம் அல்லது புலனெறிவழக்கம். இவ்வாறு நடைபெற்றுவந்த உலகவழக்கமே காலாந்தரத்திற் புலவர்களாற் சிறப்பித்துப்பாடப்பெறும் நிலைமையை அடைந்தது. அவ்வாறு பாடப்பட்டகாலத்தே அன்பு முறைக்காகாத இராக்கதமுதலிய அசுத்தபாகங்களெல்லாம் அடியோடு ஒதுக்கப்பட்டுக் காதலொத்துவிளங்கும் கந்தருவமார்க்கமே தழுவப்பட்டது. அன்றியும், கூத்தர் விறலியர் முதலியோரால் இவ்வொழுக்கம் அபிநயித்து நடித்துக் காட்டப்பட்டும் வந்தது:— இது "நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்— பாடல் சான்ற புலனெறி வழக்கம்" என்றும் பிறவாறும் ஆசிரியர் கூறுதலால் உணர்தற்பாலதாம். நாடகம் வேத்தியல் பொதுவியல் என இருதிறப்படுமென்றும், இவற்றுள் வேத்தியலென்பது—இவ்வகப் பொருள்பற்றியகூத் தென்றும் முன்னோர் கூறுதலுங் காண்க (சிலப். பக்-அஅ). களவொழுக்கம்பற்றிய செய்திகள் நாடகத்துக்கும் ஏற்றனவே என்பது "இத்தமிழ் நாடகத்தமிழ் எனப்படும்; களவி ஒழுங்குபடக் கோத்துக் கதைபோலவந்து நாடகத்துக் கேற்றலின்" எனத் தஞ்சைவாணன்கோவையுரைகாரர் கூறுவதாலும் புலனும். இங்கேகூறிய நாடகமென்பது, வடமொழியிற் பாத்திரங்களும் பிறவும் வகுத்துவழங்கும் சாகுந்தலமுதலிய போன்றதன்றிக் கதைதழுவிக் கூத்தர் கூத்தியால் அபிநயித்து நடிக்கப்படும் கூத்தென உணர்க. நாடகம், கதை தழுவிவரும் கூத்தென்பர் அடியார்க்குநல்லார் (சிலப். பக்-கூச). இங்ஙனம் களவொழுக்கம்பற்றிப் புலவர்பாடுவதும், அபிநயித்து நடிப்பதும் பல்கி எல்லைகடந்தகாலத்தே அவற்றுக்கு வரம்பாக முன்னோர் இலக்கணம் வகுத்து ஒழுங்குபடுத்தலாயினர். இத்தொல்காப்பியமும் அவற்றுள் ஒன்றாம். இதன் பொருளதிகாரப்பகுதியிலுள்ள கூ-இயல்களிலே

---

* இச் சூத்திரத்துக்கு நேர்பொருள் இதுவேயாயினும், நச்சினார்க்கினியர் கருத்து வேறுதல் அவருரைநோக்கி யுணர்க.

டான்று நீங்க ஒழிந்தனவெல்லாம் அகப்பொருள்பற்றிய வழக்கு வரையறுப்பதையே பெருநோக்கமாகக் கொண்டன. அறமும் பொருளும் பயக்கும் அரசியல் முதலியவற்றை உணர்த்தற்குப் புறத்திணையியல் என ஒன்றே கூறி, ஒருவனும் ஒருத்தியும் கூடும் கூட்டம் பற்றிய விதிகளைப் பல வியல்களால் ஆசிரியர் கூறுவதை நோக்குமிடத்து, அவர்காலத்தே இவ் வின்பவொழுக்கத்துக்கிருந்த வழக்குமிகுதி தெரிய வரும். ஒருகால், இவ்வொழுக்கத்தைச் சிறப்பிக்கவேண்டித் தொல்காப்பியனாரே புதியவாக இலக்கணங்கள் கட்டிக்கூறினரோ எனின்—பாயிரத்தில் "முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்—புலந்தொகுத்தோன்" என்று இவ்வாசிரியர்செய்தி கூறப்படுதலால் அது முற்றும் பொருந்தாதென்க. நச்சினார்க்கினியரும் "இப்புலனெறிவழக்கினை இல்லது இனியது புலவரால் நாட்டப்பட்டதென்னுமோ எனின்—இல்லதென்று கேட்டோர்க்கு மெய்ப்பாடு பிறந்து இன்பஞ்செய்யாதாகலானும், உடன்றிய உலகியல்வழக்கினை ஒழித்தல்வேண்டுமாதலானும் அது பொருந்தாது" (பக்-கூஅ) என மறுத்துக்கூறுதல் அறியத்தக்கது. எனவே, களவு கற்பென்று வகுக்கப்பட்ட அகப்பொருள்விகற்பங்கள், புனைந்துரைவகையாற் புலவர்கள் பாடிவந்த உலகியல்களே என்பது வெளிப்படையாம். இங்ஙனம் புனைந்துரையும் உலகியலுங் கலந்து புலவர்பாடிய செய்யுள்வழக்கை ஆசிரியர் "புலனெறி வழக்கம்" என்று ஆளுவர் (சூத்-ட). [புலன் நெறிவழக்கம்—நூல் நெறிவழக்கம்; "புலத்துறை முற்றிய" என்புழிப் போல.]

பொருட்பகுப்பு இனி, இப்புலனெறிவழக்கைக் கூறுதற்கமைந்த பொருளதிகாரத்திற் பெரும்பாகம் அகப்பொருளே பற்றியதெனினும், சிறப்பாக அப்பொருளை உணர்த்தவந்த இயல்கள் நான்காம்; அவை-அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்பன. இவற்றுள், அகத்திணையியலிற் புலனெறிவழக்கின பொதுவிதிகளும், பொருளியலிற் களவியல் கற்பியல்களிற் கண்ட வழுக்களை அமைத்துக் கொள்ளுமாறும் கூறப்படுகின்றன. முதலிற் பொதுவிலக்கணங்களை அறிந்துகொள்ளுதல் இன்றியமையாததலின், அவற்றுட் சிறப்புடைச் சிலவற்றை இப்போது ஆராய்ந்துகொள்வோம். பொருளியலிற் கண்ட பொருள்களும் வழுவமைதிகளும்—களவு கற்பு வரலாறுகள் கூறுமிடத்துப் பெரும்பாலும் விளக்கப்படும். ஆகவே, ஈண்டு நாம் இவ்வாராய்ச்சிக்கு

எடுத்துக்கொண்ட பகுதிகள்—பொதுவிதிகள், களவியல், கற்பியல் என மூன்றும் என உணர்ந்துகொள்க.

## I. பொதுவிதிகள்.

அகப்பொருள்பற்றிய இன்ப வொழுக்கங்கள் ஆசிரியரால் மூன்று வகையாக வகுக்கப்படுகின்றன. அவை கைக்கிளை, ஐந்திணை, பெருந்திணை என்பன.

(1) கைக்கிளை:—தலைவன் தலைவி யிருவர்க்குள் ஒருவரிடமே தோன்றி விளங்கும் காதல். [கைக்கிளை—சிறுமை உறவு அல்லது ஒரு மருங்குபற்றிய கேண்மை.] இஃது ஒருதலைக்காமம் எனப்படும்.*

(2) ஐந்திணை:—அவ்விருவர்க்குள்ளும் ஒத்து விளங்கும் காதல்; [ஐந்திணை-ஐந்துபகுதிப்பட்ட ஒழுக்கம். இது பின்னர் விரிக்கப்படும்.] இஃது ஒத்தகாமமாம்.

(3) பெருந்திணை:—தலைவன் தலைவியர்க்குள் அளவுகடந்து, இழிவான செய்கைகளுக்கு ஏதுவாகிய காதல். [பெருந்திணை—பெரிய ஒழுக்கம்.] இஃது ஒவ்வாக்காமம் எனப்படும்.

### (1) கைக்கிளை.

இனி, முதலிற்குறித்த ஒருதலைக்காமமாகிய கைக்கிளை நிகழுமிடம் தொல்காப்பியத்தில் மூன்றுவகையாகக்கூறப்பட்டுளது. முதலாவது—காமஞ்சாலா இளமையாளிடம் நிகழ்வது (சூத்-௫0). அஃதாவது-காமக் குறிப்பிற்குப்பொருந்தாத† பேதைப்பருவத்துப் பெண் ஒருத்தியிடம் ஒரு தலைவன் தன் காதற்குறிப்புத்தோன்றக் கூறுவது. இரண்டாவது—ஒத்த அன்பினராய ஒருவனும் ஒருத்தியும் ஊழ்வசத்தால், தம்முள் எதிர்ப்பட்டுக்கூடும் இயற்கைப்புணர்ச்சிக்குமுன் தலைவனிடம் பெரும்பான்மை நிகழும் காட்சி, ஐயம், தெளிதல், தேறல் என்ற நான்கு செய்திகளுமாம் (சூ. 62). மூன்றாவது—வேதத்தே கூறப்பட்ட எண்

* "பெருமையில்லாத தலைமக்கள் உறவு" என்பர் இளம்பூரணர் (பக்-4).

†வேட்கை பிறவாப் பருவத்தாளைப் 'பேதை' என்றும், பிறக்கின்றபருவத்தாளைப் 'பெதும்பை' என்றுங் கூறுவது வழக்கு. "பேதையல்லை மேதையங் குறுமகள் - பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென" (அகம்-எ) என்னும் இடங் காண்க (சிந்தா - இலக்க. கஙஉ).

ருள், கொல்லேறுகோடல்* வில்லேற்றுதல் முதலியன கொள்ளும் ஆசுரமும், தலைமகளாலும் அவள் தமராலும் வலிதிற்கொள்ளும் இராக்கதமும், மூத்தோர் களித்தோர் துயிலோருடன் கூடுதலாகிய பைசாசமும் ஆகும் [சூத்-105.].

இவ்வாறு கூறப்பட்ட கைக்கிளைப்பகுதிகள் முற்கூறியபடி தலை ர் தலைவியிருவருள் ஒருவர்மாட்டே அன்பு நிகழ்ந்து ஒருதலைக்காம தல் கண்டுகொள்க. இப்பகுதியுள், காமக்குறிப்பில்லாப் பேதைய ம் நிகழும் கைக்கிளையொன்றும் ஆசிரியர் முதற்கண் எடுத்தோதுத ன், தமிழ்நாட்டிற் சிறுமிகளைவிரும்பிமணந்தவழக்கும் முன்பு இருந் துபோலும். இக்கைக்கிளையைச் சிறப்புடையதொன்றாக உரைகாரர் றுதலும், கலித்தொகை ருக, ருள, ருஅ-ம் பாட்டுக்கள், இவ்வொரு லைக்காமவகையைச் சிறப்பித்தலும் காண்க. நாற்கவிராசநம்பியார் ம் அகப்பொருளில் இக் கைக்கிளைப்பகுதியை அகப்புறமென்றும், 'மஞ்சான்றவளிடம் நிகழ்வதே அகத்திற்குரியதா'ம் என்றும் கூறுவர் ழி-ந.உ). இனி, ஆசுர இராக்கத பைசாச மணங்களையும் ஆசிரியர் ப்பகுதியிற் சேர்த்தலால், அவை இவர்காலத்தே பொருந்தாக்காம ாகக்கொள்ளப்படாது ஒருவாறு தழுவப்பட்டமை புலப்படும். தலைவன் லைவி இருவரிடத்துமன்றி ஒருவர்பாலே நிகழுங் காமமாதலின் இம் ணங்கள் கைக்கிளைக்குரியவாமென்க. இனிச் செய்யுள்வழக்கிற்குப் பரிதுஞ் சிறப்புடையது இயற்கைப்புணர்ச்சிக்குமுன் னிகழுங் காட்சி, ையம், தெளிதல், தேறல் என்னுங் கைக்கிளையே யென்பது கோவை முதலிய நூல்களால் நன்கறிந்தது. இராமபிரானும் சீதாபிராட்டியும் ல் முறிக்கப்படுவதன்முன் ஒருவரை யொருவர் கண்டு விழைவு ிருந்தனர் என்று வான்மீகிமுனிவர் கூறாதிருப்பவும், கம்பநாடர், ாம் பாடும் தமிழ்மறைக்கேற்ப, அவ்விருவர்க்கும் உள்ளப்புணர்ச்சி ிகழ்ந்ததாகச் சந்தர்ப்பங்கொண்டு இக் கைக்கிளைவகையைப் புனைந்து கூறுதலாலும் இதன் சிறப்பியல்பு அறியலாகும் (மிதிலைக்காட்சிப் டலம்). இனி, முல்லைநிலத் தாயர்க்குள் வழங்கிய 'ஏறுகோடற்கைக் ிளை' என்பதொன்று முன்னூல்களிற் கூறப்படுகின்றது. ஏறுகோடல் ன்பது - ஆய்க்குலத்தலைவர் தம்மகளிர்க்குக் கன்னியாசுற்கமாகக்கொல்

*கொல்லேறுகோடல் - கொடிய விடை தழுவி மணத்தல்.

வேறு (விடை) ஒன்றை வெளிவிடுத்து அதனைத் தழுவிப்பிடிப்ப[illegible] இவளுரியள் என்று நியமிப்பதாம். "ஆசாரமாகிய இவ் வேறுகோட் கைக்கிளை, காமப்பொருளாகிய புலனெறிவழக்கில்வருங்கால், முல்லை நிலத்து ஆயரும் ஆய்ச்சியரும் கந்தருவமாகிய களவொழுக்கம் ஒழுகி வரையுங்காலத்து அந்நிலத்தியல்புபற்றி வரைந்துகொள்வர்" என்பர் நச்சினார்க்கினியர். முல்லைக்கலியின் முதலிரண்டுபாட்டுக்களால் இதன் இயல்பு நன்கு உணரப்படும். இக்கைக்கிளை அவ் வாயர்குலமுதல்வனாகிய கண்ணபிரானாலும் அக் குலமகளாகிய நப்பின்னைபொருட்டு நிகழ்த்தப் பட்டதென்பர். "ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போந்திமி லேற்றுவன்கூன்-கோட்டிடை யாடினை கூத்தடலாயர்தங் கொம்பினுக்கே" என்றார் பெரியாரும். மேலேகாட்டிய கைக்கிளை மூவகையுமின்றிக் கடவுளரிடத்து நிகழும் ஒருதலைக்காமமும், ஒத்த அன்பினராய் முன்பு கூடியொழுகிப் பின்பு ஒருவன் ஒருத்தியைத் துறக்க அதனால் நிகழும் பெண்பாற்கைக்கிளையும் பிறவும் உளவாயினும் அவையெல்லாம் அகப் பொருட்குரியனவன்றிப் புறப்பொருட் பகுதிகளாமென்பர் (பக். ௨௦௬).

## (2) ஐந்திணை.

இனி ஒத்தகாமமாகிய ஐந்திணையே புனைந்துரை உலகியல்களோடு புலவர்களால் மிகுத்துப் பாடப்படுவது. அன்பொத்துவிளங்கும் இவ் வொழுக்கம் ஐந்து பிரிவுடையதாதலின் ஐந்திணை எனப்பட்டது. அவை—முல்லைத்திணை, குறிஞ்சித்திணை, பாலைத்திணை, மருதத்திணை, நெய்தற்றிணை என்பன. [திணை—ஒழுக்கம்] இவ்வைந்து பகுதிகளும் தனித்தனியே முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்று பொருள்களுடையனவாம்.

1. முதற்பொருள்

முதற்பொருளாவன:—நிலமும் பொழுதும். இவற்றுள் நிலம்—முல்லை (காடு), குறிஞ்சி (மலை), மருதம் (நாடு), நெய்தல் (கடற்கரை), பாலை (கலப்புநிலம்) என்னும் பகுப்புடையது. இவைதம்முள், பாலையென்பது தனிநிலமன்றாதலால், தொல்காப்பியனார், "நடுவ ணைந்திணை நடுவண தொழியப்—படுதிரை வையம் பாத்திய பண்பே" என்பதனால் அதனைநீக்கி நான்கு நிலமே கொண்டார். இவர் கருதியவாறு, இப் படுதிரைவையம் ஆதியில் நான்குநிலமாகவே, படைக்கப்பட்டது என்பதற்கு, நானிலம் எனப்

சிறக்கு வழங்கும் பெயரே சான்றாகும்.[1] ஆயினும், பாலைநிலம்—"முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து—நல்லியல் பிழந்து நடுங்கு யருறுத்துப்—பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்"(சிலப்)எனப்படுதலால் அஃது ஒரு தனிநிலமாகவைத்துப் புலனெறிவழக்குஞ் செய்யப்படுவதாயிற்று.[2] இனிப் பொழுது என்பது கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்ற பெரும்பொழுதாறும்[3], மாலை, யாமம், வைகறை, காலை, நண்பகல், எற்பாடு[4] என்ற சிறுபொழு தாறுமாம். இங்ஙனம் முதற்பொருளாகக் கூறப்பட்ட நிலமும் பொழுதும் முற்கூறிய ஐந்திணைகட்கும் ஏற்றபெற்றி உரியவாகும். அஃதாவது—முல்லைக்குக் காடும் காடுசார்ந்த இடமும் நிலம்: பொழுது காரும் மாலையும். குறிஞ்சிக்கு மலையும் மலைசார்ந்த இடமும் நிலம்: பொழுது கூதிரும் யாமமும்[5] முன்பனியும். பாலை கலப்பாதலால் தனிநில மன்று; பொழுது நண்பகலும் வேனிலும் பின்பனியும். மருதத்துக்குப் பழனமும் பழனஞ்சார்ந்த இடமும் நிலம்: பொழுது வைகறையும் காலையும். நெய்தற்குக் கடலும் கடல்சார்ந்த இடமும் நிலம்: பொழுது எற்பாடு—என உணர்ந்துகொள்க. "மருதத்திற்கும் நெய்தற்கும் பெரும்பொழுது சொல்லிற்றின்மையான் ஐவகை யிருதுவும் உரிய" எனக் கொள்வர் இறையனார்களவிய லுரைகாரர் (பக்-கசு). நச்சினார்க்கினியர் "இவற்

[1] "பாலைக்கு நிலமின்மையின், நானிலம் எனப்பட்டது" என்றார் பேராசிரியரும் (திருச்சிற்-கோ-191).

[2] "நானிலம் வாய்க்கொண்டு நன்னீ ரறமென்று கோதுகொண்ட—வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை" என, ஸ்ரீ சடகோபர்திருவாக்கிலும் இப்பாலையின் இயல்பு வருணிக்கப்படுதல் காண்க (திருவிருத். 26).

[3] இவை முறையே ஆவணிமுதல் இரண்டிரண்டு மாதவளவினவாகிய ஆறு பருவமாகக்கொள்க.

[4] இவை ஒவ்வொன்றும் சூரியாஸ்தமனந்தொடங்கி முறையே பப்பத்து நாழிகை அளவினதாம். இவற்றுள் எற்பாடு என்பது பிற்பகல் என்பர் நச்சினார்க்கினியர் (எல்-சூரியன், படுகின்றகாலம்). சிவஞானமுனிவர், பாடு-உண்டாதல் எனக்கொண்டு, "ஞாயிறு உதயமாகும் நள்வெயிற் காலை" எனக் கூறினார்; இவர்க்குச் சிறுபொழுது ஐந்தென்பதே கொள்கையாம். (தொல்காப்பியச் சூத்திரவிருத்தி பார்க்க.)

[5] "யாமமாவது, இராப்பொழுதின் நடுக்கூறு" என்பது இளம்பூரணம்,

றுக்கு அறுவகையிருதுவும் உரியவென்பதன்றிக் காரும் இள[illegible]வேனிலும் பெரும்பொழுதாகக் கொள்ப" எனவும், "நெய்தற்கு ஒழிந்த மூன்றுகாலமும்பற்றிவரச் சான்றோர் செய்யுட் செய்திலர்: அங்ஙனம் வந்தசெய்யுள் உளவேல் அவற்றையுங் கொள்க" எனவும் கூறினர் (பக்கள). இங்ஙனம், ஐந்திணைக்கும் பெரும்பொழுது சிறுபொழுதுகள் பகுக்கப் பட்டது, அவ்வந் நிலத்துக்கேற்ப இப் பொழுதுகள் தலைவன் தலைவியர்மாட்டுக் காமக்குறிப்பைச் சிறப்பித்தல்பற்றியேயாம். இளம்பூரணவடிகள் இதுபற்றி எழுதுவன வருமாறு:— "இவ்வறுவகைப்பருவமும் அறுவகைப்பொழுதும் இவ் வைந்திணைக்குரியவா றென்னையெனின், சிறப்புநோக்கி யென்க. என்னை சிறந்தவாறெனின், முல்லையாகிய நிலனும் வேனிற்காலத்து வெப்பமுழந்து மாவும், புதலும், கொடியும், கவினழிந்துகிடந்தன புயல்கள்முழங்கக் கவின்பெறுமாகலின் அதற் கது சிறந்ததாம். மாலைப்பொழுது இந்நிலத்துக் கின்றியமையாத முல்லை மலருங்காலமாதலானும் ஆண்டுத் தனியிருப்பார்க்கு இவை கண்டுழி வருத்தமிகுதலின் அதுவும் சிறந்ததாயிற்று. குறிஞ்சிக்குப் பெரும்பான்மையும் களவிற்புணர்ச்சி பொருளாதலின், அப் புணர்ச்சிக்குத் தனியிடம் வேண்டுமன்றே? அது கூதிர்காலத்துப் பகலும் இரவும் நுண்டுளிசிதறி இயங்குவாரிலராமாதலான் ஆண்டுத் தனிப்படல் எளிதாகலின், அதற் கது சிறந்தது. நடுநாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது. மருதத்திற்கு நிலன் பழனஞ்சார்ந்த இடமாதலான் ஆண்டு உறைவார் மேன்மக்களாதலின், அவர் பரத்தையிற் பிரிவுழி அம் மனையகத்து உறைந்தமை பிறரறியாமை மறைத்தல்வேண்டி வைகறைக்கண், தம் மனையகத்துப் பெயரும்வழி ஆண்டு மனைவி ஊடலுற்றுச் சாரகில்லாளாமாதலால் அவை (வைகறையும் விடியலும்) அந்நிலத்துக்குச் சிறந்தன; நெய்தற்குப் பெரும்பான்மையும் இரக்கம் பொருளாதலான், தனிமையுற்று இரங்குவார்க்குப் பகற்பொழுதினும் இராப்பொழுது மிகுமாதலின், அப்பொழுது வருதற்கேதுவாகிய எற்பாடுகண்டார் இனிவருவது மாலையென வருத்தமுறுதலின் அதற்கு அது சிறந்ததென்க. பாலைப்பொருளாவது பிரிவு; அப்பிரிவின்கண் தலைமகற்கு வருத்தமுறுமென்று தலைமகள் கவலுங்கால் நிழலும் நீரும் இல்லாதவழி யேகினர் எனவும் கவலுமாகலின் அதற் கது சிறந்ததென்க (தொல். பொ. அகத். 12-இளம்). இவ்வாறே நச்சினார்க்கினியர் எற்

...துர்க்காரணங்கூறிச்செல்லுதலை அப் பொழுதுகளின் உரிமைகூறும் ...த்திரவுரைகளால் உணர்ந்துகொள்க.

2. கருப்பொருள். கருப்பொருள்:—என்பது, ஐந்திணைக்குமுரிய—தெய்வம், உணவு, விலங்கு, மரம், புள், பறை, தொழில், யாழ் என்பன (சூத்-௧௮). இக் கருப்பொருள்கள் ஐந்திணைகட்கும் முறையே உரியவாமாற்றை ஈண்டு எழுதுமிடத்து விரியும்[1]. ஆசிரியர் தொல்காப்பியனார் இவற்றை விரித்துக்காட்டாது உரையிற் கொள்ளவே வைத்தாராயினும்,

> "மாயோன் மேய காடுறை யுலகமும்
> சேயோன் மேய மைவரை யுலகமும்
> வேந்தன் மேய தீம்புன லுலகமும்
> வருணன் மேய பெருமண லுலகமும்
> முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
> சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (௫)

என்ற சூத்திரத்தால் அவ்வத் திணைக்குரிய தெய்வக்கருவைமட்டும் விளக்கினர். கோவலர் பல்லாவும் பயன்தருதற்கு 'ஆகுதிபயக்கும் ஆபல காக்க' எனக் குரவைபாடி மடைபல கொடுத்தலின் அதுகொள்ளுந் திருமாலை முல்லைக்கும், குன்றக்குறவர் பலர்குழுமி, [2]வெறியாட்டயர்தற்கு வேண்டும் பொருள்கொண்டு வெறியயர்வாராகலின் முருகக்கடவுளைக் குறிஞ்சிக்கும், நாடுசெழிக்கவும் காமச்சிறப்பு நிகழவும்வேண்டி எழிலிக்கும் இமையோர்க்கும் இறைவனை விழவுசெய்து அழைத்தலின் இந்திரனை மருதத்துக்கும், நுளையர் (கடற்கரைமாக்கள்) வலைவளந் தப்பின் அவர்மகளிர் கிளையுடன்குழுமிச் சுறவுக்கோடுநட்டுப் பரவுக்கடன் கொடுத்தலின்[3] அதற்குரிய வருணனை நெய்தற்கும்—தெய்வங்களாகப் பண்டையோர் கொண்டனர் என்பர். "பாலைக்குத் தொல்காப்பியனார் நிலம் வேண்டிற்றிலர்; வேண்டாமையின், தெய்வமும் வேண்டிற்றிலர்;

---

[1] சிலப்பதிகாரப் பதிகவுரையின் தொடக்கத்தே, அடியார்க்குநல்லார் இக் கருப்பொருள்களையெல்லாம் அவ்வத்திணைக்கேற்பவைத்து விரித்து விளக்குதல் கண்டுகொள்க.

[2] முருகபூசையில் நிகழ்த்தும் ஒருவகைக்கூத்து. (வெறியாட்டு என்ற பொருட்குறிப்பிடம் பார்க்க).

[3] சுறாமீனின் கொம்பைநட்டு வணங்குதல், நெய்தனிலமாக்கள்வழக்கென்பது, "சினைச்சுறவின் கோடுநட்டு-மனைச்சேர்த்திய வல்லணங்கினான்" எனவரும் பட்டினப்பாலையடிகளான் (86, 87)உணர்க.

பிறர்[1] பகலவனையும், ஆதித்தனையும் தெய்வமாக வேண்டுவர் ... களவியலுரைகாரர். ஆயின் நச்சினார்க்கினியர் "பாலைக்கு ஞாயிற்றைத் தெய்வமாக்கி அவனிற்றோன்றிய மழையினையும் காற்றினையும் அத் தெய்வப்பகுதியாக்கிக் கூறுபவால் எனின்—எல்லாத் தெய்வத்திற்கும் அந்தணர் அவிகொடுக்குங்கால் அங்கி ஆதித்தன்கட் கொடுக்குமென்பது வேதமுடிபாதலின், ஆதித்தன் எல்லாநிலத்துக்கும் பொதுவென மறுக்க. ....எனவே, அவ்வந்நிலத்துத் தெய்வங்களே பாலைக்குத் தெய்வமாயிற்று" என்றெழுதினர். இனி முல்லைக்குக் காமனையும்,[2] குறிஞ்சிக்குச் சூரரமகளிரையும் தெய்வவகையாகக் கூறுதலும் உண்டு.

இங்ஙனம், நானிலத்துக்கும் உரியாராக ஓதப்பட்ட கடவுளர் ஆரிய வேதத்தில் ஆளப்பட்ட தெய்வங்களாகவே பெரிதுங்காண்டலால் அவரை வணங்கிவந்த தமிழ்மக்கள் தொல்காப்பியனார்காலத்துக்குமுன்பே, வைதிகக் கோட்பாடுடையவராதல் நன்குணரப்படும். இவ்வாறே ஆரியாசாரங்கள் பலவும் இவ்வாசிரியர்க்குமுன்பே தமிழகத்திற் பரவி வழங்கின என்பதற்கு இந்நூலுள் வேண்டிய பிரமாணங்கள் காணலாம்.

இனி, ஆசிரியர் "தெய்வ முணாவே....................அன்ன பிறவுங் கருவென மொழிப" எனக் கருப்பொருள் கூறிய சூத்திரத்தில் 'பிறவும்' என்றதனால், பூ, நீர், ஊர், பெயர் என்பனவும் கொள்ளப்படும்; என்னை? "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" (௧௯) "திணைநிலப்பெயர்" (௨0) என ஆசிரியரே பூவும் பெயருங் கூறுதலால் என்க. இவற்றுட் பெயர்கள் மக்கட்கும் தலைமக்கட்கும் வேறுவேறாகும்; அஃதாவது குறிஞ்சி மக்கள்பெயர் கானவர் வேட்டுவர் குன்றுவர்; குறத்தியர் வேட்டுவித்தியர் குன்றுவித்தியர் என்பன. தலைமக்கள்பெயர் வெற்பன் சிலம்பன் பொருப்பன்; கொடிச்சி முதலியன. முல்லைநிலமக்கள்பெயர் கோவலர் இடையர் ஆயர் பொதுவர்; இடைச்சியர் கோவித்தியர் ஆய்ச்சியர் பொதுவியர் என்பன. தலைமக்கள்பெயர் அண்ணல் தோன்றல் முதலியன. மருதநிலமக்கள்பெயர் களமர் உழவர் கடையர்; உழத்தியர் கடைசியர்

---

[1] அடியார்க்குநல்லாரும் இவ்வாறே கூறுவர். (சிலப்பதிகாரம் ௧௯-ம் பக்கம் பார்க்க.)

[2] காமன் மாயோன்மகனாதலின் அவனையும் முல்லைத்தெய்வமாக முன்னோர் கொண்டமை, 9-ஆம் முல்லைக்கலியான் உணர்க.

# *தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி.

தலைமக்கள்பெயர் மகிழ்நன் ஊரன்; மனையோள் முதலியன. நெய்தனிலமக்கள்பெயர் நுளையர் திமிலர் பரதவர்; நுளைத்தியர் த்தியர் என்பன. தலைமக்கள்பெயர் சேர்ப்பன் துறைவன் முதலி ன. கலப்புநிலமாகிய பாலைக்குரிய மக்கள்பெயர் எயினர் மறவர்; பிற்றியர் மறத்தியர் என்பன. தலைமக்கள்பெயர் மீளி விடலை காளை ்தலியன எனக் கண்டுகொள்க. இவ்வாறே பூ* நீர் ஊர்களும் இலக்கிய நாக்கி உணரத்தக்கன.

இவற்றுள் ஒருநிலத்துமக்கள்பெயர் அந்நிலத்துத் தலைமக்கள் பயராக வழங்குதலு முண்டு; அவை, ஆயர் வேட்டுவர் முதலாயின டக, உஉ). மருதநிலத்திற்குமட்டும் அவ்வாறு மாறிவழங்குதல் யரிது என்பர். இங்ஙனம் கூறப்பட்ட ஐந்துநிலத்துத் தலைமக்களு ம அகப்பொருட்குச் சிறப்பாக உரியரேனும் அந்தணர் முதலிய ான்குவருணத்தவரும், குறுநிலமன்னரும் அப் புலனெறிவழக்கிற் நுரியராகவும் கூறப்படுவதுண்டு. இதனை "ஏவன் மரபி னேனோரு முரியர்" (சூத்-உச) என்புழித் தனிப்படக் கூறுதல் காண்க. இவ்வந்த ணர் முதலியோர் தலைவராகப் பாடப்பெற்ற செய்யுட்களை உரையால் டணரலாம். ஆகவே, தமிழ்மக்களாகக் கருதப்பட்டார் இவ்வைந்து நிலத்தவரேயென்பது நாம் நன்கு உய்த்துணரலாகும். நம்பியாரும், "மறையோர் மன்னர் வணிகர் சூத்திரரெனும்–இறையோர் தமக்கு மெய்துமற் றதுவே" "அதுவே, மொழிந்தோர் நால்வரு மொழிந்தந் நிலத்துறை–இழிந்தோர் தம்முளு முயர்ந்தோரு மெய்துப" எனவும் (30, 31), அவற்றினுரையில் "மேற்சொல்லப்பட்ட கைக்கிளையை அந் தணர் முதலிய நால்வகைத் தலைமக்களுமன்றி, ஐந்நிலத்தும் உறை யும் நிலமக்களுட் டலைமக்களும் பெறுவர்" எனவும் கூறுதலின் ஆயர் வேட்டுவர் கிழார் பரதவர் மறவர் என்ற ஐவகைமக்களுமே தமிழ்நாட் டுக்குரியர் என்பது அவர்க்குங் கருத்தாதல் தெரிகின்றது. நிற்க.

இனி, மேற்குறித்த ஐந்திணைக் கருப்பொருள்களில் ஒருநிலத்துக் குரிய பூவும் புள்ளும் மற்றொருநிலத்தில் மயங்கியதாகக் கூறுவதும் வழக்காம் (சூத்-கக). ஆயின், மற்றைக் கருப்பொருள்களும் அங்ஙனம் மயங்குமென்று ஆசிரியர் கூறாமையால், அவற்றை மயங்குவனவாகக்

---

*பத்துப்பாட்டின், குறிஞ்சி முல்லைபபாட்டுக்களிலும் பிறவற்றிலும் அவ் வந் நிலப்பூக்கள் விசேடமாகக் கூறப்படுதல் காணலாம்.

கூறுதல் முற்காலத்து வழக்கில்லைப்போலும். பிற்பட்ட ... அவை வேறுநிலத்தும் மயங்குவனவாகக் கூறப்படுதல் ... ஞார்க்கினியர் "ஒன்றெனமுடித்தலால், பிற கருப்பொருள் மயங்... உளவேனும் கொள்க" என்று அமைப்பர் (பக்-39).

3. உரிப்பொருள். உரிப்பொருளாவன—முற்கூறிய ஐந்திணைக்கு முரிய ஒழுக்கங்களாகும்; அவை புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவும் அவற்றின் நிமித்தங்களும். அவற்றுட் புணர்தலும் அதனிமித்தமும் குறிஞ்சி உரிப்பொருள்; பிரிதலும் பிரிதனிமித்தமும் பாலை; இருத்தலும் இருத்தனிமித்தமும் முல்லை; இரங்கலும் இரங்கனிமித்தமும் நெய்தல்; ஊடலும் ஊடனிமித்தமும் மருத உரிப்பொருள் என உணர்க (கச). அகப்பொருளாவது—ஒருவனும் ஒருத்தியுங் கூடும் கூட்டமாதலானும், அக்கூட்டம் இருவர்க்கும் ஒப்பநிகழ்தலானும் முதலிற் புணர்ச்சியையும், அக்கூட்டத்தின்பின்னரல்லது பிரிவின்மையால் அதன்பின் பிரிவையும், தலைவன்பிரிந்தவிடத்துத் தலைவி ஆற்றியிருப்பது முறையாதலின் அதனையடுத்து இருத்தலையும், தலைவன் பிரிவுநீட்டித்தவிடத்து அங்ஙனம் ஆற்றியிராது தலைமகள் இரங்குமாகலின் அதற்குப்பின் இரங்கலையும், பிரிந்ததலைவன் வந்துகூடியபின் இருவர்க்குமுள்ள காமக் குறிப்பைச் சிறப்பித்தலால் இறுதியில் ஊடலையும் வைத்து, இங்ஙனம் ஒத்த அன்புடைய தலைவி தலைவன் இவரிடத்து நிகழ்தற்குரிய இன்ப ஒழுக்கங்கள் இவ்வைந்துமே எனக் கண்டு, அவற்றை முறைப்படுத்தோதினர் முன்னையோர் என்பது உணரத்தக்கது (பக்-30).

நிலங்களும் அவற்றிற்குரிய அகவொழுக்கங்களும். இனி, மலைக்குப் புணர்ச்சியையும், பாலைக்குப் பிரிவையும், காட்டுக்கு இருத்தலையும் கடற்கரைக்கு இரங்கலையும், நாட்டுக்குஊடலையும் பண்டையோர்கொண்டதற்கு நூலிலேனும் உரையிலேனும் ஏற்புடைய காரணங்காண்டல் அரிதாம். ஆயினும், அடியில் வருமாறுகூறுதல் பொருந்துவதோ என்பது ஆராயற்பாலது. முற்காலத்து மலைநாட்டுமகளிர் வளமும் எழிலும் வாய்ந்து விளங்கினமைபால் தமிழ்த்தலைவர் அன்னாரைப் பெரிதும் காமுற்றுவருங்காலத்துக்* களவிற்குச் சிறந்த பாகுட்கங்குலில் (இடை

*தமிழ்த்தலைவர், முன்பு, மலைநாட்டுமகளிரையேபெரிதும்விரும்பிய செய்தி முன்னரும் குறிக்கப்பட்டது.

ருடன் வழங்காது மாவும் புள்ளும் துணையுடன் மகிழ்ந்து
ரு மலையின் இயற்கை வளமும் காமோத்தீபகமாய் இருவர்க்கும்
ளின்பம் விளைத்தலாலும், குறிஞ்சிநிலத்துக்குச்சிறந்த கூதிராகிய
ப்பசி கார்த்திகை மாதங்களும் இடையாமமும் இருள்தூங்கித் தனி
துதலாற் றலைவனுக்குக் களவிற்சேர்தல் அரிதாதல்பற்றிக் காமக்குறிப்
பப் பெருக்குதலாலும் களவுக்கூட்டத்தைக் குறிஞ்சிநிலத்துக்கும்,*
ங்ஙனம் குறிஞ்சித்தலைவியொடு கூடிய தலைவன், தனித்தாயினும் சுற்
ந்தார் அறிந்து தடுத்தவிடத்துத் தலைவியை உடன்கொண்டாயினும்
ரிந்துபோமிடம் "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து—நல்
பல்பிழந்த" நிலமேயாதலாற் பிரிதலைப் பாலைக்கும், அவ்வாறு தலைவி
ய உடன்கொண்டுசெல்லும் இளைஞர் பெரும்பான்மை நாட்டுத்தலைவரே
ாதலால், தாம் கொணர்ந்த பெண்டிரை மணந்து இல்வாழ்க்கை
கழ்த்துங்காற் றலைவன்பரத்தமை காரணமாகப் பெரும்பான்மை நிக
ும் ஊடலை மருதத்துக்கும், அவ்வாழ்க்கைக்காலத்துப் பகைகளைதல்
ற்றிப் பிரிந்து வினைமுற்றி மீள்வோன், பாசறையினின்று ஊர்நோக்கி
ருங்காலம் கார்ப்பருவமாகிய ஆவணி புரட்டாதி மாதங்களாதலின்,
ுவை வெப்பமும் தட்பமும் மிகாது நீரும் நிழலும் பெறுதலும், ஊர்ப்
க்கத்துக் காடுஞ் சோலையும் காட்சிபெருக, மாவும் புள்ளும் மகிழ்ந்து
ளையாடுதலும், மாலையிற் பசுக்கள் மன்றிற்புகுதலும், தீங்குழலிசைத்த
லும் பிறவும் காமக்குறிப்பை மிகுவித்துப் பிரிவாற்றிக்கொண்டு தனித்
ருக்கும் தலைவியது கற்புநிலையைப் பொருகக்காட்டுதலின் இருத்தலை
ல்லைக்கும்† தலைவனைப் பிரிந்த கிழத்திக்குக் கடலுங் கழியுங் கான
ுங் காணுந்தோறும் ஆற்றாமை கைம்மிக்கு இரங்கல் நிகழ்வதே இயல்
ாதலின் அவ்விரங்கலை நெய்தற்கும் உரியனவாக்கி முற்காலத்தவர்
லனெறிவழக்கஞ் செய்தனர்போலும். இவற்றுக்கு இன்னும் ஏற்
டைய காரணமுளவேனும் அவற்றையுங் கூறிக்கொள்க.

---

*வித்தியாதர காந்தர்வர்களும் பிற தெய்வக்கூட்டத்தாரும் மலையினிடங் கூடியுறைவதாயே நூல்கள் சிறப்பித்தலும் இக்கருத்தை வற்புறுத்தும்.

† தாவொழுக்கை துணையின்றித் தனிநிலையிற்செய்யும் அறவோர்வாழ்க்கை யாதலின், தலைவியின் தனிநிலைக்கும் அதனை இடமாக்கினர்போலும்.

நிலங்களின் பெயர்க்காரணம்.

இனி, முற்கூறிய ஐந்து நிலங்களும் முல்லை மு முதலாகப் பெயர்பெற்றதன் காரணமும் ஆராய்ந்துகொள்ளற்பாலதாம். இப்பெயர்கள் மரம் அல்லது பூவிசேடங்கட்கு உரியன என்பதும், முல்லைமுதலியவற்றின் மிகுதி அல்லது சிறப்புப்பற்றி அந் நிலங்கட்குப் பெயர்கள் வழங்கலாயின என்பதும் எளிதிற் புலப்படும்.* 'கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பு' (மதுரைக்காஞ்சி-௩00.) "மருதஞ்சான்ற மருதத்தண்பணை" (சிறுபாண்-௧௮௬.) "முல்லை சான்ற முல்லையம் புறவு" (ஷை ௧௬௯) † "பாலைசான்ற சுரம்" (ஷை ௩௪௪) எனப் பூ அல்லது அதன் முதற்பொருளின் சிறப்புப்பற்றி அந்நிலங்கள் கூறப்படுதல் நோக்குக.‡ இனிக் களவியலுரைகாரரும் நச்சினார்க்கினியரும், இந்நிலப்பெயர்கள் அவற்றின் ஒழுக்கமாக மேலே கூறிய உரிப்பொருள்களடியாக வழங்கலாயின என்பர். அஃதாவது— முல்லைக்குரியதாகப் புலனெறிவழக்கஞ்செய்யப்பட்ட ஒழுக்கம் "இருத்தல்" என்பது: இவ் விருத்தற்கே முல்லையென்பது ஒருபெயர் என்பதாம்; "குறிஞ்சியாகிய ஒழுக்கம் நிகழ்ந்த நிலமும் குறிஞ்சி எனப்பட்டது ;. என்னை ? விளக்காகிய சுடரிருந்த இடமே விளக்கெனப்பட்டது போல" என்றார் களவியலுரைகாரரும் (16). மற்றைநிலங்கட்கும் இவ்வாறே கூறிக்கொள்க. இவற்றால் முல்லை குறிஞ்சியென்று கூறப்பட்ட ஒழுக்கங்களாற் காடு மலை முதலியவை அப் பெயர்பெற்றன என்பது அவ்வுரைகாரருடைய கருத்தாகத்தோற்றினும்—அவ்வொழுக்கந்தான் அவ்வாறு பெயர்பெற்றதன் காரணம் என்னை ? என்ற கேள்வி திரும்ப எழக்கூடியதாகின்றது. அதனால் நிலங்கள் முற்குறித்தபடி பூக்களி

---

* இளம்பூரணவடிகளும், குறிஞ்சிமுதலிய பூக்களின் சிறப்புப்பற்றியே மலை முதலிய நிலங்கள் குறியிட்டாளப்பட்டன என்று உதாரணங்களுடன் விரித்தெழுதுதல், "மாயோன்மேய" என்ற சூத்திரத்துக்கு அவரெழுதிய உரை நோக்கி யறியலாம்.

† "முல்லைசூழ்முல்லைவேலி" என்றார் திருத்தக்கதேவரும். (சிர், முத்தி. 464.)

‡ நன்கு நச்சினார்க்கினியர் "மருதஞ்சான்ற மருதம்" முதலியவற்றுக்கு "மருதவொழுக்கமிருந்த மருதம்" என் றிவ்வாறு பொருள்கொண்டாராயினும், "கருங்காற் குறிஞ்சி சான்ற வெற்பு" என்புழி, 'கருங்கால்' என்ற அடையைக் குறிஞ்சியொழுக்கத்திற்கு ஆக்கிக்கொள்ள இடர்ப்படுதலால், அவர்க்கே அது கருத்தன்றென்க.

யாகப் பெயர்பெறுதுபோயினும், அந்நிலத்தொழுக்கங்களேனும் அவையடியாக வழங்கலாயின என்று கூறுதலேவேண்டுமென்க. ஆயின், நச்சினார்க்கினியர் "இவ்வாறன்றி, முல்லைமுதலிய பூவாற் பெயர்பெற்றன இவ்வொழுக்கங்களெனின், அவ்வந்நிலங்கட்கு ஏனைப்பூக்களும் உரியவாகலின் அவற்றாற் பெயர்கூறுதலுமுரிய எனக் கடாயினார்க்கு விடையின்மை உணர்க" என இக்கொள்கையை மறுத்திட்டனர். ஆயினும், ஒவ்வோரொழுக்கத்தை உணர்த்தற்கு ஒவ்வொருபூவை அடையாளமாகக் கொண்டொழுகுவது பண்டைத்தமிழரது வழக்கேயாம். இது, புறத்திணையொழுக்கமாகிய நிரைகவர்தல் மீட்டல் முதலியவற்றுக்கு, வெட்சி கரந்தை முதலாய பூக்களை அறிகுறியாகக்கொண்டமையாலும் விளங்கும். இங்ஙனம் கொண்ட முறையைப் புறத்திணைச்செய்திகள் கூறுமிடத்து விளக்குவேம். எனவே, அகத்திணையொழுக்கங்கட்கும் அங்ஙனம் பூக்களை அடையாளமாகக்கொண்டு முன்னோர்வழங்க, அவற்றினடியாக இருத்தல் முதலிய ஒழுக்கங்கள்* முல்லை முதலாகப் பெயர்பெற்றன என்று கொள்ளுதல் இழுக்காதென்க.

பாலையொழுக்கமாகிய பிரிவின் வகை.

இனி, ஐந்துரிப்பொருள்களிலும் குறிஞ்சித்திணை களவுப்பகுதிக்கும், முல்லைமருதநெய்தல்கள் கற்புப் பகுதிக்கும், பாலை களவு கற்பென்ற இரண்டற்கும் பெரும்பான்மை புலனெறிவழக்கஞ்செய்யப்படுவனவாம். இவற்றுட் பாலையொழுக்கமாகிய பிரிவு களவு கற்புக் காலங்களில் நிகழ்தற்குரிய பொதுவொழுக்கமாதலால், அதனைப்பற்றி ஆசிரியர்கூறிய விதிகளும் ஈண்டே அறியத்தக்கவை. இப்பாலையாகிய பிரிவு—ஓதல் பகை தூது காவல் பொருள் என்பவைபற்றி நிகழும். இவற்றுள் ஓதற்பிரிவு வேளாள

*இங்ஙனமே ஐரோப்பியரும், பண்டும் இன்றும், 'லில்லி' என்ற (Lily) வெள்ளையல்லிமலரைக் கற்புக்குறியாக வழங்கியுள்ளார். டெனிஸன் மஹாகவி இயற்றிய "Lancelot and Elaine" என்ற கவியில், ஈலேன் என்ற பெண்ணின் கற்பின்றூய்மைகுறிக்க—அவளை 'லில்லிப் பெண்' (Lily Maid) என்று கூறப்பட்டிருத்தல் தெரியவருகின்றது. இயேசுநாதரின் தாயாகிய மரியாளின் சித்திரத்தில் அவளது கற்பின்றூய்மையைக்காட்ட, லில்லிப்பூவொன்று வைக்கப்பட்டிருக்குமென்பர். இதுபோலவே, அன்புடைய இருவர் பிரியுங்கால், அப்பிரிவைக்குறிக்க, 'பர்கெட்-மீ-நாட்' 'Forget-me-not' என்ற பூவைக் கொடுத்தலும், துக்கமிகுதியை 'வீப்பிங்-வில்லோ' "Weeping willow" என்ற பூவாற் குறித்தலும் அவ்வைரோப்பியநாட்டொழுக்கமென்பர்.

சொழிந்த ஏனைவருணத்தார்க்கு உரித்தெனவும் (உக) பகைமேற்பிரிவும் காவற்பிரிவும் அரசர்க்கே உரிய எனவும் (உஎ—உஅ) பொருள்வயிற்பிரிவு வணிகர்க்குச் சிறந்தும் ஏனையர்க்குப் பொதுவாகவும் வழங்குமெனவும் (உக) குறுநிலமன்னர்க்கு அரசர்க்குரிய பிரிவுகள் உண்டென்றும் (௩உ) கூறுவர். இவற்றோடு, உடன்போக்கும் (பக். 31.) மனையயற்கட் பரத்தையிற்பிரியும் பிரிவும் ஆசிரியர் அகத்திணையியலிற் கூறாதுபோயினும், இப் பாலைப்பாற்படும் என்பர், நச்சினார்க்கினியர் (௬௩). இப்பிரிவு நால்வகைவருணத்தார்க்கு முரித்தாம் என்க.

பொருட்பிரிவு வணிகர்க்கேயன்றி மற்றைவருணத்தார்க்கும் உரித்தென்பதை "மேலோர் முறைமை நால்வர்க்கு முரித்தே" என்பதனால் ஆசிரியர் ஓதுவர். இதற்கு, நச்சினார்க்கினியர்—வணிகர்க்குப் பொருட்பிரிவுண்டென்பதனை, 'மேவிய சிறப்பின்'* என்ற முற்சூத்திரத்தில் ஆசிரியர் கூறிப்போந்தமையால், இச்சூத்திரத்துவரும் 'நால்வர்' என்றது, அவ் வணிகரொழிந்த நால்வரென்றும், அவராவார்—அந்தணர் அரசர் உழுதுண்ணும் வேளாளர், உழுவித்துண்ணும் வேளாளர் என்றும் குறித்தனர். இவருள் உழுவித்துண்ணும் வேளாளரைப் பற்றி அவர்கூறுவன வருமாறு:—"இவர் மண்டிலமாக்களுந் தண்டத்தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும் அழுந்தூரும் நாங்கூரும் நாவூரும் ஆலஞ்சேரியும் பெருஞ்சிக்கலும் வல்லமும் கிழாரும் முதலிய பதியிற்றோன்றி வேளெனவும் அரசெனவும் உரிமையெய்தினோரும் குறுமுடிக்குடிப்பிறந்தோர் முதலியோருமாய் முடியுடைவேந்தர்க்கு மகட்கொடைக்குரிய வேளாளராம். உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னி அழுந்தூர் வேளிடை மகட்கோடலும் அவன்மகனாகிய கரிகாற்பெருவளத்தான் நாங்கூர்வேளிடை மகட்கோடலும் கூறுவர்" (௩0) எனபது. இவ்

---

*இளம்பூரணர் "மேவிய சிறப்பி னேனோர் படிமைய...பிரிவே" என்ற சூத்திரத்துக்கு, "தேவாதபூசைமுதலாயினவும் மக்களும் முறைமைதப்பியவழித் தப்பாது அறம்நிறுத்தல் காரணமாகவும் பொருளாக்குதல் காரணமாகவும் பிரிவுளதாம" என்று பொழிப்புக் கூறுவர். "படிமை என்பது ப்ரதிமா என்னும் வடமொழித்திரிபு; அது தேவர்க்கு ஒப்புமையாக நிலத்தின்கட் செய்தமைத்த தேவர்மேல் வந்தது" என்பது அவர் விசேடவுரை. இவ்வாறாயின், தொல்காப்பியனார்காலத்தே கோயில்களில் விக்கிரகங்கள் வைத்து வணங்கப்பட்டவேந்தமையும் அக்கோயி லறப்புறங்களை அரசர் பாதுகாத்துவந்தமையும் பெறப்படும்.

[illegible]

[illegible] இன்னும், [illegible] வேளாளர் என [illegible]ப் பிரித்து அவர்க்கு அரசர்க்குரிய வரிசைகளை உரை[illegible]தலால், முற்காலத்தே அவர்க்கு நாட்டிலிருந்த பெருமதிப்பு நன்கு வெளியாகத்தக்கது. வேளாளரது ஆதிவரலாறுகளும் அவரது பெரும்பெருமைகளும் யா னெழுதி வெளியிட்ட "வேளிர்வரலாறு" என்ற நூலால் நன்குவிளங்கும்.

இனி, ஓதற்குப் பிரியும் பிரிவில், அந்தணர் அரசர் வணிகரென்ற மூவரும் வேதங்களும் வேதத்துப்பிறந்த வடநூல்களும் அகத்தியம் முதலிய தமிழ்நூல்களும் கற்றற்குரிய ரென்பதும், உயர்ந்தவேளாளர் வேதத்தினின்று பிறந்த வடநூல்களும், தமிழ்நூல்களும் கற்றற்குரியர் என்பதும் "உயர்ந்தோர்க் குரிய வோத்தி னான" என்ற சூத்திரவுரையால் தெரியலாம். "ஓதற் றொழிலுரித் துயர்ந்தோர் மூவர்க்கும்—அல்லாக் கல்வி எல்லார்க்கு முரித்தே" என்றார் நம்பியாரும். இப்பிரிவு, தலைவனுந் தலைவியும் வரைந்துகொண்டபின் முதலில் நிகழ்வதென்பர் பேராசிரியர் (திருக்கோ ௩௦௮.). இனிக் களவியலுரைகாரர்—ஓதல், காவல், பகைதணிவினை, வேந்தர்க்குற்றுழி (உதவி), பொருள், பரத்தை என ஆறுபிரிவுகள் கூறி, அவற்றுள் ஓதலை அந்தணர் அரசர்க்கும், காவலை அரசர்க்கும், தூது பரத்தையிற்பிரிவுகளை நால்வர்க்கும், வேந்தர்க்குற்றுழி, பொருட்பிரிவுகளை வணிகர் வேளாளர்க்கும் உரிமைப்படுத்தினார்* (சூத் ௩௫-௩௬). இவற்றுள் பரத்தையிற்பிரிவு எல்லார்க்குங்கொள்ளுதல் தொல்காப்பியனார்க்கும் ஒக்குமென்பது "பரத்தை வாயி னால்வர்க்கு முரித்தே" (உஉச) என்னுஞ் சூத்திரவுரையாற் பெறப்படும். நாற்கவிராச நம்பியார் காவற்பிரிவு—அறப்புறங்காவல் (தர்மஸ்தாபனங்களைப் பாதுகாக்கை), நாடுகாவலென இருதிறப்படுமெனறும், முன்னது எல்லார்க்கும், பின்னது அரசர்க்கும் உரியவென்றும், (எஉ-௩) அரசராற் சிறப்புப் பெற்றாராயின வணிகரும் சூத்திரரும் தூதிற்குப் பிரிவரெனவும், வேந்தர்க்குதவியாகப் பிரியும் பிரிவு அந்தணரொழிந்த மூவர்க்கும் உரித்

* இப்பிரிவுகள்பற்றிய செய்திகளைத் தடைவிடைகளுடன் 35-ஆம் சூத்திரவுரையுள் இறையனார்களவியலுரைகாரர் விரித்துக்கூறுதல் அறியத்தக்கது.

[redacted]

[redacted]
தார்க்கு முரியவெனவும், இப்பிரிவுகளில் ஓதல், [redacted]
லொழிய ஒழிந்தவை, ஐந்நிலத்துமக்களுள் தலைவராயுள்ளவர்க்கு உரியவாம் எனவும் கூறுவர். இவற்றால், பிரிவுவகைகளை அவ்வக்குலத்தவர்க்கு உரிமைப்படுத்துவதில், பின்புள்ளோர் தொல்காப்பியனாருக்குத் தொடு சிறிது வேறுபாடுகொண்டிருந்தமை புலப்படும்.

இனி, ஓதல் தூது பொருட்பிரிவுகளிடத்தும், பலவாறு சூழ்ந்து போர்குறித்துநிற்கும் பாசறையிடத்தும், தலைவி தலைவனுடன்செல்லுதல் பண்டைவழக்கமின்மையால், அங்ஙனம் புலனெறிவழக்குஞ் செய்ததில்லை.† இதனை "முந்நீர் வழக்க மகடூஉவொ டில்லை" (௩௪) "எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார்" (௧௭௫) என்ற சூத்திரங்களானுணர்க. இவற்றுள் "முந்நீர்வழக்கம்" என்பதற்கு, 'பொருட்பிரிவுக்காகக் கடலிலே மரக்கலத்திற் செல்லுதல் மகடூஉவொடு இல்லை' என்று பொருள் கூறி, எனவே காலிற் (தரையிற்) பிரியுமிடத்துத் தலைவியுடன் சேர்தலுண்டென்று கருத்துக்கூறுவர் ஒருசாரார்.‡ இங்ஙனங் கூறுமிடத்து, பொருட்பிரிவொழிய ஏனைப்பிரிவுகளில் மனைவியருடன்செல்லல்கூடும் என்பது பெறப்படுமென்றும் அவ்வாறு மனைவியருடன் சென்றாக மரபில்லையென்றும், ஆகவே "முந்நீர்வழக்கம்" என்பதற்கு—பெண்ணொடு செல்லத்தகாத 'ஓதல், தூது, பொருள் என்னும் மூன்று நீர்மையான செலவு' என்று பொருள்கொள்ளுதலே ஆசிரியர்கருத்தாமென்றும் நச்சினார்க்கினியர் பொருள்கூறினர். பொருள்வயிற்பிரிவு—கலத்திற்பிரிதல், காலிற்பிரிதல் என இருபகுதிப்படும்; 'கலத்தினுங் காலினுந்தருவனரீட்ட' என்றார் இளங்கோவடிகளும் (சிலப். 2-7). கலத்திற்பிரிவு—வணிகர்க்கும், காலிற்பிரிவு—மற்றை மூவர்க்குமுரியவென்பது "இருவகைப்பிரிவும்" (௧௧) என்ற சூத்திரவுரைநோக்கி உணர்க. தலைமக்களையன்றி, அவர்க்கடிமையானவர் ஏவல்செய்வோர் இவர்களைப்பாடுமிடத்துப் பெண்ணொடுசென்றாகக் கூறுதலுண்டென்றுங் கூறுவர் (௧௭௬).

* இக்கூற்றாலும், ஆயர், மறவர், கிழார், பரதவர், வேட்டுவர் என்ற ஐந்திணைமக்களும் தனித்தமிழரே என்பது விளங்கும்.

† நாட்டுக்கோட்டைவணிகருள், பொருட்பிரிவிடை மகளிரை உடனழைத்துச்செல்வது, பெரிதுந் தடுக்கப்பட்டிருத்தல் ஒப்பிடற்பாலது.

‡ தொல்-அகத்-37-இளம்.

இனி "வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது" (கஅஅ) என்று ஆசிரியர் கூறுதலால், கல்வியின்பொருட்டுப் பிரியும் பிரிவு, மூன்றாண்டிக்கு மேற்படக்கூடாதென்பது, பழையவிதி என்பது தெரியலாம். நச்சினார்க்கினியர், இச்சூத்திரத்துக்குத் தத்துவப்பொருளொன்றை கவித்துக்கொண்டனராயினும், வழிநூல்செய்த நம்பியார்கொள்கைப்படி (அக) மூன்றாண்டென்பதே பொருத்தமாகும். மற்றைப் பகை, தூது, பொருள் பற்றிய பிரிவுகள், ஓராண்டிக்குள்ளாதல்வேண்டுமென்பது விதி (கஅ௯-௯0). வடநூலார், ஓதற்பிரிவுக்கு ஆறாண்டும், அறப்புறங்காவற்கு எட்டாண்டுங் கூறுவர் (மனு. ௯ அத்; ௯-௭௧). இனி, வேட்டைமேற் சேறல், நாடுகாணச்சேறல் முதலிய பிரிவுகளைப் பாலையொழுக்கமாகக் கொண்டு புலனெறிவழக்குஞ்செய்தல்கூடாதென உணர்க (பக். ௪௩). இங்ஙனமாகப் பாலையொழுக்கத்தை ஆசிரியர் பலபடியாகவும் விரித்து, ஏனைய திணைகளினும் சிறப்பாகக் கூறுதலை நோக்குமிடத்து, இவ்வொழுக்கத்தைப்பற்றிய புலனெறிவழக்கமே முற்காலத்து மிக்கிருந்தமை விளங்கும். "பாலை பெருவாவிற்றாய்த் தொகைகளுள் வருமாறுபோல, வாகையும் பெருவாவிற்றாய்வருதலுங் கொள்க" என நச்சினார்க்கினியரும், அகப்பொருள் புறப்பொருள்களிலே அதிகவழக்குப்பெற்ற பகுதிகளைக் குறிப்பிடுதலும் காண்க (பக். ௧௫௭). இப்பிரிவுகளைப்பற்றி ஆசிரியர் கூறிப்போந்த விதிகள் வடநூல்வழக்குப்பெறாமையால், தமிழ்நாட்டார் பண்டைக்காலத்து ஒழுகிவந்த தனி ஒழுக்கங்களாகவே கருதத்தக்கன.

அகப்பாடல்களில் அமைதற்குரிய பொருள்கள்.

இதுகாறும் சிறப்புடைக்காமமாகிய ஐந்திணையின் பகுதிகள், தொல்காப்பியனார்கூறியமுறையே, ஆராயப்பட்டன. இன்பப்பகுதிபற்றி எழுந்த பழைய சான்றோர்பாடல்களிலே, ஐந்திணைவகையாகிய முதல் கரு உரிப்பொருள்கள் விசேடமாக அமைந்திருத்தலை நாம் தவறாமற் காணலாம். இவற்றுள், முதற்பொருளினும் கருப்பொருளும், கருப்பொருளினும் உரிப்பொருளும் சிறப்புடையனவாகும்; அஃதாவது, அகப்பொருள்பற்றிய பாடல்களில் உரிப்பொருளாகிய புணர்தல் பிரிதல் முதலிய ஒழுக்கங்கள் இல்லாமற் பாடப்படுமாயின், அப்பாட்டுப் பொருட்பயனற்றதாகக் கருதப்படுமென்றும், அதற்கடுத்துக் கருப்பொருள் சிறந்ததென்றும், மூன்றுபொருள்களுமே ஒருபாடலுள் அமைத்துப் பாடப்படுமேல், அது விளக்கமுற்றுத் திகழுமென்றும் உணர்க. ஆனாற் செய்யுள்

வழக்கிலன்றி உலகவழக்கிலாயின், மேற்கூறியபடியல்லாது தனியாகவும் வருமென்பர். உதாரணமாக அடியில் வரும் வெண்பாவைக் காண்க.

"முல்லை நறுமல ரூதி யிருந்தும்பி
செல்சார் வுடையார்க் கினியவாய்—நல்லாய்மற்
றியாருமில் நெஞ்சினே மாகி யுறைவேமை
யீரு மிருண்மாலை வந்து"—(ஐந்திணையைம்பது-க).

இது, பருவங்கண்டுவருந்திய கிழத்திக்குத் தோழிகூறியது. இதன் கருத்து—"வண்டுகள் முல்லைமலரை ஊதும்படி இருண்டுவரும் இம்மாலைக்காலமானது, கணவரைக்கூடிய மகளிர்க்கு இன்பஞ்செய்வதாயினும், அவரைப் பிரிந்துறைகின்ற நமக்குத் துன்பந்தருகின்றது" என்பதாம். இப்பாட்டுள், கணவனைப்பிரிந்து தலைவி தனித்துறைதல் கூறப்படுதலால் முல்லைத்திணையின் உரிப்பொருளும், முல்லைப்பூ என அதன் கருப்பொருளும், மாலைப்பொழுது என அதன் முதற்பொருளும் வந்து, அகப்பொருள்வழக்கை அழகுபடுத்தியவாறு காண்க. இங்ஙனமே, நற்றிணைமுதலிய அகப்பாடல்களெல்லாம் ஆராய்ந்து கொள்ளற்பாலன. இவ்வாறு, முதல் கரு உரிப்பொருட்பகுதியுடைய முல்லை குறிஞ்சி முதலிய ஐந்திணைவிகற்பங்களே, அகத்திணையிற் கூறப்பட்ட பொருள்களாகும். ஆகவே, களவு கற்பென்ற கைகோளிரண்டும் இவ்வைந்திணையிடமே நிகழ்வன என்றுணர்க. "அளவி லின்பத் தைந்திணை மருங்கிற்-களவுகற் பெனவிரு கைகோள் வழங்கும்" என்றார் நம்பியாரும்.

## (3) பெருந்திணை.

பெருந்திணை என்பது பொருந்தாக் காமம். அஃதாவது, ஒருவன் ஒருத்தியிடம் கழிகாமத்தனாகி அவளை அடையப்பெறாது, மடலேறுதல் வரைபாய்தல் முதலியவற்றால் தன்னை மாய்த்துக்கொள்ள முயலுதலும், தனக்கு இளையளாகாது ஒப்பும் மூப்புமுடைய பருவத்தாளைக் கூடுதலும், காமமிகுதியானே ஒருத்தியை எதிர்ப்பட்டு அவளை வலிதிற் புணர்தலும் ஆகும் (ஙக). அன்றியும், தலைவனது பருவமுதிர்ச்சியி னிகழ்ச்சிகளும், இருவரும் முதிர்ந்தபருவத்திற் றுறவாது காமநுகர்தலும், நம்பியகப்பொருளில் "அகன்றுழிக்கலங்கல்" (உசஅ) முதலாகக் கூறப்பட்டனவும் இப் பெருந்திணைப்பாற்படுவன.]

மடலேறல். இப்பெருந்திணைவகையில், மடலேறுதலும் ஒன்றென்பது, "ஏறியமடற்றிறம்" என ஆசிரியர் கூறுதலால் வெளியாம். இது, பழைய புலவரால் புலனெறிவழக்கஞ்செய்யப்பெற்ற பண்டைத் தமிழ்வழக்கங்களுள் ஒன்றாகும். பிற்காலத்தாரும் "மடல்" என்ற ஒருவகைப்பிரபந்தம் கூறுவர் (தொல்-பக்-௪௩௨). அவருள், தஞ்சைவாணன்கோவையுரைகாரர், இம் மடற்செய்திபற்றிக் கூறியவை இங்குக் குறிப்பிடத்தக்கன:-

"மடலேறலாவது, தலைவன் ஒவ்வாக்காமத்தால், பனங்கருக்காற் குதிரையும் பனந்தருவிலுள்ளனவற்றால் வண்டில் முதலானவுஞ் செய்து, அக்குதிரையின்மேலேறுவது; மடலேறுவான் திகம்பரனாய் உடலெங்கும் நீறுபூசி, கிழி ஒவியர் கைப்படாமற் றானே தீட்டி, கிழியின் தலைப்புறத்தில் அவள் பெயரை வரைந்து கைப்பிடித்து, ஊர்நடுவே நாற்சந்தியில் ஆகார நித்திரையின்றி அக்கிழிமேற் பார்வையுஞ் சிந்தையு மிருத்தி, வேட்கையயத்தனாய் வேறுணர்வின்றி குளிரினும் அழன்மேற்படினும் அறிதலின்றி மழை வெயில் காற்றால் மயங்கா திருப்புழி, அவ்வூரிலுள்ளார்பலருங் கூடிவந்து 'நீ மடலேறுதியோ? அவளைத் தருதும், சோதனை தருதியோ' என்றவழி இயைந்தானுயின் அரசனுக்கு அறிவித்து, அவனேவலால் அவனிலைநோக்கி நையத்தந்து 'மடலேறு' என்றவழி, ஏறு முறைமையாவது—பூளைப்பூ எலும்பு எருக்கு இவைகளாற் கட்டிய மாலையணிந்துகொண்டு அம்மாவில் ஏற அவ்வடத்தை வீதியில் ஈர்த்தலும் அதனுருளை உருண்டோடும்போது, பனங்கருக்கு அறுத்தவிடமெல்லாம் இரத்தந்தோன்றாது வீரியந் தோன்றின் அப்போது அவளை அலங்கரித்துக் கொடுப்பது. இரத்தங்கண்டுழி அவனைக் கொலைசெய்துவிடுவது. இவை புலவர் நாட்டிய வழக்கென்றுணர்க" (பக்-அக)

எனக் காண்க.

இவ்வாறு தஞ்சைவாணன்கோவையுரைகாரர் கூறிய வருணனைப்படியே மடலேற்றத்துக்குப் பழைய மேற்கோள் காண்டல் அரிதாயினும்,

"கழிகின்ற வென்னையு நின்றநின் கார்மயி றன்னையும்யான்
கிழியொன்ற நாடி யெழுதிக்கைக் கொண்டு" (திருக்கோ, எ௪)

"நாண சாந்து மெருக்கு மணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்சின மாவென வேறுவர் சீறூர்ப் பனைமடலே" (ஷை. எ௫)

"விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடல்
மணியணி பெருந்தார் மார்பிற் பூட்டி
வெள்ளென் பணிந்து பிறரெள்ளத் தோன்றி

ஒருநாள் மருங்கிற் பெருநலம் வாய்த்த
தெருவி னியலவுந் தருவது கொல்லோ" (குறுந்-௧௮௨)

என்பன முதலியவற்றால், அவற்றுட் சிலபகுதி முன்னூல்வழக்குப் பெறுதல் காணலாம். கலித்தொகையுள் நெய்தற்கலி ௱௩௮, ௱௩௯, ௱௪௧-ம் பாடல்களிலும், குறுந்தொகை ௧௪, ௧௭, ௧௭௩, ௧௮௨-ம் பாடல்களிலும், இம் மடலேற்றத்தின்வரலாறு நன்கு விளக்கப்பட்டிருத்தலும் காணலாம். ஆழ்வார்களில் ஒருவரான திருமங்கைமன்னன் அருளிய திருமடல்களுக்கு மணிப்பிரவாளநடையில் வியாக்யானம் எழுதிய போராசிரியரான ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை, இம்மடலேற்றத்தின் கருத்தைச் சுருக்கி, "மடலேறுகைதான், உண்ணாதே குளியாதே உகந்தவிஷயத்தை ஒரு படத்திலே விஹித்து (எழுதி) அதனைக்கொண்டு திரிகையும், அற விளைந்தால் அதன்காற்கிடையிலே விழுகையும், விழுந்தால் அங்ஙனே செல்லரிக்கக் கிடக்கையும், அங்ஙனே முடிகையுமாம்; இத்தாற் பிரயோஜனம் என்னெனின்—அவன் (திருமால்) கேட்குமென்கை; இல்லையாகில் இதுதானே பிரயோஜனமாகை"—என்று எழுதியிருத்தல் ஈண்டு அறியத்தகும். இதனால், ஆரியமக்களுள் விரும்பியனபெற இயலாவிடத்து நிகழ்த்தப்படும் பிராயோபவேசம்* போல, இம்மடலேற்றமும் தமிழ்நாட்டார் முன்னாளில் வழங்கிவந்த தற்கொலைமுறைவகை என்பதும்,† அதற்கு 'மடல்மா' ஒரு கருவியென்பதும் தெரியலாம். ஆயின் இம்முறை தான் விரும்பிய பெண்ணை அடையப்பெறாதவிடத்துமட்டும் தமிழ்நூல்களில் வழங்குவதன்றி வேறிடத்து நிகழ்வதாகக் கூறப்பட்டிலது. இங்ஙனம் மடலூருமுறை ஆடவர்மட்டும் செய்தற்குரியதன்றிப்

* 'வடக்கிருத்தல்' எனத் தமிழ்நூல்கள் கூறுவது இம்முறையேயாம். (புறநானூறு பார்க்க)

† நீலகிரிமலைவாணரில் படகர் (Badagar) என்ற சாதியாரில், இளைஞனொருவன், தான் காதலுற்ற பெண்ணை அடையக்கூடாமல் நேருமாயின், 'அவளை எவ்விதத்தும் அடைவேன். இன்றேல், தற்கொலைபுரிந்துகொள்வேன்' என்று சபதஞ்செய்து அதனைப் பலர்க்கும் அறிவித்து முயல்வதும், அம்முயற்சியில் அவன் பெரும்பான்மை வெற்றியே பெறுவதும் இன்றும் வழக்கமென்பர் (E. Thurston's Ethnographic Notes in S. India. Page 21). மடலேற்றம்போலவே 'வரைபாய்' தலையும் அத்தகைய தற்கொலைமுறையாக உரைகள் கூறுதலும் அறியத்தக்கது.

பெண்கள் எத்திணையிலும் செய்யத்தக்கதன்றென்றும், அதனால், பெண் மடல்பற்றிப் புலனெறிவழக்குஞ்செய்யக்கூடாதென்றும் தொல்காப்பியர் விதிப்பர் (௩௫).

"கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்"

என வள்ளுவனாரும் இவ்விதியைக் குறிப்பித்தல் காணலாம். ஆயின், திருமங்கைமன்னன் தாமருளிய மடல்களிலே, பெண்ணொருத்தி திருமாலைக் காமுற்று மடலூர்வதாகப் பாடினாராதலால், அதற்குப் போக்கென்னை எனின்;—அப்பெண், மடல் ஏறியதாகக் கூறாது ஏறுவேனென்ற துணையேயாதலின், இது பெருந்திணைக்குரிய மடலேற்றமாகாது கைக்கிளையின்பாற்படுமென்று கூறுவர் (சூத்-௩௫)* பன்னிருபாட்டியலுடையார், மகளிர் மடலேறாரென்றும், ஆனால் கடவுளரைத் தலைவராகவைத்துப் பாடுமிடத்து அவர் மடலேறுவதாகக் கூறப்படுமென்றும் இம்மடற் கிலக்கணங்கூறுவர். இதனை,

"மடன்மாப் பெண்டிர் ஏறார் ஏறுவர்
கடவுளர் தலைவ ராய்வருங் காலே"
"கடவுளர் மேற்றே காரிகை மடலே" (௨௪௧—௧).

என்பவற்றால் அறிக. இதனாற் பெண்ணொருத்தி ஏறுவதாக ஆழ்வார் பாடியது, பிற்பட்ட இலக்கணமுறைக்குப் பொருந்துவதென்னலாம். மகளிர்க்கு மடலேறும்வழக்கில்லை என்பதை, ஆழ்வாரே பெரியதிருமடலில்,

"... ... ... காமத்தின்
மன்னும் வழிமுறையே நிற்றுமா மானேக்கின்
அன்ன நடையா ரலரேச வாடவர்மேல்
மன்னு மடலூரா ரென்பதோர் வாசகமுந்
தென்னுரையிற் கேட்டறிவ துண்டதனை யாந்தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம்"

எனப் பெண்ணின்கூற்றில்வைத்து அருளிச்செய்தலும் ஈண்டு நோக்கற்பாலது.

* "மனவிருள் ஞாயிறே காட்டாய்நீ யாயிற்-பனியின்ற மாலைக் கவன் வரக் காமன்-கணையிரப்பேன் கால்புல்லிக் கொண்டு" (147-58-60) எனக் கலித்தொகையில் வரும் பெண்பான்மடற்கும் இதுவே கொள்க.

பெருந்திணையின் மற்றைப்பகுதிகள்.

இனி, ஆரியமணங்களுள், பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் என்ற நான்கும் இப்பெருந்திணைப்பாற்படுமென்பது "பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே" (௧௦௫) என்னும் ஆசிரியர்கூற்றால் அறியப்படுகின்றது. இவற்றை இங்ஙனம் கூறியதற்கு, நச்சினார்க்கினியர்—"இந்நான்கும் ஒருதலைக்காமம்பற்றி நிகழாமையானும், ஒருவனோடு ஒருத்தியை எதிர்நிறுவி, அவருடம்பாட்டோடு புணர்க்குங் கந்தருவம் அன்மையானும், அவற்றின் வேறாகிய பெருந்திணையாம்" என்று காரணங் கூறுவர்.* இப்பெருந்திணையும், முதலிற் கூறிய ஒருதலைக்காமமாகிய கைக்கிளையும்—ஐந்திணையாகிய இன்பவொழுக்கம்போலச்—சிறப்புடையனவாகக் கொள்ளப்படில வேனும் அகப்பொருட்கு உறுப்பாகக்கொண்டு ஆசிரியராற் றழுவப்பட்டன (பக். ௧௭௭.). பேராசிரியர் இவற்றை அகத்தைச்சார்ந்த புறம் என்பர் (திருக்கோ. ௪ உரை). நம்பியாரும் இக் கைக்கிளை பெருந்திணைகளை அகமென்று பகுத்துக் கூறுதல் காண்க (௨௪௩). இனி, ஐந்திணைக்கும் நிலமும் பொழுதும் மக்களும் வகுத்தாற்போல, இக் கைக்கிளை பெருந்திணைகட்குங் கூறாது, எல்லாநிலமுங் காலமும் இவற்றுக்கு வழங்குமென்றும் (௧௩—௧௭), பிறர்க்கு அடிமைகளாயுள்ளாரையும், ஏவல்செய்வாரையும் தலைமக்களாகவைத்துப் பாடுமிடத்து, அது சிறப்புடைக் காமத்திற் சேராமைபால், இக் கைக்கிளை பெருந்திணைகளைச் சார்ந்தனவாகக்கொள்ளப்படுமென்றும் தொல்காப்பியனார் கூறுவர் (௨௩). ஈண்டு "அடியோர் பாங்கினும் வினைவல பாங்கினும்" என்று ஆசிரியர் ஆளுதலால், அவர்காலத்து அடிமைவழக்கம் நாட்டிலிருந்தமை பெறப்படுகின்றது. ஏவலாளரை "வினைவலபாங்கு" என வேறுபிரித்தலின்,

* "பெருந்திணை, நடுவணைந்திணையாகிய ஒத்தகாமத்தின் மிக்குங் குறைந்தும் வருதலானும், எண்வகைமணத்தினும் பிரமம் பிராசாபத்தியம் ஆரிடம் தெய்வமென்பன அத்திணைப்பாற்படுதலானும், இந்நான்குமணமும் மேன்மக்கண்மாட்டு நிகழ்தலானும், இவை உலகினுட் பெருவழக்கெனப் பயின்றுவருதலானும் அது பெருந்திணை எனக் கூறப்பட்டது" என்பர் இளம்பூரணர் (தொல். அகத். 1. உரை.)

'அடியோர்' என்பது விற்றுக்கொள்ளற்குரிய அடிமைகளையே குறிப்ப தாதல்வேண்டும்.*

அகப்பொருட் பாடற்குரிய நியமங்கள். இனி, மேலே கூறிப்போந்த எழுதிணைகளையும்பற்றிப் பாடுங்காற் கவனித்தற்குரிய வழக்குகள் சிலவும் ஆசிரியர் கூறுகின்றார். ஐந்திணைபற்றிப் பாடும் பாடல்களில், தலைமக்கள்பெயரைவைத்துக் கூறுமிடத்து, திணைப்பெயர்களாக முன்குறித்த—வெற்பன், துறைவன், கொடிச்சி, கிழத்தி என்ற பொதுப்பெயர்களாற் கூறவேண்டுமேயன்றி, அத்தலைமக்களுடைய இயற்பெயரைச் சுட்டிக் கூறிச் செய்யுள்செய்தல் கூடாதென்றும், இயற்பெயரைச் சுட்டிக்கூறின் அஃது அகமாகாது புறமாம் என்றும், ஏனைக் கைக்கிளை பெருந்திணைகள் சுட்டி யொருவர்பெயர்கொண்டும் கொள்ளாதும் வருமென்றும் ஆசிரியரால் விதிக்கப்படுகின்றன. இவ்வாறு அகப்பொருட்கு உரியனாகிய தலைவன்பெயரைத் திணைப்பெயரால் கூறல் வேண்டுமென்ற நியதிப்படியே, அகத்தைச் சார்ந்த நற்றிணை குறுந்

* "குற்றிளையோரும் அடியோர்பாங்கும் ஆயமும்" (சிலப். 6, 84-5) என இளங்கோவடிகளும், எவல்கேட்போரினின்றும் இவ்வடிமைகளை வேறு பிரித்துக் கூறுதல் காண்க. "மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க், கடிமை புகுத்தி விடும்" (608), "எற்றுக் குரியர் கயவரொன் றுற்றக்கால், விற்றற் குரியர் விரைந்து" (1080) என வள்ளுவனாரும் அடிமைவழக்கு தங்காலத்திருந்த செய்தியைக் குறிப்பிடுதல் அறியத்தக்கது. கயவர் தம்மை விற்றுக்கொள்ளலாவது பிறர்க்கு அடிமைபுகுதலாம். "ஒப்புரவி னல்வருங் கேடெனி னஃதொருவன், விற்றுக்கோட் டக்க துடைத்து" (குறள் 220) என்பதும் இவ்வழக்குப்பற்றி எழுந்ததே என்க. பிறற்கு அடிமைபுகுந்ததன் குறியாக ஆள்பவனது இலச்சினையை அடியான் தன் மார்பினுந் தோளினும் பொறித்துக்கொள்ளுதல் பண்டைமரபு. இதனை—"மார்பிற பொறியொற்றிக் கொண்டான்வல்" (கலித்தொகை, 84) என முன்னோரும், "மேவலர் மார்பினுந் திண்டோளினுஞ்...சேவெழுதும் பெருமான்" (தமிழ்நாவலர்சரிதை, 148) எனப் பின்னோரும் கூறுதலான் அறிக. அடிமையாக்குதல் என்ற பொருளில் 'மார்வெழுத்தாக்கல்' என்ற பழந்தொடர் வழங்குதலும் ஈண்டு அறியத்தகும் (திருவாய்மொழியீடு, 5, 10, பிர.). இறைவனையும் அவன் பத்தர்களையும், ஆண்டவன் அடியார் என்று வழங்குவனவும், கடவுளிலச்சினையை அவ்வடியார் பொறித்துக்கொள்வதும் மேற்குறித்த உலகவழக்குப் போன்றதே என்க. இனி றும் இதனை விரிப்பிற் பெருகும்.

தொகை கலித்தொகை முதலாய பண்டைநூல்களும், பிற்காலத்துக் கோவைகளும் அமைந்திருத்தல் காணலாம். ஆயின், முன்னூல்களினும் பின்னூல்களினும் அரசரியற்பெயர்முதலியன கூறப்படுகின்றனவே எனின்—கூறுவேம்; அகப்பாடல்களில் இரண்டுவகைப்பெயர்கள் வழங்குவன; அவை, பாட்டுடைத்தலைவன்பெயரும் உரிப்பொருட்டலைவன்பெயருமாம். பாட்டுடைத்தலைவனைக் கோவைத்தலைவன் என்றும்,* உரிப்பொருட்டலைவனைக் கிளவித்தலைவன் என்றும் கூறுதலுமுண்டு. உதாரணமாக,—

"ஆய்கின்ற தீந்தமிழ் வேந்த னரிகே சரியணிவான்
தோய்கின்ற முத்தக் குடைமன்னன கொல்லியஞ் சூழ்பொழில்வாய்
ஏய்கின்ற வாயத் திணையோ ரிளங்கொடி கண்டெனுள்ளம்
தேய்கின்ற தென்ப தழகிய தன்றே சிலம்பனுக்கே"

(இறை. களவி. பாண்டிக்கோவை மேற்கோள்)

என்ற பாட்டில், "'தமிழ்வேந்தனாகிய அரிகேசரியின் கொல்லிமலைச் சோலையில் ஓரிளங்கொடிபோன்ற பெண்ணைக் கண்டு என்னெஞ்சம் வருந்துகின்றது' என்று சொல்வது சிலம்பனுக்கு அழகியதோ" எனப் பாங்கன், தலைமகன்கவற்சிகேட்டு மொழிந்ததாகக் கூறப்பட்டுளது. இதனுள், அரிகேசரி எனவரும் பாண்டியனியற்பெயர், பாட்டுடைத்தலைவன் அல்லது கோவைத்தலைவன் பெயர் என்று சொல்லப்படும். என்னை? அவ் வரிகேசரியே, ஒருபெண்ணைக் கண்டுவருந்தியதாகக் கூறாது, 'அவனது சோலையில் உள்ள பெண்'—என, தலைவிக்கு விசேடணமாக்கி ஒருபுலவர் தன்னை அபிமானித்த அரசனைச் சிறப்பித்தலான் என்க. ஆயின் அப்பெண்ணைக்கண்டு வருந்தியவன் சிலம்பன் எனத் திணைப்பெயரால் வேறு கூறப்படுகின்றான். இஃது உரிப்பொருட்டலைவன், அல்லது கிளவித்தலைவன பெயர் என்று வழங்கப்படும். இனிப் பாட்டுடைத்தலைவனாகிய பாண்டியனையே உரிப்பொருட்டலைவனாகவைத்துச் செய்யுட்செய்யுமிடத்து, அஃது, அகப்பொருட்குரியதாகாது புறப்பொருட்பகுதியாம் என உணர்ந்துகொள்க. இவற்றின் விரிவை அகத்திணையியலின் இறுதிச்சூத்திரத்தும் (௫௫), "மெய்ப்பெயர் மருங்கிற் கூறுதல் வழியே" என்னும் புறத்திணையியற்சூத்திரத்தும் (௮௭) உரைநோக்கி அறியலாகும்.

* 'காயகவாசி' என்பது பிற்காலவழக்கு.

பொருட்குரிய பாக்கள்.

இவ்வாறு விதிக்கப்பட்ட அகப்பொருள்கள், பண்டைக் காலத்தே, எல்லாப்பாக்களிலும் அமைத்துப் பாடப்பட்ட தாகத் தெரிந்திலது. என்னை? இப்புலனெறிவழக்கம் கலிப்பா பரிபாடல் என்ற இரண்டுவகைச்செய்யுள்களுக்கே உரிய தென்று ஆசிரியர் நியமித்தலான் என்க; இதனை,

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட் டாயிரு மருங்கினும்
உரிய தாகு மென்மனார் புலவர்"

என்ற சூத்திரநோக்கி உணர்க. *பரிபாடல் இன்பப்பகுதிபற்றியே பாடப்பட்டதென்பது செய்யுளியலில், "காமங் கண்ணிய நிலைமைத் தாகும்" எனப்படுதலாலும் உணரப்படும் (௪௩௩). இதனால் ஆசிரியர் காலத்தே எல்லாப்பாக்களிலும் அகப்பொருள் அதிகமாக வழங்காமை தெரியலாம். ஆனால், தொல்காப்பியர்க்குப் பிற்பட்டு இவ்வரையறை யில்லாமற்போயிற்றென்பது, கடைச்சங்கத்து நூல்களிற் கலித்தொகை நீங்க ஒழிந்தனவும் பிற்பட்ட நூல்களும், ஆசிரியம் வெண்பா வஞ்சிப் பாக்களில் அமைக்கப்பட்டிருத்தலால் உணரப்படுகிறது. நச்சினார்க் கினியர், இப்பாக்கள் அகம் புற மிரண்டற்கும் பொதுவாம் என்று பிற்காலத்து சேர்ந்த மாறுபாட்டை உரையிற்கொண்டு அமைப்பர்.

மேற்கூறிப்போந்தவாற்றால், பண்டைத்தமிழ்மக்கள் புலனெறி வழக்கஞ்செய்தற்குப் பகுத்துக்கொண்ட கைக்கிளை ஐந்திணை பெருந் திணை என்ற காமப்பகுதிகளின் வரலாறுகள் நன்கு வெளியாகும். இவ் வெழுதிணைபற்றியும் கூறற்குரிய வேறுசில விதிகளும் உள்ளனவேனும், சிறப்பாகத் தெரிந்துகொள்ளத்தகும் பொதுவிதிகள், முற்கூறியனவே. ஏனையவற்றில், ஏற்பனவற்றை உரிய இடங்களில்வைத்து உணர்த்துவேம். இனி, இவ் வெழுதிணைப் பொதுவிதிகட்கெல்லாம் மேற்கோட் செய்யுட்கள் எழுதுவதாயின், இவ்வாராய்ச்சி பெருகிவிடுமென்றஞ்சி உரைநோக்கி உணருமாறு விடப்பட்டன.

---

* இப்போது, இந்நூலிற் கிடைத்த பாடல்கள், பரிமேலழகர் உரையுடன் மகாமகோபாத்தியாய ஐயரவர்களால் அச்சிடப்பட்டுள்ளன.

## தொல்காப்பியப் பொருளதிகார ஆராய்ச்சி.

அகப்பொருளின் பெருமை.

இவ் வெழுதிணைகளையும் பற்றிப் புலவர்கள் பாடிவந்த வழக்கம் தொல்காப்பியனார்க்குமுற்பட்ட காலத்தே பெருகிவழங்கியதாகல்வேண்டுமென்பது 'முந்து நூல் கண்டு முறைப்பட வெண்ணிப் புலந்தொகுத்தோன்' என இவ்வாசிரியரைப் பாயிரங்கூறுதலால் அறியலாகும். அங்ஙனமே தொல்காப்பியர்க்குப் பிற் காலத்தும் அவரிட்ட ஆணைவழியே நூல்கள் பாடப்பட்டுப் பெருகியிருந் தன.

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியே அகம்புறமென்
றித்திறத்த எட்டுத் தொகை"

என்று எண்ணப்பட்ட பழைய தொகைநூல்க ளெட்டனுள், புறம் பதிற்றுப்பத் தொழிந்தனவும், பதினெண்கீழ்க்கணக்குநூல்களிற் பலவும், பத்துப்பாட்டிற் சிலவும்—இவ்வகத்திணைபற்றி அமைந்தனவே யாம். இவை பெரும்பான்மை குறிஞ்சி முல்லை பாலை மருதம் நெய்தல் என்னும் ஐந்திணையும்—அத்திணைமுறையாக அன்றி வேறு திணைமுறையாகவைத்துக்கூறுவன. நச்சினார்க்கினியரும், "தொகை நூல்களிலும் கீழ்க்கணக்கிலும் இம்முறை மயங்கிவரக் கோத்தவாறு உணர்க" என்பர் (பக்.௧௦). இவற்றுள் நற்றிணைமுதலிய தொகைநூல் கள், ஒருவரானன்றிப் புலவர்பலராற் பாடப்பட்டனவாம். அஃதாவது-ஒவ்வொருகாலத்து ஒவ்வொரு திணை துறைவிகற்பத்தைப்பற்றிப் புலவர் பாடிப்போந்த செய்யுட்கள், பிற்காலத்தவரொருவரால் தொகுக்கப்பெற்று முறைப்படி கோக்கப்பட்டன என்பதாம். இங்ஙனம் அகப்பொருளைப் பொருளாகக்கொண்டு, தம்மை யபிமானித்த அரசர் முதலியவரைப் பாட்டுடைத்தலைவராக்கிப் பாடும் வழக்கு முன்னாளிற் றமிழ்மக்களாற் பெரிதும் மதிக்கப்பட்டுவந்தது. ஒவ்வொருதிணையின் முதல் கரு வுரிப்பொருள்களின் இயற்கைச்சிறப்புக்களை யெடுத்துவிளக்கி அழ காகப் பாடிவந்த அருமைபற்றிப் பண்டைப் புலவர்கள், பாலைபாடிய பெருங்கடுங்கோ, பாலைக் கௌதமனார், மருத னிளநாகனார், நெய்தற் கார்க்கியன், வெறிபாடிய காமக்கணியார், மடல்பாடிய மாதங்கீரன் என் றிவ்வாறு அத்திணை துறைப் பெயர்களாற் சிறப்பித்து வழங்கப்படுவா ராயினர், அன்றியும், பண்டைநாளில் அகப்பொருளிலக்கணங்களை

அறிந்திராமை, புலமைக்கே பெரியதோர் இழுக்காக முன்னோரால் கருதப்பட்டுவந்தது. கடைச்சங்ககாலத்தே பொருளிலக்கணமறிந்தபுலவர் கிடையாமற் பாண்டியன் புடைபடக் கவன்றபோது "என்னை? எழுத்துஞ் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே? பொருளதிகாரம் பெறேமே எனின் இவைபெற்றும் பெற்றிலேம்" என அவ்வரசன் கூறினனென்றும், அக்காலத்தே இறையனாரே முன்னின்று அவன் கவற்சிநீங்கப் பொருளிலக்கணமொன்றை அருளிச்செய்ய, அதற்குப் புலவரைக்கொண்டு அப்பாண்டியன் பொருள் கண்டனனென்றும் கேட்கப்படுஞ்செய்தி, பொருளாராய்ச்சியில் முன்னோர்க்கிருந்த ஊக்கமிகுதியைப் புலப்படுத்தும். இவையன்றி, பண்டைப்புலவர் தம் மனோதர்மங்களையும் கற்பனாசக்தியையும் வெளிப்படுத்தற்கு அகத்திணைத் துறைகளையே ஏற்ற நிலைக்களமாகக்கொண்டு, முற்கூறிய முத லுரி கருப்பொருள்களின் இயற்கைநலங்களெல்லாம் விளங்கும்படி பாடிவந்தமையால், தமிழ்ச்சுவை யறியாத வேற்றுமக்கட்குங்கூட, அம்மொழியிற் சுவையுண்டாம்படி அத்துறைகள் அமைந்து விளங்கின. ஆரியவரசனாகிய பிரகத்தனைத்* தமிழறிவுறுத்தவேண்டிக் கபிலரென்னும் நல்லிசைப்புலவர் அவனுக்குப் பாடிக்காட்டியது "குறிஞ்சிப்பாட்டு" என்பது. இது, தலைவியின் வேற்றுமைகண்டுவருந்திய செவிலிக்குப் பாங்கி அறத்தொடுநிற்கும்விகற்பத்தை அற்புதமாகக் கூறுவதாம். "சமயக்கணக்கர்மதிவழிகூறாது, உலகியல் கூறிப் பொருளிது வென்ற" தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும் தாம் கூறப்புக்க காமத்துப்பாலைக் களவு கற்பெனப் பகுத்து அவற்றின் விகற்பங்களைத் தமிழ்நூல்களோடும்† பொருந்தக் கூறிச்செல்வரெனின், அக்காலத்தே

---

* "ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தன்" என்பவன் இயற்றிய செய்யுளொன்று குறுந்தொகையுள் (கஅச) வருகின்றது.

† காமத்துப்பாலைப் பெரும்பான்மை வடநூல்வழக்குப்பற்றியும் சிறுபான்மை தமிழ்வழக்குப்பற்றியும் வள்ளுவனார்கூறினர் என்பதே பரிமேலழகர்கருத்து. ஆயினும், மற்றொருசார் உரையாசிரியர் தமிழ்வழக்கேபற்றி அக்காமப்பகுதி ஓதப்பட்டதென்று கூறுவர்; அஃதாவது, குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தல் என்ற ஐந்திணையும், முதல் கரு வுரிப்பொருள்களுள், பெரும்பான்மை உரிப்பொருள்பற்றி-திணையொன்றற்கு ஐந்ததிகாரமாக-இருபத்தைந்ததிகாரங்களாற் காமத்துப்பால் கூறப்பட்டது என்பதாம். (1910-ம் வருஷம் என்னாற் பதிப்பிக்கப்பட்ட திருக்குறட் பரிமேலழகருரைப் (பாக்கெட் ஸைஸ்) பதிப்பினுள், திரு[illegible]பற்றிய குறிப்பு கூ ம் பக்கம் பார்க்க)

இவ்வகப்பொருட் கிருந்த சிறப்பியல்பு வெளிப்படையன்றோ. இம்மட்டோ! உத்தம அன்பை வெளிப்படுத்தற்கு இவ்வகத்துறைகளினும் உயர்ந்தஇடம் பிறிதின்மையால், முழுமுதற்கடவுளிடத்துப் பேரன்பு செலுத்தி ஆடிப்பாடி யகங்கரைந்த அடியார்களுங்கூட, அக்கடவுளையும் தம்மையும் நாயக நாயகியர்களாகக்கொண்டு இவ்வகத்துறைகள்வாயிலாகவே பத்தியென்னும் பெருவெள்ளத்தி விழ்ந்து முழுகி ஆனந்திப்பாராயினர். கடவுளரிடத்துச் செலுத்துங் காமப்பகுதியைப் புறத்திணைக்குரியதாக ஆசிரியர்கள் இலக்கணம் வகுத்தனராயினும் அதன் பொருட்கூறுகளெல்லாம் அகத்திணைத்தொடர்புடையனவாகவே அமைந்திருத்தல் கண்டுகொள்க. இவ்வாறு அகப்பொருளவாகிய இன்பத்துறைகள் வாயிலாக அடியார்கள் தம் பேரன்பைக் கடவுளரிடத்துப் புலப்படுத்திப்போந்த அருமைபெருமைகளைத் திருவாய்மொழி திருவிருத்தம், முதலாய திவ்யப்பிரபந்தங்களால் நன்கறியலாம். ஆகவே, சிற்றின்பத்துக்கு மட்டுமன்றிப் பேரின்பக்கடலில் இறங்குதற்கும், இவ்வகத்துறைகள் உரிமைபூண்டு திகழ்வன என்பது தெளிவாகும்.

## II. களவியல்.

மேற்கூறிப்போந்தவற்றால், பண்டைத்தமிழ்மக்களது வாழ்க்கை முறையில், களவு கற்பென்ற இரண்டுநிலைகளைப்பற்றிப் புலவர் பாடுதற்கு அமைத்துக்கொண்ட பொதுவிதிகள் விளங்கின. அந்நிலைகளின் வரலாறு இன்னவென்பது, பொதுவாக இவ்வாராய்ச்சித்தொடக்கத்தே சுருக்கிக் கூறப்பட்டதாயினும், அவற்றின் சிறப்பியல்களாக ஆசிரியர்கூறுவனவற்றை இனி விளக்குவேம்.

களவு கற்பென்ற கைகோளிரண்டனுட் களவாவது "பிணி மூப்புக்களின்றி என்ஞான்றும் ஒருதன்மையராய், உருவுந் திருவும் பருவமும் குலனுங் குணமும் அன்பும் முதலியவற்றால் ஒப்புமை யுடையாராய தலைமகனுந் தலைமகளும், பிறர்கொடுப்பவும் அடுப்பவுமின்றி, ஊழ்வகையால் தாமே எதிர்ப்பட்டுக் கூடுவது" பிறர்க்குரியளென்றி இருமுதுகுரவராற் (பெற்றோராற்) கொடை எதிர்தற்குரிய தலைவியை, அவர்கொடுப்பக் கொள்ளாது, இருவருங் காந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்ந்த களவாதலின், இது, பிறர்க்குரியபொருளை மறைத்துகொள்ளுங் களவு போன்ற தன்றென்றும், வேதம் மறை என்று பெயர்பெற்றாற்போல

ஒழுவலன்புயற்றிய இவ்வொழுக்கமும் களவென்று பெயர்பெற்றதென்றும் கூறுவர். இக்களவு, அன்பொடு புணர்ந்ததாதலாற் "காமக்கூட்டம்" எனவும்படும். இஃது, ஆரியரது எண்வகைப்பட்ட மணவகைகளுள் காந்தருவத்தின்பாற்படுமென்பர். காந்தருவமாவது—கந்தர்வகுமாரும் அவர்மகளிரும் தம்முள் எதிர்ப்பட்டு மனமியைந்து கூடுதல்போலத் தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டு மனமியைந்து கூடுவது. இதனை,

"அதிர்ப்பில்லைபம் பூணுரு மாடவருந் தம்மில்
எதிர்ப்பட்டுக் கண்டியைத லென்ப-கதிர்ப்பொன்யாழ்
முந்திருவர் கண்ட முனிவறு தண்காட்சிக்
கந்திருவர் கண்ட கலப்பு"

என்ற வெண்பாவால் உணர்க. இங்ஙனம் தமிழ்மக்களது களவுப்புணர்ச்சியைக் காந்தருவமாகத் தொல்காப்பியனார் கூறினும், தமிழர்க்கு அவ்வொழுக்கம் ஆரியமக்களிடத்திருந்துவந்ததென்பது அவர்கருத்தன்று. இதனைக்,

"காமக் கூட்டங் காணுங் காலை
மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோ ரியல்பே"

என்ற அவர்கூற்றில், 'காமக்கூட்டத்தை ஆராயுமிடத்து, அது யாழோரான கந்தருவரது இயல்புடையதாகும்'என்று ஒற்றுமையில் வேற்றுமை கூறுதலால் உய்த்தறியலாம். ஆகவே "தமிழ்கூறுநல்லுலகத்து வழக்குஞ் செய்யுளுமே" ஆசிரியர் ஓதியனவென்பதும், ஆரியமணம்பற்றிய செய்திகளை அவர் கூறவந்தவரல்லர் என்பதும் உணரத்தக்கன. இவ்வொழுக்கம் தமிழ்வழக்கே என்பதைத் திருத்தக்கதேவரும்,—

"இலைபுறங் கண்ட கண்ணி யின்றமி ழியற்கை யின்பம்"(காமஞ்சரி-க)
"தேவர் பண்ணிய தீந்தொடை யின்சுவை
மேவர் தென்றமிழ் மெய்ப்பொரு ளாதலின்" (பதுமை-கசஉ)

எனச் சிந்தாமணியிற் கூறுதல் காண்க. யாழோர்கூட்டத்துக்கும் இக்காமக்கூட்டத்துக்குமுள்ள வேறுபாட்டை, நச்சினார்க்கினியர், "கந்தருவர்க்குக் கற்பின்றி அமையவும்பெறும், ஈண்டுக் கற்பின்றிக் களவு அமையாது" என்பதனால் விளக்கினர்.

இனித் தமிழ்வழக்காகிய இக்களவுக்கூட்டம் நான்குவகையாக முன்னோராற் கூறப்படுகின்றது. அவை—இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற்கூட்டம்—என்பன. ஆசிரியர் இவ்வகைகளை,

"காமப் புணர்ச்சியு மிடந்தலைப் படலும்
பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென்
றாங்கநால் வகையினு மடைந்த சார்பொடு
மறையென மொழிதன் மறையோ ராறே"

எனச் செய்யுளியலிற் கூறுவர் (௪௯௯). இந்நான்கு பெரும்பிரிவுகளே, பலவிகற்பங்களும் பகுதிகளு முடையனவாக விரிந்து, ஒருகதைபோல வந்து முடிவனவாம். இங்ஙனம் முடியுங் களவுவரலாற்றில், பாத்திரங்களாக நின்று கூற்றுநிகழ்த்தற்குரியார், அறுவர். அவர்—பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி என்பார் (௫௰௨). இவர்களல்லது இக் களவொழுக்கத்தில் வேறெவரும் பேசுதற்குரியவராக விதிக்கப்பட்டிலர். இவர்களுள்,—

(1) பார்ப்பான்—இவன் தலைவனுக்கு இழிவுநேரும் இடங்களிலெல்லாம் நெருங்கி யிடித்து உறுதிகூறுதற்கும், தலைவற்குவரும் தீமைகளை நிமித்தங்களால் அறிந்து விலக்குமுபாயங்களைச் சூழ்தற்கும் உரியன். தலைவியும் தலைவனும் உடன்போம்போது, இவன், அவ்விருவரையும் இடைவழியிற்கண்ட செய்திபற்றிச் செவிலி (தலைமகள் தாயரில் ஒருத்தி) முதலியோரால் உசாவவும், இறுக்கவும் உரியன் என்றுங் கூறுவர்.

(2) பாங்கன்—இவன் தலைவனுக்கு உசாத்துணையாகியவன். இவன் பார்ப்பனக்குலத்தவனே என்று களவியலுரைகாரரும் (பக். ௫௫), 'இவன் பெரும்பான்மை பார்ப்பானும்' (பக். ௨௪௫) என்று நச்சினார்க்கினியரும் கூறுவர். நம்பியார், தலைவற்குப் பார்ப்பானும் சூத்திரனுமாக இருவகைப்பாங்கருளரென்றும், இவ்விருவரும் தலைமகற்குரிய உயிர்த்துணைவராக அவர் தாய்தந்தையரால் அடைக்கலமாகக்கொடுக்கப் பெற்ற உரிமையுடையார் என்றும் வகுத்துரைப்பர். (௧௦௧).

(3) தோழி—இவள் தலைவியின் செவிலித்தாயினுடைய மகள் (௧௨௫). இவள், தலைவிக்கு உசாத்துணையாய் நன்மையுந் தீமையும்

ஆராய்ந்து, அவட்குவரும் துன்பந்தவிர்த்தற்கு உரியள். இவளை நல்லறிவுவாய்ந்தவளாகச் சொல்லுவர் (உகூக).

(4) செவிலி—தலைவியைப்பெற்ற தாய்க்கு உயிர்த்தோழியாய்த் தலைவியின் துக்கநீக்கி நல்லறிவும் ஆசாரமும் பெருக அவளை வளர்த்தவள். இவள், பெற்றவளாகிய நற்றாயினும் தலைவியிடம் பெரிதும் அன்பும் அந்தரங்கமும் உடையளாதலால், இக்களவுவரலாற்றிற்குச் சிறந்தவளாய்த் தாய் என்றே சிறப்பித்துக் கூறப்படுவள் (கஉச).

(5) தலைமகன்—இவ் வகவொழுக்கத்துக்குச் சிறப்புடைய தலைவன். இவன் பதினாறாண்டினனாய்ப் பெருமையு முரனு முடையனாய் உருவு திரு குலம் குணம் அன்பு அறிவு முதலியவற்றால் ஒப்புயர்வற்ற ஓர் உத்தமபுருடன்.

(6) தலைமகள்—இவ் வகவொழுக்கத்துக்குச் சிறப்புடைய தலைவி. இவள் பன்னீராட்டைப்பிராயத்தளாய், அச்ச நாண் மடன்களும் (கூகூ) செறிவு நிறை அறிவு அருமைகளும் (உ0கூ) கொண்டு, உருவு திரு முதலியவற்றால் (உஎஙு) தலைவனோடு ஒத்து விளங்கும் ஓர் உத்தம மாது.

இங்ஙனம் களவுப்பகுதியிற் கூற்றுநிகழ்த்துதற்குரியவர்களைச் சுருக்கமாக உணர்ந்துகொள்க.

இவருள், தலைவன், தலைவி, தோழி, பாங்கன் இந்நால்வரும் ஒருவரையொருவர் அழைத்தற்குரிய உயர்திணைப்பொதுப்பெயர் ஒன்று ஆசிரியர் கூறுவர். அஃது "எல்லா" என்பது. இச்சொல்லால், தலைவியுந் தோழியும் பெரும்பான்மை தலைவனையும், அத்தலைவன் சிறுபான்மை தலைவியையும் பாங்கனையும் அழைத்துக்கொள்வர் (உஉ0). பிற்காலத்து இச்சொல், எலா எல்ல எலுவ எனவும் திரிந்தது.* இனி, அன்னை என்னை என்னும் முறைப்பெயர்களும் இப்புலனெறிவழக்கில் வழங்கும். அன்னை யென்பது தலைவி தோழியையும், தோழி தலைவியையும் அழைக்கும் சொல்லாகவும், என்னை என்பது அவ்விருவருந் தலைவனை விளிக்குஞ்சொல்லாகவும் கொள்வர் (உசகூ).

---

* செந்தமிழ்நாடான பாண்டிநாட்டில் 'எலா' என்று பெண்டிரை அழைத்தல் இன்றுமுள்ள வழக்காம்.

தலைவன் தலைவியர்க்கு முறையே பதினாறும் பன்னிரண்டும் பருவ ஆண்டுகளாகக் கூறப்படுதலை, மெய்ப்பாட்டியலிற் "பிறப்பே குடிமை" (உஎரு) என்ற சூத்திரவுரையிற் காணலாம். இக் களவொழுக்கமானது இரண்டுமாதங்கட்குள் நிகழ்ந்து முடிதற்குரியதென்பது "களவினுட் டவிர்ச்சி வரைவி னீட்டந்—திங்க ளிரண்டி னகமென மொழிப" என்ற களவியற்சூத்திரத்தால் அறியற்பாலது. இதனுரைகாரர், "இதனால், கக-ஆண்டும் கo-திங்களும் புக்க தலைமகளோடும்,* கரு-ஆண்டும் கo-திங்களும் புக்க தலைமகனைப்போலும், புணரவேண்டியது என்பது பெற்றாம்; இவளும் இருதிங்கள் களவொழுக்கத்தே ஒழுகப் பன்னிரண்டாட்டைப் பிராயத்தளாம்; அது மக்கட்பேற்றுக்குக் காலம்: களவொழுக்கத்துக்குப் பொருந்தாதென விலக்கப்பட்டதாம், ஆசிரியர்களான் என்பது. இவனும் இவ்விருதிங்கட் களவொழுக்கம் ஒழுகப் பதினாறாட்டைப் பிராயத்தனும்; அஃது ஆண்மை நிலைபெறுங் காலமாகலாற் களவொழுக்கத்துக்கு விலக்கப்பட்டதாம்" என எழுதுதல் ஈண்டு ஆராயத்தக்கது. "பன்னிரண்டாண்டும் பதினாறாண்டும் பெண்மையும் ஆண்மையும் பிறக்கும் பருவமென்பது வேதத்தின் ஒப்ப முடிந்தமையின், அதுவும் ஒப்பெனவே படும்" என்பர் மெய்ப்பாட்டிய லுரைகாரர் (உஎரு). இனி, ஒருசாரார் இக்களவொழுக்கம் பதினைந்துநாளில் நிகழுமென்றாராயினும், அஃது இக்களவியலுரைகாரரால் மறுக்கப்படுகின்றது (பக். கருஎ).

இனி, மேற்கூறிய பார்ப்பான் முதலிய அறுவரும் இன்னவின்னவாறு கூற்றுநிகழ்த்தற்குரியர் என்று அக்கூற்றுக்களை ஆசிரியர் தனித்தனிச்சூத்திரங்களாற் குறிப்பிடுகின்றார்.† ஆனால், பிற்காலத்து அகப்பொருளிலக்கணம்போல இக்கூற்றுக்களையெல்லாம் முறைப்படிவைத்து அவர் மொழியவில்லை இங்ஙனம் தனித்தனி வைத்துக்காட்டப்பெற்ற கூற்றுக்களைக் கோவைக்கிளவிகள்போலத் துறைப்படுத்திக்கூறுவதற்கு, ஆசிரியர்காலத்து வழங்கிய அகப்பொருண்முறைவைப்பு இன்னதென்பதை விளக்கு மிலக்கியங் கிடையாமையாற் சிறிது தடையாகின்றது.

---

* பேராசிரியரும் இவ்வாறெழுதுவர் (திருக்கோவை, க உரை).

† ஆசிரியர் தம்நூலிற் கூற்றுக்களைத் தனித்தனி கூறும் முறைப்படியே, "செம்பூட்சேயார்கூற்றியல்" என்ற இலக்கணமொன்றும் இருந்ததென்பது, களவியலுரையாற் றெரிகின்றது.

கடைச்சங்கங்களில் அகத்திணைபற்றி எழுந்த நற்றிணைமுதலிய தொகை நூல்கள் பிற்காலத்துக் கோவைகளிற்கண்ட துறைகளையே பெரும்பான்மை கூறினும், அவை கோவைபோலக் காட்சிமுதலாகத் தொடங்கிப் பரத்தையிற்பிரிவிறுதியாகவைத்துக் கூறாது, குறிஞ்சி பாலை என்ற திணைமுறைப்படியே வைத்தோராதலால், ஒருதுறைக்கு மற்றொரு துறை தொடர்பில்லாமலே காணப்படும். இங்ஙனமாகத்—தொல்காப்பியனார் அவ்வவர்கூற்றுக்களைக் கோவைப்படக் கூறுமாற்சென்றதும், பழைய இலக்கியங்களும் அதற்கேற்பக்காணப்படுவதும்நோக்கும்போது, முன்னாளிற் குறிஞ்சி பாலை முல்லை மருதம் நெய்தலென்ற ஐந்திணையில், ஒருமுறைபற்றிப் பாடுதலே பெருவழக்காக இருந்ததென்பது புலப்படுகின்றது. ஆயினும், நுணுகி ஆராயுமிடத்துத் தொல்காப்பியத்தின் அகப்பொருண்முறைவைப்பு இன்னதென்பது விளங்கத் தடையில்லை. இதற்குத் தொல்காப்பியனார்கருத்துக்களையே பெரும்பான்மை தழுவியமைந்த இறையனார்களவியலுரையும், அதனை அடுத்து நாற்கவிராசநம்பியகப்பொருளும் பெரிதும் உபகாரப்படுவனவாகும். இவற்றிற் சிறுபான்மை தொல்காப்பியத்தோடு மாறுபடும் இடங்களும் உண்டேனும், அவை உரிய இடங்களில்வைத்து விளக்கப்பெறும். இனி, இக்களவொழுக்கின் பெரும்பிரிவுகளாக ஆசிரியர்கூறிய இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் தோழியிற்கூட்டங்களை முறையே கூறுவோம்.

## 1. இயற்கைப்புணர்ச்சி.

இயற்கைப்புணர்ச்சியாவது, முற்கூறப்பட்ட இலக்கணம்வாய்ந்த தலைமகனும் தலைமகளும் ஒருபொழிலிடத்தே எதிர்ப்பட்டுத் தெய்வமிடைநிற்பப் பான்மைவழியோடித் தம்முள் ஒத்தகாதலுடையாராய்க் கூடுங் கூட்டம். இக்கூட்டம் நிகழ்வதற்குமுன், ஒருதலைக்காமமாகிய கைக்கிளைப்பகுதிகள் இவர்க்குள்ளே நிகழும். அவை—காட்சி, ஐயம், தெளிதல், தேறல்—என்பன (௫௨). இவற்றுள், காட்சியாவது, இவ்விருவருந் தெய்வவசத்தால் எதிர்ப்பட்டு ஒருவரையொருவர் முதன்முதலாகக் காண்பது. இக்காட்சிக்குப்பின், 'இங்ஙனந்தோன்றாநின்ற மாது திருமகள் முதலாகிய தெய்வமோ, அன்றி—மக்கட்பிறப்பினளோ என்று மயங்கிக் கூறுவது, ஐயமாம். இவ்வையமானது, அதனைத் தெளிதற்குரிய அறிவுவாய்ந்த தலைவன்கண்ணேயல்லது தலைவிகண்ணே நிகழா

தென்றும், தலைவிக்குஐயநிகழின், அச்சமேயன்றிக்காமக்குறிப்புண்டாகா தென்றும் கூறுவர் (கூச உரை). இங்ஙனம் தெய்வமோ என்று ஐயுற்ற தலைமகன், விண்ணவர்க்கன்றி மண்ணவர்க்கேயுரிய குறிகள் சில தலைவியிடம் நிகழ்தல்கொண்டு ஐயம் நீங்குவான். இவ்வையம் நீங்குங் குறிகளாக ஆசிரியர் கூறியவை—"வண்டே இழையே வள்ளி பூவே, கண்ணே யலமரல் இமைப்பே அச்சமென், றன்னவை பிறவு" மாகும் (கூ௫). இவை, வானகத்தனவன்றி, வையகத்தனவாகக் கொள்ளுதல் கவிமரபாகும். [இவற்றுள் இழை—மக்களால் இழைக்கப்பட்ட அணிகலம். வள்ளி—முலையினுந்* தோளினும் எழுதுந் தொய்யிற்கொடி. கண்—வான்கணல்லாத ஊன்கண்.] இவையன்றிக் கால்நிலந்தோய்தல், நிழலிடுதல், வியர்த்தல் முதலியனவும் அம் மக்கட்குறிகள் ஆகும். இவற்றால் 'இவள் மக்களுள்ளாள்' என்று தேறித் துணிந்தபின், தலைமகற்குப்புணர்ச்சிவேட்கையுண்டாகத் தலைவியைக் கூடக் கருதுதலும், அதன்பொருட்டு அவளையுடம்படுத்தற்குத் தலைவன் வாக்கானன்றிக் கண்களாற் குறிப்பித்து உசாவுதலும் நிகழ்வனவாம். நிகழ, அவளும் அஃதறிந்து (கூசு) தன்னுறுவேட்கையை வெளிப்படக்கூறாது (ககஅ) கண்களின் குறிப்பாற் கூறுவள் என உணர்க. இவற்றை,—

"நாட்ட மிரண்டு மறிவுடம் படுத்தற்குக்
கூட்டி யுரைக்குங் குறிப்புரை யாகும்" (கக)

"தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்
எண்ணுங் காலைக் கிழத்திக் கில்லைப்
பிறநீர் மாக்க ளின்றிய வாயிடைப்
பெய்ந்நீர் போலு முணர்விற் றென்ப" (ககஅ)

என ஆசிரியர் கூறுதலா னுணர்க. "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க-ளென்ன பயனு மில" என்றார் வள்ளுவனாரும். இவ்வாறு, தலைவியின் உடம்பாடறிந்து, தலைவன் அவளைக் கூடக் கருதியதும், தலைவிக்குப் "பொறிநுதல்வியர்த்தல்" முதலிய மெய்ப்பாடுகள் நிகழும். [இவற்றை மெய்ப்பாட்டியலில் விரித்துக் கூறுதும்; ஆண்டுக் காண்க] இங்ஙனம், இருவர் குறிப்பும் ஒத்தநிற்றலே உள்ளப்

* தொய்யிற்குழம்பாற் கொடியெழுதலும் காமன்கொடியாகிய கரும்பெழுதலும் மரபு (கலித்தொகை, ககக—கக, கஎ; கஎ௩—கஉ, கங).

புணர்ச்சி என்றும், வழிநிலைக்காட்சி என்றுங் கூறுவர். வேறு வாயில்களின்றித் தாமே தூதுவராக நிகழ்த்தும் (கக௬) இவ்வுள்ளப்புணர்ச்சியே, மெய்யுறுபுணர்ச்சிக்கு நிமித்தமாகும் (கூஎ). இவற்றை,

"உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு புணர்ச்சியுங்
கள்ளப் புணர்ச்சியுங் காதலர்க் குரிய"
"பொருவிறந் தோர்க்குப் பெருமையு மூானும்
நன்னுதற் கச்சமும் நாணமும் மடனும்
மன்னிய குணங்க ளாதலின் முன்னர்
உள்ளப் புணர்ச்சி யுரியதாகும்" (ட௪—ட௫)

என நம்பியாரும் கூறுதல் காண்க.

இங்ஙனம், மெய்யுற்றுக் கூடிய தலைவன், தன்னன்பு தலைவிக்குப் புலப்பட அவளைப் புகழ்ந்து கூறி, 'இனித் தலைமகளுடன் இவ்வாறு நீட்டித்திருப்பின் ஏதமாம்' என்று கருதி, அவளிடத்தினின்று பிரியக் கருதுவான். கருதுமவன், வண்டு நெஞ்சுமுதலியவற்றை முன்னிலையாக்கி அவற்றுக்குத் தன் கழிபெருங்காதல் கூறுவானாக, அக்குறிப் பறிந்து தலைவி கவன்றவிடத்து "நின்னொடுபட்ட தொடர்ச்சி எழுமையும்வருகின்றதொன்றாதலால், இத்தகையநின்னைப் பிரியேன்; பிரியின் ஆற்றேன், அன்றி அறனல்லது செய்தேனுமாவேன்" என்று நயப்பக் கூறித் தலைமகளைத் தேற்றுவன். இங்ஙனம் இவன் கூறுதலின்பயன்-புணர்ச்சியெய்திய தலைவிக்கு "இவன் எவ்விடத்தான்கொல்லோ, இன்னும் இது கூடுங்கொல்லோ, என்பால் இவன் அன்புடையன்கொல்லோ" என்று நிகழ்தற்குரிய ஐயம்நீக்குதலேயாம். இதனால், தலைவி ஐயம் நீங்குமேனும், தலைமகனது பிரிதற்குறிப்பறிந்து அதற்குப் பெரிதும் ஆற்றாது பசந்துகாட்டுவள். காட்ட, மற்றும் அவளை வற்புறுத்த 'வெண்ணி 'என்னுடையபதி, நின்னூர்க்கு மிகவும் அண்ணியது' என்று சொல்லித் தான் அடுத்தடுத்து இங்குவருதல் எளிது என்பதைக் குறிப்பித்துத் தலைவியை ஆற்றுவித்துப் பிரிவன். இங்ஙனம் பிரிதலும் வற்புறுத்தலும் முறையே பிரிவச்சம், வன்புறை என்று கூறப்படும் (புள். உட௫).

இங்ஙனங் கூறித் தலைமகளைத் தேற்றிப் பிரியுந் தலைமகன் அவளைத் தனிப்படத் நிறுத்தி நீங்குமோ எனின், நீங்கான். தலைவியைநோக்கி, 'இனி, நீ முற்பட்டு உன் தோழியரோடு சேர்ந்துகொள்; யான் இவ்வழி

யாகச் சென்று ஆங்குவருவேன்' என்று, அவளை விளையாடுந் தோழியரிடத்து உய்த்து அகன்றுபோய்த் தன்னை அவள் காணாமல் தான் அவளைக் காண்பதோர் அணிமைக்கண் ஒருபொதும்பரில் மறைந்து நின்று, தலைவியின் ஆயக்கூட்டத்தையும் அவ்விடத்தன்மையும் நோக்கி, 'இவளை யான் எய்தினன் என்பது மாயமோ! இனி இவள் நமக்கு எய்தற்கரியள்போலும்' என்று அவளது அருமையறிந்து வருந்தி, ஆண்டு நின்று நீங்குவான். இவ்விடத்தே, தலைவியோடு இணைபிரியாது செல்லுகின்ற அவள்காதற்றோழியைத் தலைவன் குறிப்பாலறிந்து கொள்ளுதலையும் பின்னூல்கள் கூறும். ஆயினும், "பெட்ட வாயில்பெற்றிரவுவலி யுறுத்தலும்" (பக். ௨௪௫) என்று, தோழியிற்கூட்டம் நிகழுமிடத்தேவைத்துத் தொல்காப்பியத்துக் கூறப்பட்டுளது. இவ்வாறே வேறுசில துறைகள் கிளவிக்கோவைகளிற் கூறப்படுவனவுமுள. இன்னோரன்னவெல்லாம் இயற்கைப்புணர்ச்சியாமென்று கொள்க. பேராசிரியர் "காட்சியும் ஐயமும் துணிவும் புணர்ச்சியும் பிரிவச்சமும் வன்புறையுமென்று இன்னோரன்னவெல்லாம் இயற்கைப்புணர்ச்சி என்னும் ஓரிலக்கணத்தான்முடியுமென்பது" என்றெழுதியதுங் கண்டுகொள்க (பக். ௭௫௬). "இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தி னெய்துழி-முயற்சி யின்றி முடிவ தாகும்" என்றார் நம்பியார். இப்புணர்ச்சியைத் தெய்வப் புணர்ச்சி, முன்னுறுபுணர்ச்சி காமப்புணர்ச்சி என்றுங் கூறுவர் (திருக்கோவை-௧௮).

## 2. இடந்தலைப்பாடு.

இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்து இருவரும் பிரிந்தபின்னர், அப்பிரிவாற்றாது வருந்திநின்ற தலைமகன் தலைவியை மறுநாளுங் கூடவெண்ணி, "யான் அவளை எய்தியது விதியானே: இன்னும் அவ்விதி தருமேற் காண்பல்" எனத் துணிந்து அதனைத் தன் தோழற்குங் கூறாது, முன்னை நாளில் அவளைக் கண்ணுற்ற பொழிலே புக்கான். தலைவியும், பிற்றைஞான்று தன் ஆயவெள்ளத்தோடும் வந்து விளையாடிவருகின்றவள், நேற்றை 'நின்னிற்பிரியேன்: பிரியின் ஆற்றேன்' என்று நீங்கிய தலைவன், அறியாது 'இவ்வாயத்துள்ளே வருவான்கொல்லோ' என்னும் பெருநாணினானும், 'நம்பிரிவு ஆற்றாமையால் இறந்துபட்டான்கொல்லோ' என்ற அச்சத்தினானும் மீதூரப்பட்டு, நெருநலிற் றலைமகனை வழிபட்ட இடமெதிர்ப்பட்டுத் தலைமகனைக் கண்டாளேபோலப் பாவசமாய்நின்றாள்.

ஆயங்களும் [illegible] 'பிரிந்திறப்பேன்று, நமது விளையாட்டுக்களை தொடுத்துமென்றும், என்னை தன்னை [illegible] செய்துமென்றும், பொழுது மேதுக்கள தொப்து மென்றும் இவ்வாறு விளையாட்டிவிருப்பாற் றனித்தனியே பிரிந்தநிலையில், தலைமகளும் அவ்விடநோக்கிச் சென்று தனியளாய்நின்ற தலைமகளை எதிர்ப்படத் தலைவியுங் கண்டு 'இவன் நம் புரல் அன்பிலனோ' என்று முன்பு நிகழ்ந்த ஐயநீங்கிப் பெரியதோர் மகிழ்ச்சிபெற்றாள். ஆயினும், தன்னியற்கைக் குணங்களாகிய நாண் முதலியன அக்குறிப்பை வெளிப்படுத்தாவகை தடுத்துநின்றன; நிற்ப இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாக, அதனால் வேறுபட்டாளோ, அன்றிக் 'களவு வெளிப்படுதலால் இனி மணஞ்செய்துகொள்ளினல்லது இக்கூட்டத்துக்கு உடம்படாள்கொல்லோ' என்று கருதிய தலைவன், அது வெளியாமாறு அவளை மெய்யுறத்தீண்டிக் குறிப்பறியலாயினன். இது 'மெய்தொட்டுப்பயிறல்' எனப்படும். நச்சினார்க்கினியர், புலையன் தீம்பால்போல மனங்கொள்ளுதலுங் கொள்ளாமையுமாகித் தலைவி நிற்கின்றகாலத்தே தொட்டான் என்பர். மெய் என்பது ஈண்டுத் தோளாம்; "உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்—கமிழ்தி னியன்றன தோள்" என்றார் வள்ளுவரும். இக்கிளவியை வண்டோச்சிமருங்கணைதலென்பர் பின்னுள்ளோர். அஃதாவது தலைமகளைச் சாரவெண்ணிய தலைவன் அவள் குழலை நோக்கிவந்த வண்டை யோட்டுவதுபோல நெருங்கி, ஓட்டுமிடத்துத் தன் கை பட்டதுபோலத் தொடுதலாம்.* இங்ஙனம் மெய்தொட்டுப்பயின்றவன், தலைவியின் உடம்பாட்டுக்குறிப் பறிந்து, அவ் வழகியசோலையிடத்தே அவளைக் கூடவெண்ணிப் பலவாறு புகழ்ந்துகொண்டு அவளை நெருங்கினன். நெருங்கத் தன்னியற்கைக் குணங்கள் தடுத்தலால், நாணிக் கண்புதைத்துக்கொண்டும், ஆங்குள்ள கொடிகொம்பர்களில் மறைந்துநின்றும் அக்கூட்டத்திற்கு இடையூறு சில தலைவியால் நிகழ்த்தப்பெற, அவற்றைக் காற்றாது தலைவன் பலபடக் கூறியபின் அவளோடு கூட்டம் நிகழ்கின்றது. அது நிகழ்ந்தபின்

---

* சகுந்தலை துஷ்யந்தர்களது காந்தருவக்கூட்டத்தே, வண்டோச்சி மருங்கணைதல் கூறிக் காளிதாசமகாகவி சிறப்பித்ததும் (சாகுந்தளம்-அங்-3), காதம்பரியில் புண்டரீகமுனி மஹாச்வேதையைக் கண்டு காதலித்தபோது, பூரிக்கல்லாமிலாக 'அவள்மெய்தொட்டதாகப் பாணகவி கூறுதலும் ஈண்டு ஒப்பிடத்தக்கன.

பெரிதும் மகிழ்ந்தவளாய்த் தலைவியைப் பிரிதற்கெண்ணினன், அவளது தேற்றுதற்கு “எஞ்ஞான்றும் இனிப் பிரியேன்” எனத் தெய்வத்தொடு சார்த்திச் சூளுறுத்து ‘இனி இவளைக் கூடுவது அரிதாமோ’ என்றிரங்கித் தலைவன் அச்சோலையை விட்டு நீங்குவானாயினன். இத்துணையும் இடந்தலைப்பாடாமென உணர்க.

ஆசிரியர் ‘மெய்தொட்டுப்பயிறல்’ என்ற சூத்திரத்தே (க0உ) இவ் விடந்தலைப்பாட்டுக்குரிய தலைவன்கூற்றாக, எட்டுக்கிளவிகள் கூறுவர். அவற்றாலும் அவற்றினுரையாலும் மேற்கூறிய செய்திகளெல்லாம் விளக்கமாகும். நாற்கவிராசநம்பி முதலியோர், மெய்தொட்டுப்பயிறன் முதலியவற்றை, முந்திய இயற்கைப்புணர்ச்சியின்வகைகளாகக்கொண்டு வழங்குவர். இவ்விடந்தலைப்பாடு, தலைவன் தானேசென்று கூடியது. இனிப் பாங்கனாற் றலைவன் முற்குறித்த இடந் தலைப்பட்டுப் புணர்ச்சி எய்தவும் பெறுவன்; எனவே, தானேகூடுவது, பாங்கனாற்கூடுவதென இடந்தலைப்பாடு இருவகைப்படுமென்பர் (பக்-உகூக). பேராசிரியரும், “துணையின்றிநிகழுங் களவு சிறப்புடைத்தாதலால், ‘பாங்கன் கழறும்’ (இடித்துரைப்பன்) என்றஞ்சி அவனை முந்துறத் தலைவன் மறைத் தொழுகுமாதலின்” தன்னாற் கூடும் இடந்தலைப்பாடு நிகழ்ந்தபின்பே, பாங்கனைத் தலைவன துணையாகவேண்டுவன என்று கூறினர் (பக்-எசக). ஆனாற் களவியலுரைகாரர் “பாங்கற்கூட்டம்நிகழின் இடந்தலைப்பாடு நிகழாது; இடந்தலைப்பாடுநிகழிற் பாங்கற்கூட்டம் நிகழாது; என்னை? அத்துணையாகத் தலைவி எளியள் அல்லள் ஆகலான்” (பக்-ருரு.) எனக் கொண்டார். இக்கொள்கைப்படியே திருச்சிற்றம்பலக் கோவையுரை (49) முதலியனவும் கூறுவன என உணர்க.

### 3. பாங்கற்கூட்டம்.

இவ்வாறு இடந்தலைப்பட்டுத் தானே தலைமகளைக் கூடி, ஆற்றுவித்து நீங்கிய தலைமகன், ‘நின்னிற்பிரியேன் என்று சூளுறுத்தப்பெற்றுப் பிரிந் தவள், தன்னைக்காணாத என்னிலைமை நினைந்து ஆற்றுளாங்கொல்’ எனவும், ‘ஆற்றாமையால் வந்த மெய்வேறுபாட்டைப் புறத்தாரறியாமல் மறைக்கத் தெரியாது மயங்கினளோ’ எனவும், இவைமுதலாயின நினைந்து வருந்தாநின்றான். இங்ஙனம் நின்ற நிலைமையிற் பிற்றைஞான்று சென்று எதிர்ப்பட்ட பாங்கன், தலைவனை அடியிற்கொண்டு முடிகாறும்

நோக்கி 'இளஞாயிற்றின்வனப்புடைய திருவொளி மழுங்கும்படி, எம் பெருமாற்கு இன்று நேர்ந்த வாட்டம் என்னையோ?' என்று உசாவ, இவ்வகை வினவிய தோழனுக்கு—'கேளல் இத்தகைய வனப்புடையாள் ஒருத்தியைக் கண்டு என்னுள்ளம் பள்ளத்திழியும் வெள்ளம்போல ஓடி, இவ்வகைத்தாயிற்று' என்று நடந்த வாலாறெல்லாங் கூறினான். கூறியது கேட்ட பாங்கன், தன்னன்பனான தலைவனிடந் தீயனகண்டால் அன்பிற் றலைப்பிரியாதசொற்களால் இடித்துக்கூறுமவனாதலால்—'இஃது இவன் தலைமைப்பாட்டிற்குச் சிறிதுந் தகாது' என்று உட்கொண்டு 'அன்பனே! நினனுள்ளம் நின்வரைத்தன்றிக் கைம்மிக்கோடுமே எனின், பின்பு நின்னைத் தெளிவிப்பவர் யாவர்? இத்தகைய நீ, இன்ன விடத்து இன்ன உருக்கண்டு என்னுள்ள மழியப் போந்தேன் என்றல் நின் கற்பனைக்குப் போதாது' என்று கழறிக்கூறினான். இவ்வாறு காதற்பாங்கன் கழறவுங் கேளாது பின்னும் வேட்கைவயத்தனாய்நின்ற தலைவன் 'நண்ப! என்னாற் காணப்பட்ட வடிவை நீ கண்டிலை; கண்டனையாயின் இங்ஙனம் கழறாய்' என்று வருந்தியுரைக்கக் கேட்ட பாங்கன் 'நம் அன்பனுக்குக் கவற்சி பெரிதாயிற்று. இனி யானும் இவனுடன்கூட வருந்தினால் இவனை ஆற்றுவிப்பாரில்லையாம்' என்று தன்னைத் தேற்றிக்கொண்டு, 'அது கிடக்க: எம்பெருமான்! நின்னாற் காணப்பட்ட உரு எவ்விடத்தது; எத்தன்மையது?' என்று இயல் இடம் இவை உசாவ, அதுகேட்ட தலைவன் அவனை எய்தினாற்போலப் பெரியதோர் ஆறுதலடைந்து "நண்ப! இன்னசோலையில் இன்ன அழகு உடையதுகாண், யான் கண்ணுற்ற அவ்வின்ப உருவம்" என்றான். என "ஆங்குள்ள அத்தகையவளை என்னால் ஆவதுண்டேற் கண்டு வருவல்; அத்துணையும் நீ ஆற்றியிரு" என்று தலைவற்குக் கூறிவிட்டுத் தனியனாய்ப் பாங்கன் அவ்விடநோக்கிச் சென்றான். செல்லவும், முன்போல ஆயவெள்ளம் விளையாட்டுவிருப்பாற் பிரியத் தனியளாய்நின்ற தலைவியைத்—தன்னை அவள் காணாமல் தான் அவளைக்காண்பதோர் அண்மையில் மறைந்துநின்று கண்டு, 'இச்சோலையே அவனாற் காணப் பட்ட இடம்; ஈண்டு நிற்கும் இவள்போலும் எம்மிறைவனை வருத்திய வள்' என்று துணிந்து 'இத்தகைய பேரெழிலுடையாளைக் கண்டு இங்குநின்றும் பிரிந்து என்பால்வந்து யானிடித்துக்கூறவும் ஆற்றி நின்ற அண்ணலே திண்ணியான்' என்று தலைவனை வியந்து, அவ்விட

நீங்கி விரைந்து சென்று, நிகழ்ந்தசெய்தியைத் தலைமகற்குக் கூறினன். கூறக்கேட்ட தலைவன் அவ்விடஞ் சென்று, முன்பு இடந்தலைப்பாட்டிற் கூடியவாறுபோலத் தனியளாய்நின்ற தலைவியை எதிர்ப்பட்டுக் கலந்து மகிழ்ந்தனன். இங்ஙனம் மகிழ்ந்து தலைவியைப் பிரிவாற்றுவித்து நீங்குமவன்——"இனி நீ வருமிடத்து நின்காதற்றோழியோடும் வருக" என்று அவட்குக் கூறியும், இவ்வாறு தலைவிகூட்டத்திற்குத் துணை நின்று உதவிய காதற்பாங்கனை வாழ்த்தியும், தலைமகளை முன்போல ஆயவெள்ளம் அடையச்செய்து பிரியலாயினன் என உணர்க.

இனிப் பாங்கற்கூட்டமென்பது, (தோழியிற்கூட்டம்போலப்) பாங்கனுந் தலைவிக் கிடைநின்று உரையாடிக் கூட்டாமையின், "இடந் தலைப்பாட்டுக்குப்பின்பு தலைமகன் பாஙகனைக் கூடுங்கூட்டம்" என்பதே பொருளென்பர் நச்சினார்க்கினியர். இக்கூட்டத்துக்கும், பிற்காலக் கோவைகள் பற்பல கிளவிகள் விரித்துக்கூறுவதுண்டு.

## 4. தோழியிற்கூட்டம்.

• மேற்குறித்தவாறு, பாங்கற்கூட்டம் நிகழ்ந்தபின்னர், தலைவன் மறுமுறையுந் தானே இடந்தலைப்பட்டும் பாங்கனால் இடந்தலைப்பட்டும் தலைவியைக்கூடமுயலாமல், அவளை முன்பு ஆயத்துய்த்தபோது அவள் காதற்றோழியைக் குறிப்பாலறிந்தவனாதலின், அத்தோழியை இரந்து குறையுற்று அவள்வாயிலாக நிரந்தரந் தலைவியைக் கூட எண்ணுவா னாயினன் (களவியல். சூ. ரு). இங்ஙனம் நிகழும் தோழியிற்கூட்டம் பல பிரிவுடையதாகத் தொல்காப்பியங் குறிப்பிடுதலால், இக்களவியலிற் பெருவாவிற்றுயுள்ளது இப்பகுதியாகவே தெரிகின்றது. இக்கூட்டத் தை நாம் அடியில்வருமாறு வகைப்படுத்துக் கூறலாம்:—அவை— பாங்கிமதியுடம்பாடு, மடல்விலக்கல், குறியிடஞ்சேர்தல், வரைவு கடாதல், அறத்தொடுநிற்றல், உடன்போக்கு என்பனவாகும்.

பாங்கிமதியுடம்பாடு:—முற்கூறியபடி, தோழியிற்கூட்டங் கருதிய தலைவன், அக்காதற்றோழியை மதியுடம்படுத்தபின்னல்லது தன்குறை முடிக்கவேண்டுமென்று அவட்குத் தன்கருத்தைக்கூறுவனென்பர் (கஉ அ). மதியுடம்படுத்தலாவது—தோழியினறிவை உடம்படச்செய்தல். தெளி வாகத் தன் குறைகூறாது காந்தமொழியாற் றலைவன் தன் கருத்தறி

சிக்க, அது கேட்டுத் தோழி இருவர்கருத்தினையும் தன்மதியோடு ஒன்று படுத்து உணர்வளென்க இவ்வாறு மூவர்மதியினையும் ஒற்றுமைப் படுத்து உணர்தல்பற்றி, மதியுடம்படுத்தலாயிற்று என்பர் நச்சினார்க்கினியர். இம்மதியுடம்பாடு—(க) குறையுறவுணர்தல், (உ) முன்னுற புணர்தல், (ங) இருவருமுள்வழி அவன்வரவுணர்தல் என மூவகைப் படும் (கஉஎ).

இவற்றுள், (க) குறையுறவுணர்தலாவது இரந்துவேண்ட எண் ணிய தலைவன், தலைவியுந் தோழியும் ஒருங்குதலைப்பெய்த செவ்விபார்த் தாயினும், தோழி தனித்துள்ள இடத்தாயினும் புதியவன்போலப் புகுந்து "இங்கே சில விலங்கு போந்தன உளவோ? இளையர் போந்தன ருளரோ?" எனவும் "நும் பதியும் பெயரும் யாவை?" எனவும்—இவ் வகை உசாவ, 'எம்மினுயதோர் குறையுடையன இவன்' எனத் தோழி கருதுதல் (பக்·உசகூ).

(உ) முன்னுறவுணர்தலாவது—'இருவரது குறிப்பானே மிகவும் உணர்தல்' என்பர் நச்சினார்க்கினியர். [முன்-குறிப்பு] அஃதாவது— முனகூட்டங்களில் தலைவனைக் கலந்த தலைமகள் பாங்கிமுன்பு அடைந்த போது அவளது மெய்வேறுபாடுகண்டு, 'இவ்வேறுபாடு, இங்குப் பல நாளும் வந்துசெல்லும் ஆண்மகனோடு கூட்டமுண்மையால் இவட்கு வந்ததுபோலும்' என்று உட்கொண்டு, அதனைப் பல்வேறுவகையாகச் சொல்லாடித் தோழி ஆராய்ந்தறிதலாம். இவ்வாராய்ச்சியில் தலைமகள் பால் நிகழுங் குறிப்புவேறுபாடுகளால், தோழிக்குத் துணிவுபிறக்கு மென்க. அம்முறையாவன—அந்திவானத் தெழுந்த பிறைநோக்கி 'அன்னாய்! இதனைத் தொழுதும் வா' என்று தோழிகூறத் தலைமகள் தான்கொண்ட காதலனையன்றி வேறுதெய்வம் தொழுமிடத்துத் தன் கற்பழியுமென்று கருதித் தொழாது நிற்றலால், 'இவள்—அன்ன தலை வனைச்சார்ந்த அன்பினள்' என உய்த்துணர்தலாம். இவ்வாறே தோழி தலைவியைநோக்கி, 'நம்புனத்தே உதிரம் அளைந்த கொம்புடையதோர் களிறொன்று போந்தது' என்றுகூற, அதுகேட்டுப் 'பலநாளும் இங்கு வந்துசெல்வான் நம் காதலனாதலால் அவற்கே அக்களிறு ஏதஞ்செய்தது கொல்' என்றுகருதித் தலைவி சிந்துதல்நோக்கி, இருவர்க்குங் கூட்ட முண்மை உணரப்படும். இங்ஙனமே, 'பல்வேறு கவர்பொருணாட்டத்

தால்' தோழி கூறியுணர்வன எல்லாங் கொள்க (பக்-உகூ). களவிய லுரைகாரர் 'முன் உறவு உணர்தல்—முன் கூட்டமுண்மை உணர்தல்' எனக் கூறுவர் (௬).

(௩) இருவரும் உள்வழி யவன்வரவுணர்தலாவது—தலைவியுந் தோழியுந் தினைப்புனங்காத்து நின்றவிடத்துத் தலைவன் கையுறை கொண்டுவந்து நின்று 'இத்தழை நமக்குடையாதற்கு* ஏற்ற'தெனவும் 'இவ்வணி நீவிர் அணிதற்குரிய'தெனவும் கூறி, அவள்பாற் குறை வேண்டுவான்போல நிற்க, தோழி அப்போது நிகழும் அவ்விருவர் மெய்ப்பாடுகளையும் உணர்ந்து அவ்விருவர்க்கும் கூட்டமுண்மை துணிவள்.



"ஏனல் காவல் இவளு மல்லள்
மான்வழி வருகுவ னிவனு மல்லன்
நரந்தங் கண்ணி யிவனொ டிவளிடைக்
கரந்த வுள்ளமொடு கருதியது பிறிதே
நம்மு ணுணுநர் போன்று தம்முள்
மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல
உள்ளத் துள்ளே மகிழ்ப
சொல்லு மாடப கண்ணி னானே"

* தழையுடையின் தன்மையை—"முடித்த குல்லை யிலையுடை நறும்பூச் செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு—சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை-திருந்துகா ழல்குல் திளைப்ப உடீஇ" என்னுந் திருமுருகாற்றுப்படை யடிகளாலும், புறநானூறு ௬௧, ௧௧௬, உ௪௮, ௩௪0-பாட்டுக்களாலும் அறிக. இவற்றால், மலைநாட்டுவழங்கிய பண்டையுடை தழையாலமைந்திருந்தமை விளங்கும். "பிடிமுதிரிடையினுடன் தழைத்துகிற் பெண்ணீ ஞெடு—தொடுமரைத் தோலன் வில்லன் மாவுரியுடையன் தோன்ற" என்னூர் சிந்தாமணியினும் (பதுமை-௬௧). இனி, ஒருத்தியோடு மனமொத்துக்கூடும் கூட்டத்துக்குமுன்பு அவளுடுத்தற்குக் கையுறையாகத் தலைவன் இத்தழையுடைகொடுத்தல் முன்னை வழக்காகத்தெரியலாம் (திருக்கோ-௬௧). மெய்ப்பாட்டியலினும் தலைவி கையுறை யேற்றல் ஆசிரியராற் கூறப்படுகின்றது. பண்டைத் தமிழ்வழக்குக்கள் மிகுந்து காணப்படும் மலையாளநாட்டிலே, இப்போதும் நிகழ்ந்துவரும் காந்தருவ விவாகத்திலே, உடையொன்று கொடுத்துக் கூடுதல் பெருவழக்காம். ஆயின், இவ்வுடை, காலத்திற்கேற்பச் சிறிய நூலாடையாக வழங்குகிறது. "உண்பன நாழி உடுப்பன இரண்டே" (புறம்-௧௮௯) என்று முன்னோர் கூறிய உடையி னளவும் இம் மலைநாட்டிற்றான் காணப்படுதலுங் காண்க.

என்ற அழகிய செய்யுளில் தோழியின் உய்த்துணர்வு கூறப்படுதல் காண்க. இம் மதியுடம்பாட்டின்வகை மூன்றும் களவியலுரையினும் நம்பியகப்பொருளினும் வேறுபடவுங் கூறப்பட்டுள்ளன.

இங்ஙனந் தோழி மதியுடம்படுங்கால், அவள் ஆராயும் ஆராய்ச்சி 'நாட்டம்' என்று கூறப்படுமெனவும் அது தலைவனுக்குந் தலைவிக்கும் கூட்டமுண்மையுணர்த்துங் கருவியாமென்றுங் கூறுவர். இந்நாட்டம் எழுவகைப்படும். அவை:—நாற்றம், தோற்றம், ஒழுக்கம், உண்டி, செய்வினைமறைப்பு, செலவு, பயில்வு என்பன. இவற்றுள், நாற்றமாவது—ஓதியும் நுதலும் பேதைப்பருவத்துக்குத்தக நாறாது தலைவன்கூட்டத்தான் மான்மதச்சாந்துமுதலியனவும் பலபூக்களும் விரவி நாறுதல். தோற்றமாவது—மீண்டும் பிறழ்ந்தும் பிள்ளைப்பருவத்து வெள்ளைநோக்கின்றி உள்ளொன்றுகொள்ள நோக்குங் கண்ணும், தங்நிலைதிரிந்து துணைத்துமெல்கிப் பணைத்துக்காட்டுந் தோளும் முலையுமென்று இன்னோரன்ன. ஒழுக்கமாவது—பண்ணையாயத்தோடு முன்றிலில் மணற்கொழித்துச் சோறமைத்தன்முதலியன முனிந்தகுறிப்பினளாய்ப் பெண்டன்மைக்கு ஏற்ப ஒழுகுதல். உண்டியாவது—பண்டு பால்முதலியனகொண்டு ஒறுத்தூட்ட உண்டுவருகின்றாள், இப்பொழுது ஆசாரமும் நாணுங் காதலும் மீதூர அவற்றின்மேல் உவப்பு ஆண்டின்றி ஒறுத்த உள்ளத்தளாதல். செய்வினைமறைப்பாவது-முன்புபோலாது இக்காலத்து நினைவுஞ் செயலும் தலைவனொடுபட்டனவேயாகலான் அவை பிறர்க்குப் புலனாகாமை மறைத்தல். செலவாவது—பண்டுபோல் வேண்டியவாறு நடவாது சீர்பெறநடந்து ஓரிடத்துச் சேறல். பயில்வாவது—செவிலிமார்பிடத்துத் துயில்வேண்டாது பெயர்த்து வேறோரிடத்துப் பயிறல் (கக௪)—எனவுணர்க. இங்ஙனந் தோழியால் ஆராயப்படும் நாட்டம்-தலைவி நாணும்படி நாடுதல், அவள் நடுங்கும்படி நாடுதல் என இருபிரிவினவாம். மதியுடம்பாட்டின்வகையாகிய மூன்றுறவுணர்தலிற் காட்டியவற்றுள்ளே, 'பிறைதொழுக'என்றாற்போல்வன நாணநாட்டமாம். 'நம் புனத்து உதிரமணிந்தது ஓர் கோட்டுக் களிறு வந்தது' என்பதும் பிறவும் நடுக்கநாட்டம். இவ்விரண்டும் "நாணவும் நடுங்கவும் நாடாள் தோழி—காணுங் காலைத் தலைமகள் தேஎத்து" என்ற விதிப்படி, அகப்பொருள்வழுவாமென்பர் களவியலுரைகாரர் (பக்-௯௩). நச்சினார்க்கினியரும் "இஃது

இறந்துபாடுபயத்தலிற் கந்தருவத்துக்கு அமையாது" என்றார் (இல-உகள). பேராசிரியரோ, இக்கூட்டங்களைத் தோழி செலுத்தும்போது, பெருநாணமும் பேரச்சமுமுடைய தலைவி இறந்துபடவுங் கூடுமென்று கருதி முகமலர்ந்து நகையாடுதல்போன்று கூறுமாதலின், இவை, பொருந்தாக்காமமாகிய பெருந்திணைப்பாற்படினும் அகத்தமிழிற்கு ஆமென்று அமைத்துக்கொண்டனர் (திருக்கோவை கக, எஉ). இனி இம் மதியுடம்பாட்டுவகைகளில் ஒரோவொன்றலன்றி மூன்றனுஞ் சேர ஆராயப்படுமென்பர் நச்சினார்க்கினியர் (பக். ௩௩௫).

மடல்விலக்கு:—இங்ஙனந் தோழி பலவகையாலும் நாடி மதியுடம்பட்டதனை அறிந்தபின்பே, தலைவன் தன்குறை முடிக்கவேண்டி அவளை நெருக்கத் தொடங்குவன். பலபடியாக அவன் வேண்டியுந் தோழி எளிதில் இணக்கங்காட்டாது மறுத்தும், நகையாடியும், 'இவ்விடத்துக் காவலர் கடுகுவர்; நீவிர் விலகிச்செல்லுதிர்' என்று அவனைத் தம்பால்நெருங்கவொட்டாமலும் விலக்கி நிறுத்துவள் (உகஅ-௩00-பக்). இங்ஙனம் நிறுத்தி அலைக்கும் பகுதியைச் 'சேட்படை' எனக் கூறிப் பலகிளவிகளால் விரிப்பர் பின்புள்ளோர். இனி, நெடுக இவ்வாறே தலைவனை நிறுத்தி யலைப்பளாயின், தலைவன் மனநொந்து தோழியைநோக்கி, 'நின்னுதவியாற் றலைவியைக் கூடலாம் என்று இதுகாறும் நெடுக உழந்தேன். நின்னான் அக்காரியம் முடியாமை உணரப்பட்டது. அதனால், இனி இளிவந்தசெய்கைபுரிந்தாயினும் என்குறையை யானே முடித்துக்கொள்வல்' என்று அவட்குத் தன் னுட்கிடையுரைப்பான். இளிவந்தகாரியமாவது மடலேறுதல், வரைபாய்தல் முதலியன. மடலேறுதலென்பது, முற்காலத்தே தாம்விரும்பிய பெண்டிர்பொருட்டுச் செய்துகொள்ளுந் தற்கொலைமுறை என்பது முன்னரே விளக்கப்பட்டது. இவ்வாறு தலைவன் மடலேறுதலைப்பற்றிய வரலாறு கலித்தொகை கூஅ—கசக-ம் பாடல்களிற் கூறப்படுதல் காணலாம். இம் மடற்செய்தி, தோழி தலைமகனுக்கு இடங்கொடாது சேட்படை நிறுத்துதலின்பின்னரோ நிகழ்வதென்பது, "தோழி, நீக்கலி னுக்கிய பகுதியும் நோக்கி—மடன்மா கூறுமிடனுமா ருண்டே" என ஆசிரியர் கூறுதலால் (சூ-க0உ) பெறப்படும்.

இவ்வாறு, மடலேறுவேன் என்று தலைவன் கூறக்கேட்ட தோழி, 'இது பெரிதும் நகைச்சிக்கு ஏதுவாம்' என்றஞ்சி, 'நீவிர் மடலேறத்

தகாது: நமக்கு இக்குறை முடித்துத்தருவன்; நம்மால் விரும்பப் படுவாள் என்மாட்டுப் பேரருளுடையாள்' என்று கூறி, தலைவனை மடல் விலக்கித் தலைமகள்பாற் சென்று, முன்னிகழ்ந்த இருவர்கூட்டமுந் தா னறிந்தமை தலைவிக்குக் குறிப்பா னுணர்த்திவிட்டுப் பின் "அன்னாய்! பெருந்தகையா னொருவன் தழையுங் கண்ணியு மேந்தி என்மாட்டுப் பெரிதுங் குறையுடையனாய், இப்புனத்துக்கண் அடுத்தடுத்து வாராநின் றான். யான் அவன்குறைமுடியாமையின் மிக வருந்துவானாயினன். அன்னான் ஏந்திநின்ற கையுறையை நீ ஏற்றுக்கொண்டு அவன்குறை முடித்தற்கு இஃது ஏற்ற இடம்; யான் கூறுவது கொள்ளாயாயின், நினக்கு மிக்க அன்புடையார்மாட்டுச்சாவியேனும் இதனை நிறைவேற்றுவா யாக; இனி நீ இதனை மறுப்பின் அவன் மடலேறியேனும் வரை பாய்ந்தேனும் மாய்வதாகத் துணிந்துள்ளான்"என்று கூறிக் குறைநயப் பிக்க முதலில் தலைவி அதற்கிணங்காதவள்போற் காட்டினும், முடிவில் தான் உடம்பட்டதைக் குறிப்பான் உணர்த்தினாள். அவ்வளவில், தோழி தலைமகனை அடைந்து, நடந்தசெய்திகூறி "இன்னகுறியிடத்து நீவிர் வருதிர்" என்று இடமுணர்த்திச்செல்ல, ஆண்டுத் தலைமகன் சென்றான். சென்றவன் வரவுணர்ந்த தோழி தலைமகளைக் குறியிடங் கொண்டுசென்று "யான் செங்காந்தட்பூக் கொய்துகொண்டு வரு வேன்; அவ்விடம் தெய்வமுடைத்தாதலால், நீ வரற்பாலையல்லை; அத் துணையும் இப்பொழிலகத்தே விளையாடி இரு" என்று அவளைத் தனி யிருத்தி நீங்கினாள். நீங்க, தலைமகன் ஆங்கு நின்ற தலைவியை எதிர்ப் பட்டுக் கூடிமகிழ்ந்து பின் பிரிந்துசென்றனனாக, அவ்வமயம் விலகி நின்ற தோழி விரைந்துவந்து "நின்கைபோலக் காந்தண்மலர்ந்தன கொணர்ந்தேன்; எம்பெருமாட்டி! தோழி நீட்டித்தாள் என்று சீறாது பொறுத்தருள்" என்று ஒன்றுமறியாள்போன்று கூறி, அவளை அகமுத்துச் சென்று ஆயவெள்ளத்து உய்த்தனள். இவற்றைக் 'குறைந்தவட் படரி னும் மறைந்தவள் அருக—நன்னயம் பெற்றுழி நயம்புரி யிடத்தினும்" என்பதனானும் (பக்-கூ0உ-ச) அதனுரையானும் உணர்ந்துகொள்க.

பகற்குறி, இரவுக்குறிகள்:—இனி இவ்வாறு கூடிப்பிரிந்த தலைவன் தலைவிபால் வேட்கைமீதூர மற்றைநாட்களினும் வந்து தோழிக்குத் தன்குறிப்புணர்த்தி முன் கூடியதுபோற் கூடவும் பெறுவன். இவ்வாறு நிழைன் கூட்டம், பகற்குறி இரவுக்குறி என இருபகுதிப்படும் (சகூ0),

அவை தலைவியாலும் தோழியாலும் முன்போலக் காட்டப்பெற்ற குறியிடத்தைத் தலைவன் அடைந்து பகலிலும் இரவிலும் (கஉ0-க) தலைவியைச் சார்தலாம். இக்குறியிடங்கட்குத் தேர் யானை குதிரைகளை ஊர்தியாகக் கொண்டும், அவன் வருவதுண்டு (உகஉ). இவற்றுட் பகற்குறியிடம்* தலைவியின்மனையாகாது அம்மனைமதிற்குப் புறம்பாமெனவும், இரவுக்குறியிடம் அம்மதிற்கும் மனைக்கும் இடையிலுள்ள இல்வரைப்பாமெனவுங் கூறுவர் (கரு க). இல்வரைப்பாவன:—"அட்டில், கொட்டகாரம், பண்டசாலை, கூடகாரம், பள்ளியம்பலம், உரிமையிடம், கூத்தப்பள்ளி" முதலாயின என்பர்(களவியலுரை, பக்-ககஉ). "புணர்ச்சிவேண்டினும்" என்ற தோழிகூற்றுக் கூறுமிடத்து (தொல்-பக்-ரு0ரு) இவ்விருகுறியினும் நிகழும் பகுதிகளை மேற்கோள்களுடன் காணலாம்.

இவற்றுள், இரவுக்குறியிலே, தலைமகன்வருமிடத்துப் பற்பல அடையாளங்கள் தலைவனால் நிகழ்த்தப்படும். அவை—புனலொலிப் படுத்தல், புள்ளெழுப்புதல் முதலியன. இங்ஙனம் தலைவன் தன்வரவறிவிக்கச்செய்தற்குரிய குறிகள், அவன் செய்கையாலன்றிக் காய்கனிகள் காற்றால்விழுந்து நீரில் ஒலியெழும்பல், வேற்றுப்புட்கள் வந்த அச்சத்தாற் பறவைகள் கலைதல் முதலிய இயற்கைகளாலும் நிகழுமிடத்து, அக்குறிகளைத் தலைவன்வரவு குறிப்பனவாகக்கொண்டு, தோழி தலைவியை "அல்லகுறி"ப்படுத்தித் தவறிப்போதலும் (கருரு) உண்டாம். "அல்லகுறிப்படுதலும்" என்ற சூத்திரத்தும் "குறியினெப்புமை மருடற் கண்ணும்" (பக்-உஅக) என்னுங் கூற்றினும் உரைகாரர்காட்டிய உதாரணச்செய்யுள்களால் இதனை அறிக. இங்ஙனம் அல்லகுறிப்பட்ட மறுநாட்காலையில் தலைவியுந் தோழியும் குறியிடம் வந்து நோக்க, தலைவன் குறித்த குறியிடத்தே தான வந்து சென்றதற்கு அடையாளமாகக் கோட்டினுங் கொடியினும் இட்டுவைத்த மோதிரம் மாலை முத்தம் முதலியவற்றைக்கண்டுமயங்கி அவர் வருந்துவர் (பக். உருக); தலைவனும், அவரிட்டகுறி பிழைத்தமைக்கு இரங்கிச் செல்வனென்க (கருச). இங்ஙனம் இரவுக்குறியிற் பலகாலுந் தலைவன்

---

* பகலுங் கூட்டமுண்மை களவில் உண்டென்பது "மறைந்த ஒழுக்கத் தோரையு நாளுந்-துறந்த ஒழுக்கங் கிழவோற் கில்லை" என ஆசிரியர் குறிப்பித்தலால் அறியலாம். பகற்குறி நெய்தனிலத்துக் கேற்றது. பரதவர் கிழிலேறித் தம்மகளிரைவிட்டுவிலகுதல் அக்காலத்தாகலின். (குறுங்-கஉ...).

வருமிடத்து, வேறு சில இடையூறுகளாலும் தலைவி குறியிடஞ்சேறற் கியலாமல் நேர்தலுண்டு; அவ்விடையூறுகள்—தாய்துஞ்சாமை, நாய் துஞ்சாமை, ஊர்துஞ்சாமை, காவலர்கடுகுதல், நிலவுவெளிப்படுதல் போல்வனவாம் (பக்-௨௬0). "களவினுட் டவிர்ச்சி காப்புமிகி னுரித்தே" என்றார் இறையனாரும் (சூத்-௧௬). இவ்வாறு குறியிடநோக்கி இரவில் வருதற்கண்ணே "ஆறின தருமையு மழிவு மச்சமு—மூறும்" (௧௩௧) தலைவனுக்கு உண்டாகா என்றும், இக்களவொழுக்கத்தே தியாசிகளை யும் நாள்களையும் நீக்கியொழுகுதல் இல்லையென்றுங் (௧௩௫) கூறுவர்.

வரைவுகடாதல்:—இவ்வாறு தலைவன் இருவகைக்குறிகளினும் பலகாலும்வந்தொழுகுமிடத்து, இக்களவு வெளிப்படச் சுற்றத்தார் இற்செறிப்பரோ என்றும் (பக்-௩0௩), வழியாலும் பொழுதாலுந் தலைவற்கு ஏதம்வருங்கொல் என்றும் (பக். ௩௧௨) தோழி அச்சமுற்று, 'இவ் வொழுக்கமொழுகல், நுங்குடிப்பிறப்புக்குஞ் சிறப்புக்கும் பொருந்தாமையின், இனி நீவிர் இவளை மணந்துகொள்வதே தகுதியென்று தலைவனை வரைவுகடவாத் தொடங்குவள். [வரைவுகடாதல்—மணந்துகொள்ளுதலைப்பற்றி உசாவுதல்]. இங்ஙனங் கடாவுமுறை—குறிப்பு, வெளிப்படை என இருவகையாம் (களவியலுரை. பக்-௧0௫). குறிப்பாவது தோழி தலைவனை நோக்கி "எம்மன்னை தலைமகளது வேறுபாடுகண்டு, இஃது இவட்கு எதனால் வந்ததென்று ஆராய்வாளாயினள்" எனப் பொய்தலைப் பெய்து (சூத்-௨௩௭) கூறுதல்போல்வது. இதனாற் போந்தது, அன்னை அதன் காரணமறிந்து இற்செறிக்கக்கூடுமாதலின், அதற்குள் நீவிர் வரையாது தாழ்ப்பதென்?—என்பதாம். வெளிப்பட வரைவுகடாதலாவது, 'நுங் களவொழுக்கம் ஊரார்ல் அறியப்பட்டு, முதலில் அம்பலாய் முளைத்துப் பின் அலராக வளர்ந்தது; இனி வரையத் தாழ்க்கற்பாலிர் அல்லிர்' என்றாற்போல்வது. [பாவாதகளவை அம்பலென்றும் பரந்த களவை அலரென்றுங் கூறுவர் பேராசிரியர் (திருச்சிற்-௧௫0). அம்பல்—முகிழ்முகிழ்த்தல்; அலர்-பலரறியச் சொன்னிகழ்த்தல் என்பர் நச்சினார்க் கினியர் (௧௩௯)]. இங்ஙனம் வரைவுகடாவும் விகற்பங்களைக் 'களனும் பொழுதும்.......கிளவியொடு தொகைஇ' (பக், ௩௧௪-௯) என்ற தோழி கூற்றிற்கு நச்சினார்க்கினியரெழுதிய உரைவிரிவினும், வள்ளுவனார்கூறிய "அலரறிவுறுத்தல்" என்ற அதிகாரத்தும் பிற சான்றோர்செய்யுட்களி

னும் கண்டுகொள்க. "அலரிற் றோன்றுங் காமத்திற் சிறப்பே" என்ற கற்பியற்சூத்திரத்தால் (கசுரு) இவ் வலரானே தலைவன் தலைவியிருவர்க்கும் உள்ள காமம் மிகுந்து நிற்கும் என்பர் ஆசிரியர். இருவர்க்கும் அங்ஙனங் காமஞ்சிறத்தலை, "அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்—பலரறி யார் பாக்கியத் தால்", "ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொல்—நீராக நீளுமிந் நோய்" என்ற திருக்குறள்களானு முணர்க.

அறத்தொடுநிற்றல்:—இங்ஙனந் தலைவனை வரைந்துகொள்ளுமாறு, தோழி பலபடியாக வேண்டவும், அவன் அங்ஙனஞ்செய்யாது, களவொழுக்கத்தேயே நோக்குடையனாயின், அதனாற் றலைவிக்கு ஆற்றாமை கைம்மிக்கு ஏதம் பலவாகும். எவ்வாறெனின்—அக்களவுக்கூட்டம் சிறிதுசிறிதாகச் சிலர்பலர்க்கு வெளியாகிப் புறம்பழித்தல் நிகழ, அது காரணத்தை அன்னைமுதலியோர் ஆராய்ந்து, தலைவியை இற்செறித்துக் காவற்படுத்தலால் அவளுக்குத் தன் காதலனைக் காணப்பெறாதவருத்தம் பெரிதுண்டாம்; உண்டாகத் தலைவி மெய்வேறுபாடு அடைந்து வருந்து தலைத் தாய்முதலியோர் அறிந்து அதன் உண்மைக்காரணமுணராது, வேலனைக்கொண்டு வெறியாட்டயர்வித்துக் குறிகேட்கத் தொடங்கவும் (பக்-ருகஅ) அக்குறியால், 'தன் களவொழுக்கம் ஒருகால் வெளியாங் கொல்' என்று தலைவி அஞ்சிக் கலங்கும். அன்றியும், தலைவிக்கு மணம் புரிதற்குரிய பருவமாதலின், ஏதிலர் மகட்பேசவருதலுங் கூடுமன்றே? அக்காலத்துந் தலைவிக்கு வருத்தம் பெரிதாம்; இன்னும் தலைமகன் இரவுக்குறி ஒழுகாநின்றநிலையில், அவன்வரும் வழி "எண்கும் (கரடி), வெண்கோட்டியானையும் அரவும் புலியும் வரையரமகளிரு முடைய" தாதலால், 'அவற்றால் தலைவற்கு ஏதம்வருங்கொல்' என்றும் ஆற்றாளாம். இவ்வாறு ஆற்றாமை பலவாகித் தலைவி வருந்துகின்றநிலையில் தோழி இவற்றையெல்லாம் உணர்ந்து "இனி இக்களவினைத் தமர்க்கு வெளிப் படச்செய்து அவரால், குறித்த தலைவனுக்கே கொடுக்கச்செய்தல் தக்கது" என்று கொண்டு, அவர்க்குக் களவொழுக்கத்தை மெல்ல வெளிப்படுத்தத் தொடங்குவள் (பக்-சசக). [தலைவியே தன்னிலையைத் தோழிக்கு முதலில் வெளிப்படுத்துமுறையு முண்டு (பக். உசுக-சசச)]. இங்ஙனம் வெளிப்படுத்தலையே "அறத்தொடுநிற்றல்" என்று ஆன்றோர் வழங்குவர். இதற்கு அறனழியாமைநிற்றல் என்பதும், கற்பின்றலைநிற்றல் (அறம்=கற்பு.) என்பதும் பொருளாகும் (களவியல் உக, உஅ-உரை). அறத்

[illegible]

நந்திய செவிலி 'அன்னாய்! இஃது எதனால் ஆயிற்று' என்று ...ழியை உசாவ, அவள் 'அம்மே! என்னால் அறியப்படுவதுஞ் சிறி ...ண்டு; யாங்கள் இம்மலைப்பொழிலிடத்தே ஒருகால் விளையாடிநின்றே ...க, ஒருதோன்றல், அழகிய சுனைக்குவளைப்பூக்கொண்டு அவ்வழியே ...ந்தான்; போதா, நின்மகள் அவனைநோக்கி, 'இப்பூவை எம் பாவைக்கு ...ணியத் தம்மின்' என்றாள். அவனும் பிறிதொன்றுஞ் சிந்தியாது, ...தனை அவட்குக் கொடுத்து நீங்கினான்; அன்றியும், மற்றொருகால் ...ங்கள் ஆண்டு விளையாடுகையில்—"புனஞ்சேர் தினையுஞ் சிதைத் ...ம்மைப் போகா வகைபுகுந்த-சினஞ்சேர் களிறு கடிந்திடர் தீர்த் ...தான்."* இன்னும், "பொனனூர் புனலெம்மை வாங்கும் பொழுதங் ...ார் பூங்கணைவேள்—அன்னா னொருவன் அணைந்தெமக் குச்செய்த ...ருளும்" உண்டு.† இத்தகைய பேருதவிசெய்த பெருந்தகையான் ...ருவனால், பூத்தருபுணர்ச்சியும் களிறுதருபுணர்ச்சியும் புனல்தரு ...ணர்ச்சியும்‡ முன்னரே பெற்ற என் தலைவி, நீவிர் அவள்வேறுபாடு ...ணர்தற்கு வெறியாட்டயர்தும், ஏதிலர்க்கு மணம்பேசியும் போந்த

---

*புனத்துள்ள தினைப்பயிர்களையும அழித்து, எம்மையும் வெளியேறவொட் ...மல் எதிர்த்துப் போந்த யானையை, அம்பாற் கடிந்து இடர்தீர்த்தான்.

† யாம் சுனையாடுகையிலே நீரால் இழுக்கப்பட்டு இறக்குந்நிலைமையி ...ருந்தேமாக, காமனையொத்தானொருதோன்றல் திடீரென்றுவந்து எம்முயிர் ...த்த பொருள் என்க. கலித்தொகையுள் ௬௯-ம் பாட்டின் இப்புனறரு ...ணர்ச்சி கூறப்படுதல் காண்க.

‡ இப்புணர்ச்சிமூன்றனையும்பற்றித் திருவாய்மொழி யீட்டுரையிற் கூறப் ...டுவன வருமாறு:-"பூத்தருபுணர்ச்சியாவது (தலைவி) உத்யானவனத்திலே ...க்கொய்யவென்று புறப்பட்டுப் பூக்கொய்யாநிற்க, அருங்கொம்பில் எட்டாதே ...ன்ற பூவை இவளாசைப்பட, அத்தைத் தன்னைப்பேணாதே (தலைவன்) ஏறிப் ...றித்துக்கொடுக்க, 'இவன் தன்னைப்பேணாதே நம் நினைவைத் தலைக் ...ட்டினான்' என்று அதுக்காகத் தன்னைக் கொடுக்கை. புனல்தருபுணர்ச்சியா ...து, (தலைவி) புதுபபுனலாடபபோய் நீரிலேயிழிந்து விளையாடாநிற்க, அழிழ்ந்த ...ழுநின்றும (தலைவன்)எடுத்தேறவிட்டதற்காகத் தன்னைக் கொடுக்கை. களிறு ...ருபுணர்ச்சியாவது, (தலைவி) வீதியிலேநின்று விளையாடாநிற்க யானையின்கை ...யிலே (அவன்) அகப்படப்புக, அதன் கையினின்றும் மீட்டதற்காகத் தன்னைக் ...கொடுக்கை" (இ, ௩, அ.) எனக் கண்டுகொள்க.

செய்திகேட்டுக்' கவற்சியுற்றதனால், அவட்கு இச் சேய் [illegible] போதும்" என்று கூறினள்; கூற, அச்செய்தியுணர்ந்த செவிலி அவ் வுண்மையை நற்றாய்க்குக்கூறி அறத்தொடுநிற்ப, நற்றாய் அதனைத் தலைவியின் தந்தை தன்னையர்க்கு முறையே அறத்தொடுநிற்ப, இங்ஙனம் 'தனக்குரிய காதலனைக்கூடிக் கற்புக்கடம்பூண்டாள் தங் குலமகள்' என்ற செய்தி சுற்றத்தார்க்கு வெளியாம்—என உணர்க (பக். ௩௧௯, ௩௨௦, ௩௪௧.). இவ்வறத்தொடுநிற்குமுறை ஏழுவகையாக விரித்துக்கூறப்பட்டுள்ளது (௨௦௭). இவற்றுள் "ஏதீடு" என்னும் பகுதிப்பட்டன, மேற் கூறிய பூத்தருபுணர்ச்சி முதலியனவாம் [ஏது ஈடு—காரணம் இடுதல்]. ஏனைய பகுதிகளை ஈண்டு விரிப்பிற் பெருகுமாதலின், உரைநோக்கி யுணர்ந்து கொள்க.*

மேற்கூறிப்போந்த அறத்தொடுநிற்குமுறையிற் றோழிகூற்றாகவும் செவிலிகூற்றாகவும் வருங் கிளவிகள் பலவாக உள்ளன. அவற்றுள், தலைவியின்வேறுபாடுநோக்கி, இஃது எதனால் ஆயிற்றென்று தெரிதற்குச் செவிலி வேலனைக்கொண்டு வெறியாடச்செய்து கழங்குபார்த்தலும் கட்டுவிச்சியை அழைத்துக் குறிகேட்டலுமுண்டென்பது—"கட்டினுங் கழங்கினும் வெறியென இருவரும்—ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்" (பக். ௩௨௫) "களம்பெறக்காட்டினும்" (பக். ௩௪௮) என்புவற்றால் தெரிகின்றது. 'கட்டினுங் கழங்கினும்' என்பதற்குக் 'கட்டுவிச்சியும் வேலனுந் தாம் பார்த்த கட்டினாலும் கழங்கினாலும்' என்று பொருள் கூறப்படுதலால், கட்டுவிச்சிக்குக் கட்டெடுத்தலும் வேலற்குக் கழங்கு பார்த்தலும் முறையே உரியவாதல் விளங்கும். இவற்றுள், கட்டெடுத்தலாவது, கட்டுவித்தியால் நெற்குறியறிந்து சொல்லப்படுவதென்பதும், அந்நெல்லாற் பிறரெண்ணிய எண்ணம் ஒருவடிவுகொண்டுதோன்றி அவட்குரைப்ப அவள் அதனை வெளியிடுவளென்பதும், "விறற்சேய்கடவும்—மயிலிதன் றேகொடி வாரணங் காண்கவன் சூர்தடிந்த—அயிலிதன் றெயிதன் றெநெல்லிற் றோன்று மவன்வடிவே" (௨௮௫) எனத் திருக்கோவையாருள்வரும் அடிகளாற் புலனாகின்றது. திருமால்பாற் காதல்கொண்டு மயங்கிய பெண்ணொருத்தியின்பொருட்டு, அவள் சுற்றத்தார்

---

* கபிலர் பாடியருளிய "குறிஞ்சிப்பாட்"டில் பாங்கி செவிலிக்கு அறத்தொடுநிற்கும் முறைதன் அழகாகக் கூறப்படுகின்றமை காண்க.

[illegible]

[illegible] குறவஞ்சி [illegible] திருப்பள்ளியெழுச்சி [illegible]

"அருவன்று மற்றுங்கே
ஆரானு முற்றறியும் அம்மனைமார் சொல்லுவார்
பாரோர் சொலப்படும் கட்டுப் படுத்திரேல்
ஆரானும் மெய்ப்படுவ னென்று ரதுகேட்டுக்
காரார் குழற்கொண்டைக் கட்டுவிச்சி கட்டேறிச்
சீரார் சுளகிற் சிலநெல் பிடித்தெறியா
வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைம்மோவாப்
பேரா யிரமுடையா னென்றாள் பெயர்த்தேயுங்
காரார் திருமேனி காட்டினாள்"

எக் கட்டுவித்தி கூறு முறையைச் சிறியதிருமடலில் அழகுபடப் படுதல் அறியத்தக்கது. மலைநாட்டாராகிய குறக்குடிமகளிரே கட்டுவித்தியராய்த்தோன்றிக் குறிசொல்லுதல் பண்டை வழக்காம்.* குறமகள்-குறி எயினி என்னும் பெண்பாற்புலவரொருவர்க்குக் குறிகூறுதல் பற்றிப் பெயர்வழங்குதலும் நோக்குக (நற்றிணை-கூ௩௫, புறம்-௧௫௭). குறிகூறும் பெண்டிர் பெரும்பான்மை மலைக்குறத்தியராதல் குறம் என்ற பிரபந்தங்களாலும், இன்றுமுள்ள வழக்காலும் பலரும் அறிந்ததாம். முற்காலத்துக் குறக்குடிச் சிறுவர்களும் குறியிறுக்க வல்லாராயிருந்தனர் என்பது—"குறமக ளீன்ற குறியிறைப் புதல்வரோடு" என்னும் ஐங்குறு நூற்றடியால் விளங்கும் (கூ௬௪).

---

* இம் மலைக்குறத்தியர் நெல்லாற் குறிசொல்லுமுறையை, மீனாக்ஷியம்மை குறத்துள் (௨௪) அடியில்வருமாறு குமரகுருபரமுனிவர் குறிப்பிடுவர்,

முற்நாழி முச்சிறங்கை நெல்லளந்து கொடுவா
முறத்திலொரு படிநெல்லையென் முன்னேவை யம்மே
இந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்தோர் கூற்றை
இரட்டைபட வெண்ணினபோ தொற்றைபட்ட தம்மே
உன்னுமுன் வெள்ளிமலைப் பிள்ளையார்வந் துதித்தார்
உனக்கினியென் னினைகரும மிமைப்பினிற்கை கூடும்
என்னுமெ யெங்கள்குலக் கன்னிமா ரறிய
எக்குறிதப் பினுந்தப்பா திக்குறிகா ணம்மே

இச்செய்யுளிற் கண்ட நெற்குறிச் செய்தியோடு முற்குறித்த கட்டுவித்தி [illegible] ஒப்பிடத்தக்கது.

இனி, வேலன் என்பான் 'முருகபூசைபண்ணுமவன்'. முருகக்கடவுட்குரிய வேலைக் கையிற்றாங்குதல்பற்றி 'வேலன்' எனப்பட்டான். இவன் கழங்குபார்த்துக் குறிசொல்வது முற்காலத்துவழங்கிய செய்தியென்பது,

> "பெய்ம்மணன் முற்றங் கவின்பெற வியற்றி
> மலைவான் கோட்ட சினைஇய வேலன்
> கழங்கினு லறிகுவ தென்றால்"

> "அறுவை தோயு மொருபெருங் குடுமிச்
> சிறுபை நாற்றிய பல்தலைக் கருங்கோல்
> ஆகுவ தறியு முதுவாய் வேல
> கூறுக மாதோ கழங்கின் றிட்பம்"

எனவரும் பாடற்பகுதிகளால் உணர்க. இத்தமிழ்நாட்டு வசிக்கும் 'தொட்டியர்' என்ற வடுகரில், ௧௨-கழற்சிக்காய்களைக் கலப்ப ஒருபேழையுளிட்டு, ஒருவனைக்கொண்டு அவற்றை எடுக்கச்செய்யும்போது, வெள்ளிகட்டியகழற்சி தோன்றியநிலையில், அதனைக்கொண்டு இராசிமுதலியனவறிந்து குறிசொல்வது இன்றும் வழக்காக உள்ளது. வேலன் கழங்குபார்த்துவந்தமுறை இதுபோன்றதாதல்வேண்டும். இங்ஙனம் கழங்குபார்க்குமிடத்து, அணங்குற்றபெண்ணின் நோய் தணித்தற்கு அவன் 'படிமம்' ஒன்று பண்ணிக்கொடுத்தலுமுண்டென்று தெரிகின்றது (ஐங்குறுநூறு-௨௪௫). இனி, வெறியாட்டென்பது, முருகக்கடவுள்பொருட்டுப் பலியிட்டு அக்கடவுள் ஆவேசிக்க ஆடுங் கூத்தாகும். இது பெரும்பான்மை மேற்கூறிய வேலனால் நிகழ்த்தப் படுவதாம்.* அணங்குற்றபெண்டிர்பொருட்டு, வேலன் வெறியாடிக் குறிகூறும் செய்தி, பழையநூல்களில் மிகுதியாகப் பயிறல் காணலாம். "வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்—வெறியாட் டயர்ந்த காந்தளும்" என்ற புறத்திணையியற்சூத்திரத்தே (௬0) ஆசிரியர் இதனைக் காந்தள் எனவும் கூறுவர். இவற்றால், வேலனது கழங்குபார்த்தலாலும் வெறியாட்டாலும் கட்டுவித்தியது கட்டெடுத்தலாலும் குறிகேட்டல், தொல்காப்பியர்காலத்துக்குமுன்பிருந்த தமிழ்வழக்குகள் என்பது நன்கு விளங்கும்.

---

* சிறுபான்மை குறமகளிரும் வெறியாட்டெடுத்தலுண்டென்பதும், அவ் வெறியாட்டின் இயல்புகளும் திருமுருகாற்றுப்படையிலே, ௨௨௨-அடிமுதல் ௨௪௪-அடிவரை கூறப்படுதல்கொண்டு அறியத்தக்கன.

இக் குறிகூறுவோரில் 'வேலன்' என்பார், பழைய நூல்களிற் கூறப்பட்டவாறே, இன்றும் கடம்மலைநாட்டில் வாழ்தல் அறியத்தக்கது. கொச்சிராஜ்யத்தே மந்திரவாதிகளாயுள்ள இச்சாதியார்—பாரதவேலன், வாளைவேலன், பாணவேலன், மண்ணவேலன் என நான்குவகையினரா யுள்ளார் எனப்படுகின்றது. கோளப்பட்டியில், இன்னோர் மாந்திரிகஞ் செய்யுமுறை பலபகுதிப்படுமென்றும், அவற்றுள் வேலன் துள்ளல் என்பது சிறந்ததொன்றென்றும், அது, திருஷ்டிதோஷங்களையும் தெய்வத்தாலும் பேய்களாலும் பெண்கட்குநேருங் கேடுகளையும் விலக்குதற்கு இவரால் நிகழ்த்தப்படும் ஒருவகை ஆட்டம் அல்லது கூத்தென்றும், இவ்வாட்டக்காலத்தில் ஆடு கோழி முதலியவற்றைப் பலிகொடுப்பதுண்டென்றும், இப்பலிகள் இடுவான்பலி, குழிப்பலி, கிடங்குப்பலி, அழிபலி, திக்பலி, கும்பபலி முதலாகப் பலவகைப்படுமென்றும், இவர்கள் அக்காலத்து உச்சரிக்கும் மந்திரவகைகள் இவையென்றும், மலையாளத்திற் கோயில்களுக்கு ௬௨-அடி தூரம் விலகியிருந்தே இவர்கள் தெய்வ வழிபாடு செய்கின்றனரென்றும், அந்நாட்டில் முக்கியமான வேறுபல தொழில்கட்கும் இவர் உபயோகப்படுகின்றனரென்றும் பிறவாலாறுகளும் கூறுவர்.* இங்ஙனங் கூறிய வேலன்வாலாறுகளிற் பலவும், பழையநூல்களிற்கண்ட செய்திகளேயாதல் அறியத்தக்கது. இவற்றுள், 'வேலன் துள்ளல்' என அந்நாட்டில்வழங்குவது, பழைய வெறியாட்டேயாதல் காண்க. நிற்க.

உடன்போக்கு:—இனி, செவிலிமுதலியோர், 'தங்குலமகள் தனக்குரிய காதற்றலைவனைக் கூடிக் கற்புக்கடம்பூண்டாள்' என்று அறத்தொடுநிற்குமுறையில், பெற்றோர் அதனை உற்றுணர்ந்து (௬௭), உரியவனுக்கே அவளை மணம்புரிய முயல்வாராயின், அது பெரிதுஞ் சிறந்து வாட்டும்; அன்னமன்றி, வேறோர் அயலானுக்குத் தம்மகளை மணம்பேசினும், தலைவனைக் காணப்பெறுவண்ணம் அவளைக் கடுங்காவற்படுத்தினும் தலைவிக்கு ஆற்றாமை கைம்மிக்குத் துயரம் பெருகுதலால், 'இனி இவள் இறந்துபடவுங் கூடும்' என்று தோழி உணர்ந்து வருந்தி, வேறு உபாயமொன்றுந் தோன்றாநிலையில், பின்வருமாறு செய்வள். பண்டு தலைவன் பயின்ற குறியிடத்துக்கு அவள்சென்று தலைவனை எதிர்ப்

*Castes and Tribes of Southern India. (See Velan).

பட்டு அவளைத் தொழுது வலஞ்செய்து "தம்மாற் றலைவியர்க்குச் செய்யப்பட்டதலையளி (பேரன்பு), உண்மையாகவே பலரான் அறியப் பட்டதோடு, சுற்றத்தாரது சீற்றத்திற்கும் ஏதுவாயிற்று. இவ்வாறு ஆயிபது, நீவிர் முன்னரே மணந்துகொள்ளமுயலாது களவொழுக்கத்தே கருத்துக்கொண்டொழுகியதாலன்றோ? அல்லதூஉம், ஏதிலரும் வரைந்தெய்தற்குப் பரிசமொடுபுகுந்து பொன்னணிய முந்துற்றார்; இனி என்செய்வோம்" என்று கூற, அதுகேட்ட தலைவன், 'இந்நிலையில் என்னாற் செயற்பாலது யாது?' என்று உசாவ, 'நீரே சூழ்ந்து சொல்லுதிர்' என்றாள். என, தலைவனுஞ் சூழ்ந்து 'ஆயின், என்காதலியை என்னூர்க்கே உடன்கொண்டுபோக வலித்தேன; இச்செய்தியை அவட்கு உணர்த்தி உரியவற்றை விரைந்துசெய்க' என்றான். அதுகேட்ட தோழி மகிழ்வுற்று, 'நன்று, எம்பெருமான் அருளிச்செய்தது; அவட்கு இச்செய்தியுணர்த்தி விரைந்து கொணர்வேன்' என்று கூறிப்போந்து, தலைமகள்பாற்சென்று "எம்பெருமாட்டி! தலைவர் நின்னைத் தம்மூர்க்கு உடன்கொண்டுசெல்லக் கருதுகின்றார்; இஃதறிந்தேன்; நின்குறிப் பென்னையோ" என்று உசாவினள். அதுகேட்ட தலைவி, "உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்—செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று" (கக௫) என்றவாறு, நாணழிபவரினுந் தனகற்பைக் கைவிடாமைதுணிந்து தலைவனது உடனபோக்கிற்குத் தானும் மனநேர்ந்தகுறிப்பை வெளிப் படுத்தினாள். இங்ஙனந் தலைவி உடன்பட்டதும, அவள் வெளியேறு தற்குவேண்டுவன புரிந்து முன்பு இரவுக்குறியிற்போல ஒருவரும் அறியாவகை தோழி அவளைக் குறியிடத்துக்கொண்டுசென்று தலைமகன் பாற்சேர்த்து, அவனை நோக்கி, "தொய்கை தளரினுங் கூந்தல் நரைப் பினும், காதல்! மற்றிவ்—வகலை அடைக்கலம் எனறே கருதி அருளக் கண்டாய்" என்று தன் ஆற்றாமையும் இரக்கமுந் தோன்ற "ஓம்படை" (அடைக்கலம்) கூறி (பக். ௯0௯), அவர்களை வழிவிடுத்துப் பிரிவாளாயி னள். இஃது உடன்போக்குவரலாறுமென்று உணர்க. இங்ஙனம் தலைவி உடன்செல்லத் துணிந்ததற்கு ஏது, தான் இல்லறத்தினின்று நல்லறஞ்செய்யமுடியாமையானும், அடுத்தடுத்துத தலைவன் பிரிதலால் வருத்தமிகுதிநிகழ்தலானும், அம்பலும் அலரும் பார்த்து துன்பம் விளைத்தலானும், தாய்முதலியோர் அயிர்த்தலால் தலைவியைக் குறி யிடத்துக் கூடுதல் தடைப்படலானும், இவையெல்லாம் நீங்கித் தலைவ

னுடன் இணைபிரியாச் சேர்க்கையைத் தலைவி விரும்புதலே எனக் கூறுவர் (௨௨௫).

இவ்வாறு ஒருவரும் அறியாவண்ணம், காதற்றலைவனுடன் தலைவி செல்லாநிற்கப் பிற்றைஞான்று வெளிப்பட்ட மகள்செய்தி கேட்டறிந்த சுற்றத்தார் தலைவன்செயற்கு மிக வெகுண்டு அவ்விருவர்செலவை யுந் தடுத்தற்பொருட்டுத் திரண்டு விரைந்தெழுவர். இவாறிந்தெழுவ தற்குமுன்பே, செவிலி கேட்டு மயங்கிக் கவலைமேற்கொண்டு, தலைவன் தலைவியர் சென்ற இடைச்சுரத்தைநோக்கித் தேடிப்போந்து, வழியில் எதிர்ப்பட்ட முக்கோலந்தணரையும் மற்றவரையும் உசாவி அவரால் அவ்விருவரும் அகமகிழ்ந்து வழிச்சேறலையும் அவ்விருவரும் அறநெறியி னிற்றலையும் அறிந்து, ஆற்றாமையால் மேற்செல்லவியலாது மீண்டு வருவள்.* ஆனால், தலைவியைப்பெற்ற நற்றாய், இவள்போல நெடுந் தூரஞ் செல்லாளாயினும், தம்மூர்த் தெருவரையுந் தேடுதற்குரியள் எனப்படுகின்றது (௯௭).

இங் கிவ்வாறாக, தலைவன் தலைவியை உடன்கொண்டுசெல்லும் போது, இடைவழியிற் சுற்றத்தார் திரண்டுவந்து தலைவனை மேற்செல்லா வண்ணந் தடுத்துநிற்க, அப்போது தலைவி, அவர்செயற்கு மனமொவ் வாது தன் காதலனைச்சார்ந்து கற்பொடுபுணர்ந்துநிற்பது கண்டு, ‘இவள் செய்கை அறநெறிப்பட்டதாதலால் நாம் இதற்கு இடையூறுவிளைத்தல் கூடாதென்றும், விளைப்பினும் தலைமகன் எடுத்துக்கொண்ட வினை முடித்தல் ஒருதலையென்றும் கருதி, அவருடன்போக்கிற்கு உடன் பட்டுத் தம்மூர்நோக்கி மீள்வர். இதனை “இடைச்சுர மருங்கி னவள் தமரெய்திக்—கடைக்கொண்டு பெயர்தலிற் கலங்கஞ ரெய்திக்—கற்பொடு புணர்ந்த கௌவை” என்பர் ஆசிரியர் (௪௦). அங்ஙனம் அவர் மீண்டதும், தலைவியினச்சந்தீர, இடைச்சுரமருங்கில் ‘நாம் இவ்வாறு உடன்போவது, நம்மிருவர்மாட்டுமன்றிப் பழமையாக வழங்கும் உலகியலாம்’ (௫௭) என்று தலைவன் அவளைத் தெருட்டியும் வழியிளைப்புத்தீர மருட்டியும் உடனழைத்துச்சென்று தன்பதி சேர்வனென உணர்க. இவ்வாறு களவுப் புணர்ச்சிக்குரிய தலைவியைத் தலைவன் உடன்கொண்டுசேறல் பண்டைத்

*முக்கோற்பகவர், செவிலிக்கு அவ்விருவரது உடன்போக்கைப்பற்றிக் கூறுமுறையைக் கலித்தொகை கஅ-ம்பாட்டிற் காண்க.

தமிழ்வழக்காதலோடு, அது தன்மமார்க்கமாகவும் கருதப்பட்டுவந்த தென்பது,

"சாகனி இனிய வாருக நில்ல
அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்
பிறைநுதற் குறமகள் போகிய சுரனே" (ஐங்குறு. ௩௭௧.)

"இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலைப் பிரியா ஆறுமற் றதுவே" (கலித்.௯.)

என்னுஞ் சான்றோர்கூற்றுக்களால் உணர்க. இவ்வுடன்போக்கைக் "கொண்டுதலைக்கழிதல்" எனவுங் கூறுவர் (பக்-௫௭).

இதுகாறுங் கூறியவற்றால், தோழியிற்கூட்டம் என்ற பகுதி ஏனைய வற்றினும் பலபிரிவுடையதாக முன்னோரால் மொழியப்பட்டுள்ளமை வெளியாகும். மேற்குறித்த பாங்கிமதியுடம்பாடு முதல் உடன்போக் கிறுக உள்ளனவற்றையே, நம்பியகப்பொருள் முதலிய இலக்கணங்களும், திருச்சிற்றம்பலக்கோவை தஞ்சைவாணன்கோவை முதலிய இலக்கியங் களும் மற்றுஞ் சில வேறுபாடுபடப் பகுத்துக்கொண்டு, வேறு வேறு கிளவிகள் அமைத்து விரித்துக்கூறுவன. அன்றியும், அவை ஆசிரியர் கூறியவற்றினுஞ் சில கூட்டியுங் குறைத்தும் மாற்றியும் மொழிவனவாம். ஆயினும், தொல்காப்பியனார் கருதிய முறையை நாம் நுணுகி ஆராயு மிடத்துத் தோழியிற்கூட்டமென்பது, மேற்கூறிய வாலாறுகளைக் குறிப் பிடுவதே என்பது புலப்படத் தடையில்லை. இனி, இவ் வுடன்போக் கோடு களவொழுக்கம் முடிவுறுவதென்றும், மேல்வருஞ்செய்திகள் கற்பொழுக்கத்தின்பாற்படுமெனவும் உணர்க; என்னை? செய்யுளியலிற் கற்வென்னுங் கைகோளின் இலக்கணங் கூறப்புக்கவிடத்தே "மறை வெளிப்படுதலும்" என, உடன்போக்கிற்குப்பின்னிகழும் மறைவெளிப் பாட்டைக் கற்புமுறையின் தொடக்கமாக ஆசிரியர் கூறுதலால் என்க. அதனுரையிற் பேராசிரியர் "எம்மனை முன்துறத்,தருமோ, தம்மனை யுய்க்குமோ யாதவன் குறிப்பே" எனத் தலைவி உடன்போயகாலத்து வருந்திக்கூறிய நற்றாய்கூற்றை அம் மறைவெளிப்பாட்டுக்கு உதாரணங் காட்டுவர். திருவள்ளுவரும், அலரறிவுறுத்தலோடு களவியலைமுடித்துப் பின் கற்பியல் கூறத்தொடங்குதலும் நோக்கத்தக்கது.

இக் களவுக்கூட்டம் இரண்டுமாதங்களுள்ளே முடிதற்குரியதென்று இறையனார்களவியல் கூறியசெய்தி முன்னரே குறிக்கப்பட்டது (சூ ௩௨). அது கூறிய சூத்திரத்தில் "திங்களிரண்டினகம்" என, இரண்டுமாதமாவதற்குச் சிலநாள் நிற்க, தலைவன் வரைந்துகொள்வது நலமென்று கருதியெழுதிய உரையாசிரியர்கொள்கைப்படி, இக்களவொழுக்கமுடிந்து ஐம்பத்தாறும்நாள் மணம் நிகழுமென்றும், இன்னவின்னசெய்திகள் இன்னவின்ன நாட்குரியனவென்றும், தஞ்சைவாணன்கோவையுரையாசிரியர்முதலியோர் வரையறைகூறுவர் (௩ ௬௬-உரை). இப்பாகுபாடு காட்டும் குறிப்பொன்றுந் தொல்காப்பியத்துக் காணப்பட்டிலது.

இனிக் களவுக்கூட்டங் கூடிவந்த தலைமகன் தான்காதலித்த தலைவியை மணந்துகொள்வதில் இரண்டுமுறையுண்டு; அவை களவுவெளிப்படுதற்குமுன் வரைதல், களவுவெளிப்பட்டபின் வரைதல் என்பன (௧௪0). பிற்கூறியபகுதியைச் சேர்ந்தனவே, முன்பு எழுதப்பட்டவை. களவு வெளியாவதற்குமுன் வரைதல் என்பது, பகற்குறி இரவுக்குறிகட்குப் பின், தோழியால் வரைவுகடாவப்பட்டு நிகழ்வதாம். இங்ஙனம் வரைதற்கண் தலைவிக்கு உடன்போக்கில்லை எனபது உணரத்தக்கது. இந்நிகழ்ச்சியில், தலைவியை மணம்பேசி அவள் சுற்றத்தாரைத் தலைவன் வேண்ட, அவர் மிகுந்த பரிசங்கேட்குமிடத்து அப் பரிசத்தின் பொருட்டு அவன் வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிந்தும், வேறு வினைமேற்கொண்டு (வேந்தர்க்குற்றுழி முதலியவைபற்றி) ஒருவழித் தணந்தும் சிலகாலம் நீங்கியுறைதலும் நிகழுமென்றும், ஆனால், இக் களவொழுக்கத்திடையே ஓதல் தூது பகைகள் காரணமாகத் தலைவியைப்பிரிதல் கூடாதென்றுங் கூறுவர் (௧௪௩). மேற்கூறியவாறு "வரைவிடைவைத்துப் பொருள்வயிற்" பிரியும் பிரிவொன்று கூறப்படுதலின், விவாகத்தில் மகள்பொருட்டுப் பரிசம் வாங்கும் வழக்கம் தமிழ்நாட்டார்க்குள் முன்னாளில் இருந்தமை புலப்படும். "பொருளென மொழியினும்" என்ற சூத்திரமுங் காண்க (௨௧௪). இவ்வழக்கம் மலைச்சாதியார் பலரிடத்து இன்றும் உள்ளதேயாம். ஆரியர்க்குள் கன்னியாசுற்கம் பெறுதல் பண்டைக்காலத்தில்லை என்றும், சூத்திரரும் பெண்ணுக்கு அது வாங்குதல் தகாதென்றும் மனு கூறுவர் (அத். ௯; ௬அ. ௧00). இவ் வரைவின்பொருட்டுப் பிரிதலை முன்னூல்களும் பின்னூல்களும் விரித்துக் கூறுகின்றன. இங்ஙனமாக இயற்கைப்புணர்ச்சிமுதல்

தோழியாலாயகூட்டம் முடியவுள்ள பொருட்பகுதியே அகத்திணையுட் பெரிதுஞ் சிறந்ததாம். இதனை "அகத்திணையின் மிகத்திகழும் இன்பக் கலவி யின்பப்பகுதி முற்றிற்று" எனப் பேராசிரியர் அப்பகுதியிறுதியில் எழுதுதலாலும் அறியலாம் (திருக்கோ. ௩00).

## III. கற்பியல்.

இதுகாறும், இல்வாழ்க்கைக்குமுன் னிகழும் களவொழுக்கத்தின் வரலாறு ஆராயப்பட்டது. இனி அடுத்தநிலையாகிய கற்பைப்பற்றி ஆசிரியர் கூறுவனவற்றை நோக்குவோம். கற்பாவது—கொள்ளுதற் குரிய தலைவன், வேள்விச்சடங்கொடுகூடத் தலைவியை அவள் பெற்றோர் கொடுப்பக் கொள்ளுதலாம் (௧௪௨). "கொண்டானிற் சிறந்த தெய்வ மின்றெனவும், அவனை இன்னவாறு வழிபடுக எனவும், இருமுதுகுரா வர் (பெற்றோர்) கற்பித்தலானும், அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் கடவுளர்—இவர்களிடத்து ஒழுகும் ஒழுக்கத்தைத் தலைமகள் கற்பித்த லானும், வேதத்தும் சடங்கினும் விதித்த சிறப்பிலக்கணங்களைக் கற் பித்துக்கொண்டு துறவறத்துச் செல்லுந்துணையும் இல்லறநிகழ்த்துத லானும், கொண்டதலைவனை இன்னவாறு பாதுகாப்பாயென்றும், அவற்கு நீ இன்னவாறு குற்றேவல் செய்தொழுகென்றும் அங்கியங் கடவுள் சான்றாக மந்திரவகையாற் கற்பிக்கப்படுதலானும் 'கற்பு' எனப் படுவதாயிற்று" என்பர் (பக். ௩௪௫). களவுப்புணர்ச்சிக்குப்பின்பு இக்கற்புமுறை நிகழ்வதாகவே புலனெறிவழக்குஞ்செய்யப்படுமென்பது, "முற்படப் புணராத சொல்லின் மையிற்—கற்பெனப் படுவது களவின் வழித்தே" என முன்னோர் கூறுதலால் நன்கறியப்படும். (மெய்யுறு புணர்ச்சியாகிய களவின்வழித்தாகாத) வேறு உலகியன்மணங்களும் உள்ளப்புணர்ச்சியாகிய களவுமுறையானே பெரும்பான்மை நிகழ்வன வாதலின், அவற்றையும் களவுக்கூட்டத்திற்குப் பிற்பட்டனவாகவே கொள்வர் முன்னோர். இதனை நச்சினார்க்கினியர் "பொருளாற் கொள்ளும் மணமும், இருவர்சுற்றமும் இயைந்து மீத் தாமும் இயைதலிற் கந்தருவப் பாற்படும்" (பக். ௨௨௩) எனவும், "உலகத்து மன்றலாவது, குரவர் கொடுப்பதற்குமுன்னர் ஒருவற்கும் ஒருத்திக்கும் கண்ணும் மனமுந் தம்மு ளியைவதே என வேதமுங் கூறிற்று" (பக். ௨௨௩) எனவும், "இருவர் கண்ணுற்றுக் காதல்கூர்ந்தவழியெல்லாம் கந்தருவமென்பது

வதமுடியாதலின், இவ் வுள்ளப்புணர்ச்சியுங் கந்தருவமாம்" (பக். ௯௨) எனவும் கூறுதலால் உணர்க. இனி, இக்கற்பினது வகையைத் தொல்காப்பியனார்,

"மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலும்
இவைமுத லாகிய வியனெறி திரியாது
மலிவும் புலவியு மூட லுமுணர்வும்
பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே." (௱00)

என்ற செய்யுளியற்சூத்திரத்திற் பாகுபடுத்துக் கூறுகின்றார். ஈண்டுக் காட்டப்பட்ட முறைகொண்டு நோக்குமிடத்துக் கற்புமுறையைப் பற்றிய உலகியலும் புணர்ந்தரையுமாகிய புலனெறிவழக்கத்தை அடியில் வருமாறு தெரிதல்கூடும்.

மறைவெளிப்படுதலுந் தமரிற்பெறுதலும்.

முன்பு உடன்போக்கிறுதியில் உரைத்தவாறு, தலைவனுந் தலைவியும் ஒருவரும் அறியாவகை உடன்செல்ல "இடைச்சுர மருங்கின் அவள் தமர் எய்திக்—கடைக்கொண்டு பெயர்த்தலிற் கலங்கஞ ரெய்திக்—கற்பொடு புணர்ந்த" தலைவியினிலைமைகண்டு அவள்சுற்றத்தார் மீண்டதும், தலைவன் அவளுடன் சென்று தன்பதியை அடைவன். அடைந்து சில நாளாகியபின், தலைவியின் தமர் அவளிருப்பறிந்துவந்து, தலைவனைத் தம்மூரகத்தே மணம்புரிந்துகொள்ளும்படி வேண்டுவர். அவ்வேண்டுகோளுக்குத் தலைவன் உடன்பட்டானாயின், அவன் தலைவியின் ஊர் சென்று அவளை வதுவைபுரிந்து வாழ்வுறுவன். இனி, அவ்விருவரது உடன்போக்கில், தலைவியின்சுற்றத்தார் இடைவழியில்வந்து தடைபுரியாமலும், அவர் தலைவியிருப்பறிந்துவந்து தலைவனைத்தம்மூரில்மணம் புரிந்துகொள்ளவேண்டாமலும் போவராயின், தலைவன் அவளைத் தன் மனையில்வைத்து 'வதுவைக்கல்யாணம்' செய்துகொள்வான், இம்மண நிகழ்ச்சிக்குமுன், தலைவன்தாய், அவளாற் கொண்டுவரப்பட்ட தலைமகளின்பொருட்டுச் "சிலம்புகழிநோன்பு" என்பதொன்றுசெய்தல் பண்டைமரபென்று தெரிகின்றது (ஐங்கு-௩௯௯-; நற். ௨௭௯). இங்ஙனந் தலைவியை ஒருவருமறியாவகை உடனழைத்துச்சென்று, அவள் சுற்றத்தார்கொடுத்தலின்றியே மணஞ்செய்துகோடல், முற்காலத்து அறநெறியாகக் கருதப்பட்டதென்பது,

"கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே
புணர்ந்துடன் போகிய கால யான" (கசங.)

என ஆசிரியர் கூறுதலால் அறியலாம். ஆயினும், களவு வெளிப்பட்ட பின் தலைவியின்தமர் உடன்பட்டுக் கொடுத்தலே முற்காலத்துப் பெருவழக்காகவேண்டுமென்பது, "மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலும்" என்று ஆசிரியர் குறிப்பித்தலால் தெளியப்படும். ஆரிய விவாக முறையாகிய காந்தருவத்திலும், ஒருவன் கந்தருவமுறையால் ஒருத்தியைக் கூடியபின்னர், அக்கூட்டம் அவள் பெற்றோர்முதலியவரால் பின்பு அங்கீகரிக்கப்படுமென்பது, "காந்தர்வமென்னும் விவாகத்தால் ராஜரிஷி கன்னியர் பலர் மணஞ்செய்துகொண்டனரெனவும், அவர்கள் தாய்தந்தையரால் பின்பு ஆமோதிக்கப்பட்டனரெனவும் நாம் கேள்விப்படுகின்றோம்" என்று மஹாகவியாகிய காளிதாஸரும் (ஸாகுந்தலம்-அங்கம் ௩),

'காந்தர்ப்ப மென்ப தூண்டாற காதலிற் கலந்த சிந்தை
மாந்தர்க்கும் மடந்தை மார்க்கும் மறைகளே வகுத்த கூட்டம்
வேந்தற்பொற் றோளி னாய் திசைந்தபின் னைக்கு மூத்த
வேந்தற்கும் விருப்பிற் றாகும் வேறுமோ ருரையுண் டென்றாள்."

[இராமா. ஆரண்ய சூர்ப்ப. ௫௪]

என இராமனைநோக்கிச் சூர்ப்பணகை கூறியதாகக் கம்பநாடரும் பாடுதல் காண்க. இனிக் காந்தருவமணம் நிகழ்ந்தபின்பு கரணம் (சடங்கு) நிகழ்தல் உண்டென்று ஆசிரியர் குறிப்பிக்கின்றார் (கற்பியல். ௧, ௨). ஆயின், வடநூல்வழக்கிலே கரணநிகழ்தலும் நிகழாமையுமாகிய இரண்டு முறையும் காணப்படுகின்றன. அருச்சுன சுபத்திரைகளின் காந்தருவமணத்துக்குப்பின் கூறப்படும் கரணச்செய்தியும்,* சகுந்தலை துஷ்யந்தரது தனிக்காந்தருவமணமும்† மேற்கூறிய இரண்டுக்கும்முறையே ஏற்ற உதாரணங்களாம். "(பத்தினி பாரியை தாரம் ஜாயை பிரஜாவதி எனப்பட்ட) ஐவகை மனைவியருள், முதல் நால்வர்மட்டும் அக்கினிசான்றாகத் தர்மசாஸ்திரத்திற்சொல்லப்பட்ட கிரியைகளோடு விவாகஞ்செய்யப்படுவர்; காந்தருவவிவாகத்திற்குக் கிரியைகளில்லை; அது விருப்பத்

*வியாசபாரதம்; தமிழ்மொழிபெயர்ப்பு—ஸ்ரீ ம. வீ. ராமாநுஜாசாரியாரவர்கள் பதிப்பு. ஆதிபர்வம், பக். அ௰௪.

† ஷை. ஷை. ஷை பர்வம், ௬௬௨-முதல் ௬௭௪-ம் பக்கம் வரை.

தானே நடக்கத்தக்கது; இருவர்க்கும் காதலால் மறைவில் மந்திரமில்லா மற் செய்யப்படுவதாகச் சொல்லப்படுகிறது" எனவரும் பாரதவசனம், காரணமில்லாத ஆரியக் காந்தருவமுறையைக் காட்டுதல் காண்க. இங்ஙனமே தமிழரது களவுக்கூட்டத்துக்குப்பின்னும் கரணம் நிகழ்தல் முன்னாளில் வழங்கியதில்லை என்றும், பிற்காலத்தேதான் அம்முறை அவர்க்குள் அமைந்து வழங்கலாயிற்றென்றும் ஆசிரியர் குறிப்பிடுவர், இவற்றை,

"மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம்
கீழோர்க் காகிய காலமு முண்டே"

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரண மென்ப"

என்ற கற்பியற்சூத்திரங்களிற் காண்க. ஆரியராகிய அந்தணர் அரசர் வணிகர் மூவர்க்கும் இருடிகள் ஒருகாலத்தே விதித்துப்போந்த சடங்கொடுகூடிய கற்புமுறையைத் தம் புராதனமுறையொன்றில்நின்றொழுகி வந்த தமிழ்நாட்டார்க்கும் ஐயர் விதிக்கும்படி நேர்ந்த காலமுமுண்டென்றும், அங்ஙனம் விதிக்கநேர்ந்ததன்காரணம்—பொய் வழு முதலிய குற்றங்களின்றி நடைபெற்றுவந்த புராதன ஒழுக்கமாகிய தமிழர்மணத்தில், பிற்காலத்தே அவை புகுந்து அதன் பழஞ்சிறப்பைக் கெடுத்தமையால் அந்தமணம் ஒழுங்காக நிகழ்தற்பொருட்டேயாம் என்றும் ஆசிரியர் கருதினாரதல் மேற்சூத்திரங்களால் உய்த்துணரப்படும். ஈண்டு முதற்சூத்திரத்திற்கண்ட "கீழோர்" என்ற சொல் ஐவகைநிலத்துக்குரிய பண்டைத் தமிழ்மக்களையே பெரும்பான்மை உணர்த்துவதாம்.* என்னை? களவியற்குப்பின் கற்பியலைவைத்து ஆசிரியர் விதித்துப் போந்தனவெல்லாம் "வடவேங்கடந் தென்குமரியாயிடைத்-தமிழ்கூறு நல்லுலகத்து வழக்கே" யன்றிப் பிறநாட்டுவழக்கு ஆகாமையால் என்க.

*நாற்கவிராசநம்பியாரும் "மொழிந்தோர் நால்வரு மொழிந்த நிலத்துறை-இழிந்தோர் தம்முளு முயர்ந்தோரு மெய்துப" (கக) "இழிந்தோர் தமக்கு மிவந்துண்மேம் பட்டவை-யொழிந்தன வாமென மொழிந்தனர் புலவர்" (எச) என்ற சூத்திரங்களினும் அவற்றினுரையினும் நால்வகைவருணத்தவரை உயர்ந்தோர் என்றும், ஐந்திணைநிலமக்களை இழிந்தோர் என்றும் கூறினர். ஆரியவருணப் பாகுபாட்டின் இவ்வைந்திணைமக்கள் அடங்காமைபற்றி இவ்வாறு அவர்கள் ஆரியரால் கருதப்பட்டனராதல்வேண்டும்.

முன்னியல்களிற் களவுக்கூட்டத்துக்குரியர் என்று கூறப்பட்ட தமிழர்க்கு ஆரியர் தெரிசாரணவிதியைக் கூறியதன்காரண மென்னை? என்ற ஆசங்கையை நீக்குதற்கே இச்சூத்திரங்கள் கற்பியலின் தொடக்கத்தே ஆசிரியராற் கூறப்பட்டன என்று உணர்க.

நச்சினார்க்கினியர், "மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணங்-கீழோர்க் காகிய காலமு முண்டே" என்பதற்கு ஆதியூழியில் (கிருதயுகத்து) நான்குவருணத்தாரும் தம்முள் மணம்புரிந்துவந்தனரென்றும், இரண்டாம் ஊழி (திரேதாயுகம்) தொடங்கி, வேளாளர்க்கு மற்ற மூவருடன் மணம்புணர்தல் விலக்கப்பட்டதென்றும் கருத்துப்பட உரைகூறி, முதலூழியில் வேளாளர் மற்றைமூவருடன் மணம்புரிந்ததைக் குறிக்கும் இலக்கியம் பிற்காலத்து வீழ்ந்ததென்று எழுதுவர். அதனை அச்சூத்திரவுரைநோக்கி உணர்க.

இனிப் "பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்—ஐயர் யாத்தனர் கரண மென்ப" என்ற சூத்திரத்திற்கு, அவ்வுரையாளர், "வேதத்திற் கரணமொழிய ஆரிடமாகியகரணம் பிறந்தவாறும் அதன் காரணமுங் கூறுகின்றது" என்று அவதாரிகையும், "ஆதியூழி கழிந்தமுறையே அக்காலத்து அந்தந்தொடங்கி இரண்டாமூழி முதலாகப் பொய்யும் வழுவுஞ் சிறந்துதோன்றிய பிற்காலத்தே, இருடிகள் மேலோர்காரணமுங் கீழோர்காரணமும் வேறுபடக் கரணங்கள் கட்டினார்" என்று பொருளும், "இவ்வாசிரியர் ஆதியூழியின் அந்தத்தே இந்நூல்செய்தலின், முதனூலாசிரியர்கூறியவாறே களவு நிகழ்ந்தபின்னர்க் கற்பு நிகழுமாறுங் கூறித் தாம் நூல்செய்கின்றகாலத்துப் பொய்யும் வழுவும்பற்றி, இருடிகள் நூல்கள்யாத்தவாறுங் கூறினார், அக் களவினவழிவந்தகற்புங் கோடற்கென்றுணர்க" என்று விசேடமுங் கூறினார். இதனால், மேலோர்காரணமும் கீழோர்காரணமுங் கூறியதே இச்சூத்திரமென்பது, அவ்வுரைகாரர் கருத்தாதல் காண்க.

இவ்வாறு இருடிகளால் விதிக்கப்பட்ட பிற்கால விவாகமானது, 'இவளை நீ இன்னவாறு பாதுகாக்க' எனத் தலைவனுக்கும், 'இவனுக்கு இன்னபடி நீ குற்றவேல் செய்தொழுக' எனத் தலைவிக்கும் அங்கியங்கடவுள் அறிகரியாக மந்திரவகையால் வேள்வியாசான் கற்பிப்பதாகும். இதனைக் "கரணம்" என்றுரைப்பர் தொல்காப்பியர். கரணம்—விவாகத்துக்குச்

சிறப்புடைய காரணம். முற்காலத்து நிகழ்ந்துவந்த கரணச்செய்திகள் சில அடியில்வரும் அகநானூற்றடிகளில் அழகாகக்கூறப்படுதல் காண்க:-

"உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகாற்
றண்பெரும் பந்தர்த் தருமணன் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் டிங்கட்
கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகன் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவும் முறைமுறை தரத்தரப்
புதல்வர்ப் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பினின் வழாஅ நற்பல வுதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த வீரித ழலரி
பல்லிருங் கதுப்பி னெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்
கல்லென் சும்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
ஓரிற் கூட்டிய உடன்புணர் கங்குல்" (அகம்-அசு)

இக்கரணத்தை "வதுவைக்கலியாணம்" என்பது பண்டைவழக்கு (களவி-பக். கஉள; அகநா. அசு அரும்).

இங்ஙனம், வேள்வியாசான் காட்டியமுறையே, அங்கிசான்றாக மணமுற்றபின், தலைவன் தலைவி யிருவரும் இல்லறநிகழ்த்துங் காலத்தே—தம்முட்கூடிமகிழ்தலும், சிறுகோபத்தாற் புலவியும், அது முற்றிப் பெருங்கோபமாகுமிடத்துப் பிரணயகலகமும், அக்கோபங்களைத் தீர்த்துக்கொண்டு இருவருங் கூடலும், பலதொழில்களின்பொருட்டு இடையிடையே பிரிதலும், அதுபற்றி இருவர்க்கும் ஆற்றாமை பெருதலும், பிரிந்துவந்து கூடிக்களித்தலும், பின்பு இல்லிருந்து நல்லறஞ் செய்கையும் உலகத்துத் தலைமக்களாயுள்ளாரிடம் இயல்பாக நிகழ்வன வன்றே? இவற்றையே ஆசிரியர் மகிதல், புலவி, ஊடல், உணர்தல், பிரிவு

என வகுத்துக் கற்பியலிற் கூறுவாராயினர். இவற்றுள் மலிதல் என்பது இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலியவற்றால் இருவரும் மகிழ்தலாம். புலவி என்பது இருவருங் கூடுங்காலத்துச் சிறிது மனம் வேறுபடுதல். ஊடல் என்பது அவ்வேறுபாடு நீட்டித்தல். இங்ஙனம் புலவியு மூடலும் நிகழ்தற்குக் காரணம், தத்தம் மனங்கட்கு ஒவ்வாத செய்திகள் சில நடந்தனவாக ஒருவரையொருவர் ஐயப்படுதலாம். இவ்வையம் தலைவியண்ணே பெரிதும் நிகழ்வதென உணர்க. இதனைக் காரணங்காட்டியேனும் வேறுவகையாலேனுந் தெளிவித்தல், உணர்த்தல் எனப்படும். இவற்றுட் புணர்ச்சியின்மகிழ்தலாகிய மலிவு, தலைவன் தலைவியைப் பிரியாதுநின்று இல்லறநிகழ்த்துங் காலத்தும், ஏனையவை அவன் கரந்த ஒழுக்கமுடையனாய்ப் பின்பு தலைவியை அடைந்தகாலத்தும் நிகழ்வன. இவ்வாறு மலிவு முதலிய ஐந்தும்பற்றி நிகழ்வனவே இக்கற்பியலில்வருங் கூற்றுக்கள் பெரும்பாலுமென உணர்க. இக்கூற்று நிகழ்த்தற்குரியார் பன்னிருவர் என்பர்; அவர்:—பாணர், கூத்தர், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் என்ற அறுவரும், முன் களவியலிற்கண்ட பார்ப்பான் பாங்கன் முதலிய அறுவருமாவர். அவருள்—

பாணர்:—பண்ணுக்கு உரியரானமையால், இவர்க்கு இப்பெயர் வழங்கியது. இவர் யாழ்வாசினை முதலியவற்றால் தமிழ்த்தலைவரை மகிழ்வுறுத்துபவர். இக்கூட்டத்தாரில் யாழ்ப்பாணர், இசைப்பாணர், மண்டைப்பாணர் எனப் பலபிரிவினர் உண்டு (பக்-உகஉ). பாணரைப் பற்றிய செய்திகளாகப் பண்டைநூல்களாற் றெரியவருவன வருமாறு:— இவர் பண்டைத் தமிழ்க்குடிகளுள் ஒருவரென்பது "துடியன் பாணன் பறையன் கடம்பனென்—றிந்நான் கல்லது குடியு மில்லை" என்னும் புறப்பாடற்பகுதியால் (௩௩௫) விளங்கும். இவர் இயலிசைகளிற் பெரிதும் வல்லோராக இருந்தமையால், தமிழரசரும் ஏனைத்தலைவர்களும் இன்னோரை ஆதரிப்பதைத் தங்கள் பெருமையாகக் கொண்டொழுகினர். "பாணர் சுற்றத்துப் பசிப்பகை யாகி" "பாணர் நாளவை" என்பன முதலாக அவ்வரசர் சிறப்பிக்கப்படுதல் காண்க. ஆரியமக்கள் இவரை "மாதங்கா"* என வழங்குவர்; இதற்குக் கிராமமத்தியத்தை அடையா

---

* கன்மயக்கமுள்ள பிராமணப்பெண்ணினிடம் சூத்திரனை நாவிதனுக்குப் பிறந்தவராதலால், சண்டாளசாதியின ரென்பர். வியாசபாரதம், தமிழ்மொழி பெயர்ப்பு—ஸ்ரீ ம. வீ. ராமாநுஜாசாரியர்பதிப்பு—அநுசாஸன பர்வம். பக்-கஅ.

நவர் என்பது பொருளாம். இதனால், இவர் இழிகுலத்தாராகக் கருதப்பட்டுவந்தமை புலனாகும். "புலைமகனாதலிற் பொய்ந்நின் வாழி" பக்-௩௯௪) 'புலையாத்தின்னி' (திருக்கோ-௩௮௯) என இவரை வழங்கலுங் காண்க. இவர்க்கு அரசர் வழங்கிவந்த பரிசுகளிலே, பொற்றாமரைப் பூச்சூட்டுதலைத் தமிழ்நூல்கள் சிறப்பித்துக் கூறுகின்றன. தமிழ் நாட்டில் இவர் பிரபலம்பெற்றிருந்தனர் என்பது—பாணகவி இயற்றிய காதம்பரியின் தொடக்கத்தே, கிளியொன்றேந்தி வடநாட்டரசனொருவனிடஞ் சென்ற மதங்கஜாதிப்பெண்ணின் வரலாறு கூறுமிடத்தில், அவளைத் தென்னாட்டவளாகக் கூறிச்செல்லுதலாலும் விளங்கும். "அம்மாது (அரசனைப்) பார்த்துவிட்டுத் தூரத்திலிருந்தவாறே தன்வரவை அரசற்கு உணர்த்தவிரும்பி மூங்கிற்கழியொன்றெடுத்து அச்சபையின் தரையில் ஒருமுறை அடித்தாள்" என்று அக்கவி எழுதுகின்றார். இதனால் மூங்கிற்கோல்கொண்டு சபையிற்செல்லுதல் பாணரது பழைய முறையென்பது புலப்படும். இவ்வழக்கு, "நுணங்குஞ் சிறுகோல் வணங்கிறை மகளிரொ டகவுநர்" "நுண்கோல் கொண்டு களம்வாழ்த்தும் அகவலன் பெறுக மாவே" எனவரும் அகநானூற்றினும் "வெண்கடைச் சிறுகோ லகவன் மகளிர்" எனக் குறுந்தொகையினும் (௨௯௮) வரும் செய்திகளுடன் ஒப்பிடத்தக்கது. பிறவும் இப்பாணர்செய்திகள், "பழந்தமிழ்க்குடிகள்"* என்ற தலைப்பெயரின்கீழ் யாமெழுதிய கட்டுரையுட் காண்க.

இத்தகைய பாண்கூட்டத்தார், மலையாளநாட்டிலே இன்றும் தம் பழந்தொழிலுடையாராய்வாழ்தல் குறிப்பிடத்தக்கதாம். இவர் அந்நாட்டில் திருவாங்கப்பாணன், மீன்பிடிபாணன், குடைகட்டிப்பாணன், புள்ளுவன் என நான்குபிரிவினராக உள்ளனரென்றும், ஆடல் பாடல் மத்தளங்கொட்டல் முதலியவற்றில் இவர் வல்லவரென்றும், ஒவ்வோராண்டிலும் வரும் கற்கடகமாதத்து வைகறைகளிலே, பிராமணர் நாயரிவர்களின் வீட்டுமுகப்புக்களில் நின்றுகொண்டு நல்லிசைப்பாடல் பாடியும் மத்தளம் கொட்டியும் "துயிலுணர்த்தல்" என்ற விசேடம் இவரால் நடைபெறுகின்றது என்றும், அந்நாட்டில் தாழ்ந்தவகுப்பினராகவே இவர் கருதப்படுகின்றாரென்றும் தோல்வேலை குடைகட்டுதல் மத்தளங்

* "செந்தமிழ்" தொகுதி-௪; பகுதி-௬, பக்-௨௪௮.

கட்டுதல் முதலியன இன்னோர் தொழில்களாமென்றும் பிறவாறுங் கூறப்படுகின்றன.* மீன்பிடித்தல் இவரது பழந்தொழிலென்பது,

"பச்சூன் பெய்த சுவல்பிணி பைந்தோற்
கோள்வல் பாண்மகன் தலைவலித் தியாத்த
நெடுங்கழைத் தூண்டில்" (பெரும்பாண்-உஅரு-உஅச)

"அஞ்சி லோதி யசைநடைப் பாண்மகள்
சின்மீன் சொரிந்து பன்னெற் பெறூஉம்
யாணரூர" (ஐங்குறு. சஎ—க)

என்பனவற்றால் அறியத்தகும். இங்ஙனமே துயிலுணர்த்தும் தொழிலும் இவர்க்குரியதென்பது "விறலியும் பாணனும் நம்வேந்தற்குத் துயிலெடைமங்கலம்பாடவந்துநின்றார்" எனப் பேராசிரியர் கூறுதலானும் உணரப்படும் (திருச்சிற்றம்-நஎரு).

கூத்தர்:—இவர் நாடகமாடித் தமிழ்மக்களை மகிழ்விப்பவர். நாடகமாவது கதைதழுவிவருங் கூத்தென்பர் அடியார்க்குநல்லார் (சிலப்பதி-பக். கூச). இவர் "பாரசவரும் வேளாளரும் பிறரு மவ்வாடற்றொழிற்கு உரியோர்களும், பாரதிவிருத்தியும் விலக்கியற்கூத்தும் கழாய்க்கூத்தும் ஆடுபவராகச் சாதிவரையறை யிலர்" என்றும், எண்வகைச்சுவையும் மனத்தின்கட்பட்ட குறிப்புக்களும் புறத்துப்போந்து புலப்பட இவர் ஆடவல்லவரென்றும் கூறுவர் (பக். உகக-உகஉ). அன்றியும், "அரசர்க்குத் தொன்றுதொட்ட நன்றும் தீதும் கற்றறிந்தவற்றை அவைக்கெல்லாம் அறியக்காட்டுதற்கு இவர் உரியர்"எனவும் கூறப்படுவர் (பக-சகரு) இவர்க்குரிய கூற்றுக்களில் தொல்லவையுரைத்தல் நுகர்ச்சியேத்தல் ஊடல்தணித்தல் உறுதிகாட்டல் முதலியவை சிறந்தன என்பர் (கக-அ). இக்கூற்றுக்கட் கெல்லாம் "இலக்கியம் இக்காலத் திறந்தன" என்றார் நச்சினார்க்கினியர். இக்கூத்தர் "நாடகசாலையர்" எனவும் படுவர். இவர்க்கும் மேற்கூறிய பாணர்க்கும் உரிய புறத்திணையியற்பகுதிகளைத் "தாவினல்லிசை" (கூக) என்ற சூத்திரத்தால் உணர்க.

விறலியர்:-தாமே ஆடலும் பாடலும் நிகழ்த்திக் கூத்தரைப்போலவே நாடகநவிற்றவல்ல பெண்பாலர். இவர் புறத்துப்போந்து †விறல்

* Castes and Tribes of Southern India. See Panan.

† விறல், சத்துவம், மெய்ப்பாடு, குறிப்புவரையறை என்பன ஒருபொருட் கிளவிகள்.

படப் பாடி யாடுதலால், 'விறலியர்'எனப் பெயர்பெற்றனரென்றும், கூத்தர்போல இவருஞ் சாதிவரையறையிலரென்றுங் கூறுவர் (பக். உகஉ). இவர் தெருவில்நின் றாடுவது முண்டு (பதிற்-எஎ).

பரத்தையர்:—இவர் காமக்கிழத்தியராவர், நச்சினார்க்கினியர் இவரைப்பற்றிக் கூறுவன வருமாறு:—"காமக்கிழத்தியாவார்-கடனறியும் வாழ்க்கையுடையாராகிக் காமக்கிழமை பூண்டு இல்லறநிகழ்த்தும் பரத்தையர்; அவர் பலராதலிற் பன்மையாற் கூறினார். அவர், தலைவன் இளமைப்பருவத்திற் கூடி முதிர்ந்தோரும், அவன் தலைநின்றொழுகப்படும் இளமைப்பருவத்தோரும், இடைநிலைப்பருவத்தோரும், காமஞ்சாலா இளமையோருமெனப் பலபகுதியராவர். இவரைக் "கண்ணிய காமக் கிழத்தியர்" எனவே, கண்ணாத காமக்கிழத்தியரும் உளராயிற்று; அவர் கூத்தும் பாட்டும் உடையாராகிவரும் சேரிப்பரத்தையரும் குலத்தின்கண் இழிந்தோரும் அடியரும் வினைவலபாங்கினோரும் பிறருமாம். இனிக் காமக்கிழத்தியரைப்—பார்ப்பார்க்குப் பார்ப்பனியை ஒழிந்த மூவரும், ஏனையோர்க்குத் தங்குலத்த ரலலாதோரும், வரைந்துகொள்ளும் பரத்தையருமென்று உரைப்பாரும் உளர்" என்பது (௩கஎ—அ). நம்பியாரும் "ஒருவன் றனக்கே யுரிமை பூண்டு—வருகுலப் பரத்தையர் மகளிராகிக்—காமக்கு வரைந்தார் காமக் கிழத்தியர்", "யாரையும் நயவா வியல்பிற் சிறந்த—சேரிப் பரத்தையர் மகளிராகிக்—காதலிற புணர்ந்தோர் காதற் பரத்தையர்", "அவருளும் வரைதற் குரியா ருளரே" என்றார்(கக௩—௫). இவர் கூற்றுக்களையெல்லாந் தொகுத்துப் "புல்லுதன்மயக்கும்" (க௫க) என்ற சூத்திரத்து ஆசிரியர் கூறுவர்.

அறிவர்:—இவர் மூன்றுகாலமுந்தோன்ற நன்குணர்ந்தோரும் புலனன்குணர்ந்த புலமையோரும் ஆவர் (பக்-எ௫க). குற்றமற்ற ஒழுக்கங்கள் முக்காலத்தும் வழங்கும் முறைமையை ஆராய்ந்துணரும் முழுதுணர்வுடையார் இவரென்றும் (பக்-க௬௫) "யோகிகளாய் உபாயங்களால் முக்காலமுமுணர்ந்த மாமூலர்முதலியோர் இவ்வறிவரில் ஒருசாரார் என்றும் (பக்-க௬எ) கூறுவர் நச்சினார்க்கினியர். நம்பியார் "அறிவர் கிழவோன் கிழத்தியென் றிருவர்க்கு—முறுதி மொழிந்த வுயர்பெருங் குரவர்" (கஉஉ)என்றார். தலைவனுந் தலைவியும் இவ்வறிவரது ஏவலைக் கடவாது ஒழுகுவர். முக்காலத்துக்கும் தம்குலத்துக்கும் பொருந்து

மாறு அவர்க்கு நல்லனவற்றைக் கூறுதலும் தீயவற்றை விலக்குதலும் இடித்து உறுதிகூறி ஒரெல்லையிலே அவரை நிறுத்துதலும் இவ்வறிவரது இயல்புகளாம் (௬௫௩-௫). இவர் மலைநாட்டாரது கல்யாணத்துக்கு நல்லநாள்பார்க்கவல்ல சோதிடராகவும் கலித்தொகை கூறும் (௩௯).

கண்டோர்:—இவர் வரையறையிலர்; "தீதுடைப் புலவி தீர்த்தலும் அவன்வரல்-காதலிக் குணர்த்தலும் கண்டோர்க் குரிய" என்பர் நம்பியார் (௯௯).

இவ்வறுவரோடு களவியலிற் கண்ட பார்ப்பான் பாங்கன் தோழி செவிலி தலைவன் தலைவி என்பார் கூற்றுக்கள் இக்கற்பு முறைக்கேற்பவரும். இவருட் பார்ப்பார்க்குக் 'காமநிலையுரைத்தல்' (௧௭௭) முதலிய கூற்றுக்கள் ஆசிரியராற் கூறப்பட்டனவாயினும், இவை கடைச்சங்ககாலத்தேயே வழக்கு வீழ்ந்தன என்பது—"இவையெல்லாந் தலைச்சங்கத்தாரும் இடைச்சங்கத்தாருஞ் செய்த பாடலுட் பயின்றபோலும்; இக்காலத்தில் இலக்கிய மின்று" என நச்சினார்க்கினியர் எழுதலால் விளங்கும். மேற்கூறிய பன்னிருவருமன்றி, ஊரார் அயலோர் சேரியிலுள்ளோர் ஆகிய பெண்டிரும், நற்றாய் தந்தை தன்னையரும் இக்கற்புப்பற்றிய செய்யுள் வழக்கில் வருதற்குரியராயினும், இவர் பேசியதாக முற்குறித்தவர்களாற் கொண்டு கூறப்படுவதல்லது தாமே கூற்றுநிகழ்த்தற்குரியரல்லர் (சூ. ௫௦௪). இவருள், பார்ப்பார் அறிவரென்ற இருவர்கூற்றுக்களும் எல்லாரும் கேட்டற்குரியர் (௫௧௦) எனவும், ஏனையர்கூற்றுக்கள் சிலர்பலராற் கேட்கப்படுமெனவும் புலனெறிவழக்கஞ்செய்யப்படுமென்பர். இனி, மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு என்று கற்பியல்வகைகளாக ஆசிரியர்கூறியவற்றை முறையே நோக்குவோம்.

## மலிவு.

இவற்றுள் 'மலிவு' என்பது கூடிமகிழ்தலாம். தலைவன் கரணமுறைப்படி தலைவியை மணம்புரிந்தபின்னர் நிகழுஞ் செய்திகளையும், அக்காலத்து அவ்விருவரும் கலவியான் மகிழும் "மகிழ்வை" யும்பற்றி ஆசிரியர், "கரணத்தி னமைந்து முடிந்த காலை" என்னுந் தலைவன் கூற்றுணர்த்துஞ் சூத்திரத்தில் (௧௪௪) "மெல்லென் சீறடி புல்லிய வகையினும்" என்பதுவரை கூறுகின்றார். இவற்றிற்கண்ட செய்திகளு

சில, தொல்காப்பியர்காலத்து வழங்கிய இல்லறமுறைகளை விளக்குதலால் அவற்றைக் குறிப்பிடுவோம்.

"கரணத்தி னமைந்து முடிந்த காலை—நெஞ்சுதளை யவிழ்ந்த புணர்ச்சி":—"கரணச் சடங்குகளால் ஒரு குறைவுமின்றி, மூன்றிரவில் முயக்கமில்லாது, மதியுங் கந்திருவரும் அங்கியுமாகிய மூவர்க்கும் ஏற்ற வாறு பள்ளிசெய்தொழுகி, நான்காம்பகலெல்லை முடிந்தகாலத்து, மூன்றுநாளுங் கூட்டமின்மையால் நிகழ்ந்த மனக்குறைதீர நான்காம் நாள் அவ்விருவருங் கூடுதல்"* என்பர் நச்சினார்க்கினியர். இவர் கூறிய செய்தி, விவாககாலத்துச் செய்யத்தக்கதாக இருடிகளால் விதிக்கப்பட்ட ஒருவகை விரதமாகும். இதனையே, "மூன்றிரவு தம்பதிகள் உப்பில் லாத ஆகாரம் உட்கொண்டு, பிரமசரியவிரதம் பூண்டவர்களாய்த் தரை யிற் சயனஞ்செய்பவேண்டும்" என்று போதாயனமும் (படலம் ௩; காண். அ.) ஏனைய கற்பசூத்திரங்களும் கூறுவன. இவ்வாறு மூன்றுநாட்கூட்ட மின்மைக்குக் காரணம்—அந்நாள்களிற் சோமன், கந்தருவன், அக்கினி என்ற மூவரும் முறையே பெண்ணை அநுபவிப்பதாகவும், நான்காநாளே அக்கினி அவளைத் தலைவனுக்கு அளிப்பதாகவும் கருதப்பட்டமையே யாம். ஆரியவிவாகத்தில், வரன் வதுவைநோக்கிக்கூறும் வேதமந் திரங்களும் இச்செய்திபற்றியனவேயாம். அவை வருமாறு:—"சோமன் முதலில் உன்னை அறிந்தான்; பின் கந்தர்வன் உன்னையறிந்தான்; உன் புருஷரில் மூன்றாம்வான் அக்கினி; மானுஷபுத்ரனாகிய நான் உன் நான் காம் புருஷன். சோமன் உன்னைக் கந்தர்வனுக்குக் கொடுத்தான்; கந்தர் வன் உன்னை அக்கினிக்குக் கொடுத்தான்; அக்கினி உன்னை சம்பத்துட னும் சந்தானத்துடனும் எனக்குக் கொடுத்தான்" எனக் காண்க. இனி, மூன்றுநாள் வதூவரர்கள் ஓரமளியி லிருந்தும் கூடாதுறைவராயின், அவர்க்கு உத்தமபுத்திரன் பிறப்பான் என்று சொல்லப்படுகின்றது. இவ்வாறு விவாகமுடிவில் "நெஞ்சுதளையவிழ்ந்த புணர்ச்சி" கூறப்படுத லால், இவ்விரதம், இக்காலத்துப்போலப் பேரவியாகக் கொண்டாடப்படுத லன்றி, ஆசிரியர்காலத்துத் தமிழ்நாட்டில் ஒழுங்காக அநுஷ்டிக்கப்பட்ட மை தெரியவருகின்றது. அகநானூறு அசு, ௧௩௬-ம் பாடல்களிலே இக்கூட்டங் கூறப்படுதல் காண்க.

---

* நாலாநாள் இருவரும் உடன்புணரும் அறையைச் 'சதுர்த்தியறை' என வழங்குவர் (அகநா, அசு அரும்).

"சொல்லென, ஏனது சுவைப்பினும் நீ கை தொட்டது, வானோ ரமுதம் புரையுமா லெமக்கென, அடிசிலும் பூவுந் தொடுதல்":— *அமிர்தத்துக்கு மாறாகிய நஞ்சைநுகரினும் நீ கையாற் றீண்டின பொருள் உறுதியைத் தருதலால், தேவர்களுடைய அமிர்தத்தை ஒக்கும் எமக்கெனப் புனைந்துரைத்துத் தலைவன் புகழ, அடிசிலும் பூவுந் தலைவி தொடுதல். இதனால், தலைவிகையாற் படைக்கப்பட்ட உண்டியைத் தலைவன் முதலில் உண்ணுதற்குச் சடங்குநிகழ்தல் உண்டென்பது விளங்கும். இது, பிராமணருள் விவாகம் அல்லது ருதுசாந்தி முகூர்த்தத்துக்குப்பின் அமாவாசைகழித்துத் தொடங்கிப் பௌர்ணமி காறும் நிகழ்த்தப்படும் "ஸ்தாலீபாகம்" என்ற சடங்குபோன்றதாகத் தோற்றுகின்றது. அன்றேல், தலைவியைப் புகழ்வதுமட்டிற் றலைவன் குறிப்பெனல்வேண்டும்.*

"அந்தணர் தேத்தும் சான்றோர் தேத்தும்-அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும்-ஒழுக்கங் காட்டிய குறிப்பு":-*வேட்பித்த ஆசிரியனும் கற்பித்த ஆசிரியனுமாகிய பார்ப்பாரிடத்தும், முற்றுமுணர்ந்து ஐம்பொறிகளை அடக்கியவரிடத்தும் முடிவில்லாத சிறப்பினையுடைய தேவர்களிடத்தும் ஒழுகும் ஒழுக்கத்தைத் தான் (தலைவன்) தொழுது காட்டிய குறிப்பு. இதனால், தன்னையன்றித் தெய்வந் தொழாதாளுக்கு— இத்தன்மையோர் தொழற்குரியர் என்று தொழுதுகாட்டியவாறும்.*

"அந்தரத் தெழுதிய எழுத்தின் மான-வந்த குற்றம் வழிகெட ஒழுகல்":- *களவுக்காலத்து உண்டாகிய பாவம் ஆகாயத்தெழுதிய எழுத்து அழியுமாறுபோல அழியும்படி, பிராயச்சித்தஞ்செய்து ஒழுகுதல். களவுக்காலத்துண்டாய பாவமாவது—தீண்டத்தகாத நாள்களினும், தீய விராசி நாள்களினும் தலைவன் கூடியது முதலியனவாம். "மறைந்த வொழுக்கத் தோரையு நாளுந்-துறந்த வொழுக்கங் கிழவோற் கில்லை" (கடு) என ஆசிரியரும், "பூப்புநிகழ்காலத்து வரையாது களவொழுக்கம்நிகழ்த்தினாக்கு 'அந்தரத்தெழுதிய..........ஒழுகல்' என்றதனாற் பிராயச்சித்தம் விதிப்பாகலின" (பக்-ருடுரு) என்று நச்சினார்க்கினியருங் கூறுதலால் இதனை அறிக. இதனால், பண்டைக்காலத்தே காந்தருவவிவாகமுறையில், நாள்கோள்களைப்பற்றிய விதி விலக்குகள் தமிழ்மக்களுள் விசேடமாக வழங்கியதில்லையென்பது தெரியலாம்,*

ஆனால், ஆரியமக்களாற் பிற்பட்டு விதிக்கப்பட்ட கற்புக்காலத்தில் நல்ல சடங்குகளே கூட்டத்துக்குக் கொள்ளப்பட்டன என்பது ஈண்டு ஆசிரியர் கூறிய பிராயச்சித்தத்தாற் பெறப்படும்.

"நோன்மையும் பெருமையும் மெய்கொள வருளிய-பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித்-தன்னி னாகிய தகுதி":—அஃதாவது—பொறையும் பெருமையுமுடைய மகவைத் தலைவி தன்வயிற்றகத்தே கொள்கையினாலே, ஆராய்ச்சி மிக்க அந்தணரோடுகூடிச் செய்யத்தகுஞ் சடங்குகளைச் செய்யுந் தகுதியாம். இதனாற் குழவிபிறந்ததும் செய்யத் தகுஞ் சடங்குகளைத் தொல்காப்பியனார்காலத்தே, தமிழ்மக்கள் நடத்தி வந்தமை புலனாம். "அரிமயி ரொழுகுநின் னவ்வயி றருளி-மறைநவி லொழுக்கஞ் செய்து மென்றனர்-துனிதீர் கிளவிநங் தவத்தினும்—நனி வாய்த் தனவால் முனிவர்தஞ் சொல்லே" என்பது இதற்கு இலக்கிய மாகும்.

"புதல்வற் பயந்த புனிறுசேர் பொழுதில்-நெய்யணி மயக்கம் புரிந் தோள் நோக்கி-ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியுஞ்-செய்பெருஞ் சிறப் பொடு சேர்தல்":—அவ்வாறு புத்திரனைப்பெற்ற புனிறு (ஈன்றணிமை) சேர்பொழுதில், சுற்றத்தோரும் எண்ணெயாடும் மயக்கம்புரிந்த தலைவி யை முகமன்கூறுதற்கு, முனிவர்பொருட்டுந் தேவர்கள் புத்திரனைப் பாதுகாத்தற்பொருட்டும் செய்யுஞ் சிறப்பொடு சேர்தல். சிறப்பாவன—பிறந்த புதல்வன் முகங்காண்டல், ஐம்படைபூட்டுதல், பெயரிடுதல் முதலியன. [ஐம்படை—காவலாகக் குழந்தைகளின்கழுத்திற் பூட்டுவ தோர் அணி. காத்தற்கடவுளாகிய திருமாலினது பஞ்சாயுதங்கள் போலப் பொன்னாற்செய்யப்படுதலின் அப்பெயர் பெற்றது] இனி, ஆசிரி யர் கூறியதற்கொப்பப் புதல்வரைப்பெற்ற புனிறுதீர மகளிர் இரவிற் சென்று நெய்யணிமயக்கத்தோடு குளத்தி னீராடலை—

"விரவிய மகளி ரேந்திய தூமத்துப்
புதல்வரைப் பயந்த புனிறுதீர் கயக்கந்
தீர்வினை மகளிர் குளனாடு ரவமும்" (மணிமே எ. எச—எக)

"கணவ ருவப்பப் புதல்வற் பயந்து
பணைத்தேந் திளமுலை யமுத மூறப்
புலவுப்புனிறு தீர்ந்து பொலிந்த சுற்றமொடு
வளமனை மகளிர் குளநீ ரயர" (மதுரைக்காஞ்சி-கா00—கூ)

என்னுஞ் சான்றோர்கூற்றுக்களிலும், "பதுபுத்திரியாகிய சகுந்தலை பத்தாநாள் புத்திரனுடன்கூட மிக அழகான தடாகத்திற்குப்போய் ஸ்நானஞ்செய்து பிள்ளையை எடுத்துக்கொண்டு தேவதாபூஜை செய்வதற்காக ஆசிரமத்தினின்று புறப்பட்டாள்" எனவரும் மஹாபாரதவசனத்தும்* ஆபத்தம்பத்தின் ௧௫-ம் கண்டத்துள்ள ௮-ம் சூத்திரத்தும் கண்டு கொள்க. இதனால், வாலாமை (தீட்டு) நீங்கத் தலைவி சுற்றத்தாருடன்புரியும் இந் 'நெய்யணிமயக்கம்' பிரசவித்த பத்தாம்நாள் நிகழ்வதென்பது தெரியலாம். இவ்வழக்கம் தென்பாண்டிநாட்டார் இன்றுங் கொண்டொழுகுவதென்பது அறியத்தக்கது. இதனால், மகப்பேற்றுக்காலத்து நிகழும் வைதிகக்கிரியைகள் பலவும் தொல்காப்பியனார் கற்பியலிற்கூறுதல் கண்டுகொள்க. இவ்வாறு, காரணம் நிகழ்ந்து தலைவன் தலைவியுடன் கூடி மகிழ்கின்ற மலிவுக்காலத்தில் நிகழும் வைதிகமும் இலௌகிகமுமாகிய செய்திகள் ௧௪௯-ம் சூத்திரத்து "உறலருங்குண்மையின்" என்னுங் கூற்றுவரை ஆசிரியராற் கூறப்படுதல் உணர்ந்துகொள்க.

## புலவி ஊடல் உணர்வுகள்.

மேற்கூறியவாறு, தலைவனுந் தலைவியும் இல்லறத்தில் நின்று நல்லறஞ்செய்தும், புணர்ச்சியின்மகிழ்ந்தும், புத்திரப்பேறடைந்தும் வாழுங்காலத்தே, தலைவன் வேறுசிலபெண்டிரை விரும்பிக் கொள்ளுதலும் உண்டு. இவர் பின்முறையாக்கிய வதுவையருங் காமக்கிழத்தியரும் காதற்பரத்தையரும் ஆவர். இவருட் பின்னிருவரையும் பற்றிப் "பரத்தையர்" என்ற தலைப்பின்கீழ் முன்னர் விளக்கப்பட்டது. "பின்முறைவதுவை"யரென்பார், தலைவியோடொத்த தகுதியுடையராய்த் (பக். ௪௯௧) தலைவனால் அங்கிசான்றாக வேள்வி முடித்து மணக்கப்பெற்ற வேறுமனைவியராவர். அந்தணர், தம்மிற்றாழ்ந்த அரசர்முதலிய மூன்று வருணங்களிலும், அரசர் அங்ஙனம் இரண்டுவருணங்களிலும், வணிகர் சூத்திரவருணத்திலும் இம்மனைவியரை மணப்பரெனவும், மகப்பேறு பற்றி ஒத்தகுலத்தும் வேறு மணந்துகொள்வதுண்டென்றுங் கூறுவர் (பக். ௪௧௮). இப் பின்முறைவதுவையாளைத் தலைவி தன்னின் இழிந்தாளாகக் கருதாது. கணவன் ஏவற்படி, அவளை ஒப்பக்கருதி உரிய

*வியாஸபாரதம், ஆதிபர்வம், ௪௭௫-ம் பக்கம் காண்க (ஸ்ரீ: ம. வீ. இராமாநுஜாசாரியரவர்கள் பதிப்பு).

சிறப்புச்செய்தல் அவள் கற்புமுறைக்கடுத்ததாம் (௧௭௪). இதனால், பண்டைக்காலத்திற் பலதாரமணம் இந்நாட்டிற் பரவியிருந்தமை விளங்கும். இனிக் காமக்கிழத்தியரும் ஒருவற்கே உரியவராய்க் கற்புக்கடம் பூண்டவரேனும், பரத்தையர் குலத்தவராதலின், பின்முறைவதுவையர் போலத் தலைவியாதற்கு உரியால்லர். இங்ஙனம், பரத்தையரிற் கற்புக் கடம்பூண்டவரும் முற்காலத்து இருந்தனரென்பது, கோவலன் காமக்கிழத்தியாகிய மாதவியின்சரிதம் மணிமேகலையிற் கூறப்படுதலால் நன்கு விளங்கும். இவ்வாறு பலவாறு விரும்பிக்கொள்ளப்பட்ட பரத்தையர் முதலியோரிடத்துக் காதல்கொண்டு, தலைவன் அவர்மனைகளிற் றங்கி மகிழுங்காலத்துத் தலைவிக்குப் பெருவருத்தமும், அவர்களை நீங்கித் தலைமகள்பால் அவன் வருங்காலத்து அவட்குப் புலவியூடல்களும், அவற்றைத் தலைவன் தீர்த்துக் கூடலும் இக் கற்புக்காலத்து நிகழ்வனவாம். "புலத்தலிற் சிறந்தது கற்பே யதுதான்-இரத்தது மீதலு மிவையுள் ளீடாப்-பரத்தையுள் ளதுவே." என்னும் பரிபாடலடிகளில் (௧௬-௧௭), தலைவன் பரத்தைமை கற்புக்காலத்துக் குரியதாகவே கூறப்படுதல் காண்க. "ஆடவர்க்குப் பிரிவொன்று உளதாதன்மேலும், அதுதான் பரத்தையர்மாட்டாதலும், அதனையறிந்து மகளிர் ஊடிநிற்றலும், அவ்வூடலைத் தவறுசெய்தவர் தாமே தம் தவறின்மைகூறி நீக்கலும், பின்னும் அவ்விருவரும் ஒத்தவன்பினராய்க் கூடலுமன்றே-முன் வரைந்தெய்தினர்பெற்றபயன்" என்று, "ஊட லுணர்தல் புணர்த லிவை காமம்-கூடியார் பெற்ற பயன்" என்ற குறள் (௧௧0௯) உரையிற் பரிமேலழகரும் எழுதுவர். இங்ஙனம் புலவியூடல்கள் தலைவியிடமுண்டாதற்குக் காரணமான தலைவனது பரத்தையர்கூட்டத்தை, இல்லறக் காலத்து நிகழும் சிறந்த செய்தியாகக்கொண்டு, அதன் வகைகளை ஆசிரியர் கற்பியலில் விரித்துக்கூறுகின்றார். இதனால், முன்னாளில் தமிழ் நாட்டார் தமக்கென்று மனைவியர்சிலரை மணந்திருந்தும், பரத்தையர் பாலுங் காதல்செலுத்திப்போந்தவரென்பது, நன்கறியப்படும். இவ்வாறு நிகழ்ந்துவந்த குற்றம்பற்றிப்போலும், வள்ளுவனார்பொருட்பாலில் வரைவின்மகளிர் என்ற தனியதிகாரத்தால் இவ்வொழுக்கத்தின் இழுக்கத்தை வற்புறுத்துவாராயினர் என்பது. தஞ்சைவாணன்கோவையுரைகாரரும், இவ் வள்ளுவர்கருத்தைக் குறித்தல் அறியத்தகும் (௩௪0). இனி, காமத்துப்பாலில், தலைவன் வேறுமகளிரைக் கலந்தானாகக் கருதித் தலைவி

கூடியதாகக் கூறவந்த குறளெல்லாம், அவன்மாட்டு அச்செயல் நிகழ்ந்ததோ என்ற ஐயத்தால் தலைவி கருதிச்சொல்லியனவேயன்றி, பிறநூல்கள்போல, உண்மையினிகழ்ந்ததாகக்கொண்டு தலைவனை இழித்துக்கூறுங் கருத்துடையன ஆகாமை உய்த்துணரத்தக்கது. இதனை வள்ளுவரே, "இல்லை தவறவர்க் காயினும் ஊடுதல்—வல்ல தவரளிக்கு மாறு"என்பதனாற் குறிப்பித்தல் காணலாம். இவ்வாறே, அப்பெரியார், தாம் கூறப்புக்க காமப்பகுதியை எல்லாநாட்டார்க்கும் ஏற்குமாறு தூய்மைப்படுத்திக் கூறுவதை—ஏனைத்தமிழ்நூல்களிற் பயின்றுவரும் "சூல்தொடர்ந்த அன்மொழி"யும் தம் பொதுமறையில் வாராமல் அவர் விலக்கிப்போந்ததனால் உணரலாகும். இப் பரத்தையிற்பிரிவுபற்றிப் பேராசிரியர் எழுதுவன வருமாறு:—"பரத்தையிற்பிரிதல் என்பது தலைமகளை வரைந்தெய்தியபின்னர், வைகலும் பாலேநுகர்வான் இடையே புளிங் காடியையும் நுகர்ந்து அதன் இனிமையறிந்தாற்போல, அவள்நுகர்ச்சியினிமை அறிதற்குப் புறப்பெண்டிர்மாட்டுப் பிரியாநிற்றல்; அல்லதூஉம் பண்ணும் பாடலும் முதலாயினகாட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால் தான் எல்லார்க்குந்தலைவனாகலின் அவர்க்கும் இன்பஞ் செய்யப் பிரியாநிற்றல் என்றுமாம். இவ்வாறெழுந்து தனக்கின்பம் வேண்டிப் பிரிவனாயின், 'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு மொண்டொடி கண்ணே யுள' என்பதனால் இவளுக்குத் தலைமகளென்னும் பெயரொடுமாறுபட்டுத் தனதுபெருமையொடும் மாறுபடாநிற்கும்" எனக் காண்க. செய்யுள்வழக்கில் இப்பிரிவைக் குற்றமற்றதாகக் கொண்டு பேராசிரியர் மேற் குறித்தவாறு அமைத்தாராயினும், உலக வழக்கில் இவ்வொழுக்கம் நிகழ்ந்துவந்தமையால் இது வள்ளுவர் போன்றோரால், தம்நூலில் இழித்துக்கூறப்பட்டதென்பதில் ஐயமில்லை.

இனித் தலைவனது பரத்தைமைகாரணமாகத் தலைவிமாட்டுப் பெரும் பான்மைநிகழும் புலவியூடலுணர்வுகளைப்பற்றி, ஆசிரியர்கூறிய பொது விதிகள் அடியில் வருமாறு:—தலைவன் தலைவியர்க்குள், புலவிமுதலியன நிகழுங்காலத்து அவ்விருவர்பாலும் வாயிலாக (தூதாக)நின்று பேசுதற்குரியார் பன்னிருவராவர்.* அவர்—தோழி, தாய், பார்ப்பான், பாங்கன்,

---

* ஊடினமகளிரை நாயகரோடுசேர்க்கும் ஆற்றலுடையாரை, 'சேடர்' எனப் பிரதாபருத்ரீயத்திற் கூறப்பட்டுள்ளதென்பர் (சிந்தாமணி உ-ம் பதிப்பு விசேடக்குறிப்பு கஉ-ம் பக்கம் பார்க்க).

ணன், (அவன் மனைவியாகிய) பாடினி, இளையர், விருந்தினர், கூத்தர், விறலியர், அறிவர், கண்டோர் என்பர். வண்ணத்தியும் இத்துறைக்குரியவளாகக் கலித்தொகை கூறும் (எஉ—சச). இவர்களைத் துறவுக் காலத்துக்குரிய தூதுவராகக்கொண்டு, நச்சினார்க்கினியர் பொருள்கூறினராயினும் (கஈஈ), அஃது அத்துணையாகச் சிறந்துகாட்டிற்றில்லையென்பது நோக்குவார்க்கெல்லாம் வெளியாம். நம்பியாரும் இவரைக் கற்புக்காலத்துக்குரிய வாயில்களாகவே கருதுதல் காண்க (சஅ). இவ்வாயில்களோடு, தலைவனது ஆற்றாமைதன்னையும், அவன் புதல்வனையும் சேர்த்துக்கூறலு முண்டு (பக்-சஉஉ). இவரெல்லாம், தலைவன் தலைவியர் இருவரும் மனமகிழச் சொல்நிகழ்த்துதலையே நோக்கமாகவுடையரெனவும் (களஅ), தலைவன்பால் இவர் குறைவேண்டும்போது, அவனைநோக்கிப் பிறனைக்கூறுமாறுபோல முன்னிலைப்புறமொழியாகவும் (கஈஎ), தலைவிமுன்னர்த் தலைவனை இழித்துரையாமலும் (கஈரு), அன்பில்லாக் கொடுஞ்சொற்களைக் கூறுமிடத்து, அவ்விருவரெதிர்நில்லாது, ஒன்றன்மேல்வைத்துச் சிறைப்புறமாகவும் (களசு), கூற்றுநிகழ்த்தற்குரியர் எனவும் ஆசிரியர் விதிப்பர். இனித் தலைவிபால் வேறுபாடு உண்டாங்கால், தலைவன் அவள்கோபத்தை ஆற்றுதற்பொருட்டு (கஈ0) நெருங்கிவந்து பணிந்தவழி, தலைவியும் அகத்துநிகழும் தன் அன்பினைக் கரந்துகொண்டு, வேறுபொருள்பயக்குஞ்சொற்களால் தன் பணிவை அவற்குக் காட்டுவள் (ககக). இப்புலவியுள், உட்கும் நாணுமின்றித் தலைவன்பணிவைத் தலைவி ஏற்றுக்கோடலும் (உஉஎ), ஒருவரையொருவர் புகழ்ந்துகோடலும் (உஉஅ) நிகழ்வனவாம். தலைவன், தன் தலைமைக்குமாறாகப் பணிதல் இப்புலவியுள் உண்டென்பது "கொடுமை யொழுக்கங் கோடல் வேண்டி—அடிமேல் வீழ்ந்த கிழவன்" (பக்-௩எரு) என்பதனால் உணர்க. இன்னனம் மனைவியுயர்வுங் கிழவோன்பணிவும் கலித்தொகை கஉஅ-ம் பாட்டுள், தலைவிகூற்றுள் வருதல் காணலாம்.

இப் புலவியும் ஊடலும், பெரும்பாலுந் தலைவிக்குரியவேனும், தலைவனும் பலவாறுவேண்டப்பட்டும் அவள் தன் பிரணயகோபம் தணியாளாயின், தலைவனுக்கும் அத்தகைய முனிவுநிகழ்ந்து (கருசு) அன்பர் தருவதாகும். இஃது "உணர்ப்புவயின்வாரா ஊடல்" எனப்படும் (ஞாசி-ருo) இக்காலத்துத் தோழியே, தலைவனைநெருங்கிப் பணி

மொழியுங் கடுமொழியுங்கூறி அவனூடல் தணிக்க முயல்வள் (கலி—கருஅ) என்க. அதனில், அவ்விருவருந் தங்கள் ஊடனீங்காது பிணங்கியேநிற்பாராயின், மேற்கூறிய அறிவரென்போர் முன்வந்து, அவ்விருவர்வாழ்க்கையினும் தமக்குள்ள வருத்தந்தோன்றக் கழறிக் கூறுவரென்றும் (பக் சருந), இடித்துரைக்கும் அவராணையை அவ்விருவரும் ஒருபோதுங் கடவாரென்றும் (சருரு) கூறப்படுகின்றன. பேகனென்ற வள்ளலும் அவன்மனைவியும் ஊடனீட்டித்துப் பெரிதும் பிணங்கிநின்றபோது அவ்விருவரையும் கூட்டுதற்கு, கபிலர் முதலிய அறிஞர் முன்வந்து அவ்வள்ளலுக்கு உறுதிகூறிய செய்தி புறநானூற்றால் அறியலாகும். இது, புறச்செய்தியாயினும் 'உணர்ப்புவயின்வாரா ஊடல்' வழக்கைக் குறிப்பிக்கத் தடையின்று. சோழன் மனைவி ஊடனீட்டித்தவிடத்துப் புகழேந்தியார் சென்று அவ்வூடல் தீரக் கூறியதும் இது. இனிக் காமச்சிறப்பைப் புலவி செய்யவல்லதாயினும், அது சிறிது நீளினும் அதன் சுவை கைக்குமென்க. "உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது—மிக்கற்றா னீள விடல்" (குறள். கங௦ங) என்றார் வள்ளுவனாரும். அதனால், இப்புலவியிறுதியில், தலைவனை அன்போடும் இடித்துக்கூறி அவனைத் தழுவுதலே தலைவிக்கு முறையென்பர் (சாஎங) மிக்க சிறத்தினும் தலைவி தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல் முறையன்றெனும், அவனுடைய காமக்கிழத்தியரிடத்துத் தான் நடந்தொழுகும் மரியாதைபற்றியும், தலைவனது பரத்தைமை கருதாது தான் கூடியொழுகுதல்பற்றியும், குறிப்பிற் றன்னை வியந்து கொள்ளுதலும் கூடுமென்பர் ஆசிரியர் (கஅ௦)

இனிப் பரத்தையிற்பிரிந்து தலைவன் கரந்தொழுகுதல் தன்னூரின்கண்ணேயல்லது வேற்றுநாட்டு ஊர்களில் ஆகாதெனவும் (களவியல். சஉ), ஆயின் அவன் பரத்தையருடனும் மற்ற மனைவியருடனும் தன்னூர்க்குப் புறம்பாயுள்ள நதி சோலை குளங்களிற் சென்று * இன்ப

* சஉடு 'யாறுங் குளனுங் காவு மாடி' என்னும் [illegible] நச்சினார்க்கினியர், "காவிரியுந் தண்பொருநையும் ஆன்பொருநையும் வையையும் போலும் யாறுகளிலும், இருகாமத்திணையேரிபோலுங் குளங்களிலும், திருமருதந்துறைக்காவேபோலுங் காக்களிலும் விளையாடி" என எழுதுவர். காவிரிப்பூம் பட்டினத்தையடுத்த இருகாமத்திணையேரிகள் இருந்தமை பட்டினப்பாலை (கூக) சிலப்பதிகாரங்களாலும் (க, [illegible]) மதுரையில் வையையையடுத்துத் திரு

நுகர்ச்சி எய்தவும்பெறுவனென்றுங் கொள்க (௧௩௧). அவ்வாறு, தலைவன் பரத்தைமைசெய்து ஒழுகுமிடத்து, ஊரில் அவனைப்பற்றி அலர் எழும்ப, அதனாற் றலைவனைநினைந்து தலைவிக்கும், தலைவியைநினைந்து தலைவற்கும் காமம் மிக்குநிகழும் என்பர் (௧௩௫). இங்ஙனம் நிகழும் பரத்தையிற்பிரிவுபற்றிக் களவியலுரைகாரர் எழுதுவன—"அஃதே யெனின், மற்றைப்பிரிவெல்லாம் வேண்டுக, ஆள்வினை மிகுதியுடைமை யான்; இப்பிரிவு எற்றுக்கோ எனின்:—பரத்தையிற்பிரிந்தான் தலைமக னென்றால், ஊடலே, புலவியே, துனியே என்றிவை நிகழும்; நிகழ்ந்தால் அவை நீங்கிக் கூடினவிடத்துப் பெரியதோர் இன்பமாம்; அவ்வின்பத் தன்மையை வெளிப்படுப்பன அவையெனக் கொள்க"—என்பது. இப் பரத்தையர் எல்லாக்குலத்தார்க்கும் உரியராவர் (௨௨௪) என்பர்.

இனித் தலைவன் பரத்தையிற்பிரிந்தகாலத்தே தலைவி பூப்பெய்தின ளாயின், அச்செய்தி அவனுக்கு அறிவிக்கப்படும் (பக். ௪௨௬) எவ்வாறெனின்—"தலைமகட்குப் பூப்புத்தோன்ற வாயில்கள் (தூதுவர்) அதனைச் சென்றுணர்த்தத் தலைமகன் உணரும்; என்னை வாயில்கள் உணர்த்துமாறெனின்—தலைமகன்வாயில்களுந் தலைமகள்மாட்டு உளவாம்; தலைமகள்வாயில்களுந் தலைமகன்மாட்டு உளவாம்; ஆதலான், அவர்கள் உணர்த்த உணருமென்பதாம்"† எனக் காண்க (களவியலுரை. (௧௪–௭௫). இங்ஙனமன்றி, தலைவிக்குப் பூப்புநிகழ்ந்த நாளில், சேடி செங்கோலஞ்செய்து, செப்புப்பாலிகையுட் செம்பூவும் நீருங் கொண்டு சென்று, தலைமகனை வலம்வந்து பூவும் நீரும் அவனடிமேற் பெய்து போகப் பூப்புநிகழ்ந்ததென்று தலைமகன் உணருமென்றும், இம்முறை மேலாயினோரிடங்களிற் பூப்பு உணர்த்துமாறென்றுங் கூறுவர் (ஷை,

மருதந்துறை என்னும் உய்யானம் இருந்தமை கலித்தொகை (௨௬) பரிபாடல்க ளாலும் விளங்கும். இவை இன்பவிளையாட்டிற்குரிய இடங்களாதல் அந்நூல்க ளா லுணர்க. [அச்சுப்பதிப்புக்களில் 'மிருகாமத்தினையேரி' என்றுள்ளதனை 'இருங்..புலியூர்ஏரி' என்று திருத்திக்கொள்க.]

† இவ்வாயில்களுட் பாணரும் ஒருவரென்பது முன்னரே கூறப்பட்டது; பாணர்சாதியினராக மலைநாட்டுள்ளவர், அந்நாட்டு ஈழவச்சாதிப்பெண்கள் இருதுவான செய்தியை அவர்கணவர்க்கு அறிவிப்பதை, இன்றுந் தங்குல வொழுக்காக உடையர் எனப்படுகின்றது (Castes and Tribes of Southern India ; See, Panan),

"ஊரற் குல கெழுவைப்பான்—சிவந்தபைம் போதுமஞ் செம்மலர்ப் பட்டுங்கட் டார்முலைமேற்—சிவந்தவஞ் சாந்தமுந் தோன்றின வந்து திருமனைக்கே" (கசுக) என்னுந் திருக்கோவையடிகளும் காண்க. "சேவ்வணி யணிந்து சேடியை விடுப்புழி—அவ்வணி யுழையர்கண் டுழந்திக் கூறலும்" என்றார் நம்பியாரும் (உ0ரு). இவற்றால், முற்காலத்தே தலைவர்க்கு மனைவியின் பூப்புச்செய்தியைச் சென்றுணர்த்துமொழுக்கம் ஒன்றிருந்தமை புலப்படுகின்றது. இப்பூப்புணர்த்தச் சேவ்வணியணிந்து சேடியர்செல்வதுபோலத் தலைவனது பரத்தையிற்பிரிவில், தலைவிக்குப் புதல்வன் பிறந்தசெய்தி யறிவித்தற்கு, அவர் *வேள்ளணியணிந்து செல்வதும் பண்டை வழக்கமாம்(நம்பிகப். உ0௬). இவ்வாறு அறிவிக்கப்பெற்ற தலைவியின் பூப்புச்செய்தி கேட்டதும் தலைவன் தாழாதுசென்று, அதுநிகழும் மூன்றுநாளும் அவளை அணுகியிருக்கவேண்டுமென்றும், நான்காநாள்முதற் பன்னிரண்டுநாள்வரை அவளை அவன் கூடியுறைய வேண்டுமென்றும் கூறுவர். இதனைப் "பூப்பின் புறப்பா டீராறு நாளும்—நீத்தகன் றுறையார் என்மனார் புலவர்—பரத்தையிற் பிரிந்த காலையான" (கஅஎ) என்னும் சூத்திரத்தால் அறிக. இதனுள் "பூப்பின் புறப்பா டீராறு நாளும்" என்பதற்குப் 'பூப்புநிகழும் மூன்றுநாளுக்கும் புறம்பாகிய 12 நாள்' என்று பொருள்கூறுவர் நச்சினார்க்கினியர். ஆனால், இறையனார்களவியலில்வருகின்ற இதுவேயடிக்கு (சங), அதனுரைகாரர், 'பூப்புப்புறப்பட்டநாண்முதற் பன்னிரண்டுநாளும்' என்று பொருள் எழுதுகின்றார். மற்றும் இவர் கூறுவன வருமாறு:—'தலைவன் பூப்புணர்ந்து சென்று தலைமகளிடத்தனாய், முந்நாளும் சொற்கேட்கும் வழி உறைவானாவது. முந்நாளும் சொற்கேட்கும்வழி உறைதற்குக் காரணம் என்னை யெனின்—தலைமகன் பரத்தையர்மாட்டானாக, முன்னின்ற பொருமையுண்டென்று (அதனைத் தணிக்கத் தலைவிமாட்டு) எய்தும். மூந்நாளுஞ் சொற்கேட்கும்வழி உறையவே, (அப்பொருமை) நீங்கும்: நீங்கியபின்னைக் கூடும். ஆகவே, கருவு நின்று மாட்சிப்படும். * * * முந்நாளுங் கூடியுறையப்பெறிற் குற்றமென்னை என்றார்க்குப்—பூப்புப் புறப்பட்டஞான்று நின்ற கரு வயிற்றிலே அழியும்; இரண்டாநாளில்நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றாம்நாள்நின்ற கரு குறுவாழ்க்

* 'வெள்ளணி—பிறந்தநாளி லொப்பனை' என்பர் நச்சினார்க்கினியர் (சீவக—காந்த—கஉஉ).

கைத்தாம்; அதனாற் கூடப்படாதென்பது; "பூப்புமுதன் முந்நாட் புணரார் புணரின்—யாப்புறு மரபின் முனிவரும் அமரரும்—யாத்த காணம் அழியுமென்ப" எனப் பலரும் ஓதினாராகலான் அமையாதென்பது' எனக் காண்க. "மாதர்க்கு ருதுகாலம் வழக்கமாகப் பதினாறுநாளென்றப்படுகின்றது; அதனுள் மாதவிடாய்முதல் நான்குநாள் பெரியோரால் நிந்திக்கப்பட்டுள்ளது" என்று மனுவுங் கூறுதலால் (அத்-ங; சுலோ-சசு) முற்கூறிய நச்சினார்க்கினியர்கொண்டபொருளே வடநூல்வழக்குக்கு ஏற்றதென்பது தெரியலாம். இனி, மேற்கூறியவாறு, வாயில்களால் உணர்த்தப்பட்ட தலைவன் தன்மனையடைந்து தலைவியோடு கூடிப் பள்ளியிடத்தனாய் இருக்கின்றகாலத்தே புலவியூடலுணர்வுகள் நிகழுமெனவும், தலைவனால் பின்பு வதுவைசெய்யப்பெற்ற மனைவியர்க்கும் பரத்தையர்க்கும் இப்புலவிமுதலாயின உண்டாமெனவும் கொள்க. இங்ஙனம் நிகழுமிடத்து அவரவர்கூறுங் கூற்றுக்களின்விகற்பங்களெல்லாம், ஈண்டு விரிப்பின் விரியும்; அவற்றைத் தலைவன் தலைவி தோழி காமக்கிழத்தியர் முதலியவர்க்குரிய சூத்திரங்களாலும், பண்டையிலக்கியங்களாலும், பிற்காலத்துக்கோவைமுதலிய நூல்களாலும், உணர்ந்து கொள்க.

## பிரிவு.

இனி, இல்வாழ்க்கைக்காலத்தில், தலைவன், பலகாரியங்களைக்கருதிக் காடிடையிட்டும் நாடிடையிட்டும் பிரியும் பிரிவுகள் உண்டு; அவை ஓதல், பகை, தூது, வேந்தற்குற்றுழி (உதவி), பொருள் என்பவைபற்றி நிகழ்வன; இவற்றைக் குறித்த விதிகள் முன்பே விளக்கப்பட்டன. இவற்றுள் ஓதற்பிரிவு, தலைவன் வரைந்துகொண்டபின் நிகழும் முதற்பிரிவு என்பர் பேராசிரியர் (திருக்கோ. ௩0அ). இப்பிரிவுகளோடு மேற்கூறிய பரத்தையிற்பிரிவையும் ஒன்றாகவைத்துக் களவியல், நம்பியகப்பொருள் முதலியன கூறுகின்றன. ஆனால், ஊருக்குள்ளே பரத்தையர் மனைகளில் தலைவன் தங்கிவருதலைத் தொல்காப்பியனார் ஏனையவைபோல ஒருபிரிவாக வேண்டவில்லை என்பது, அகத்திணையியலிற் பிரிவுகளை வகுக்குமிடத்து, இதனையும் ஒன்றாக அவர் எண்ணாமையால் உய்த்துணரப்படுகின்றது. ஆயினும், "அயலோ ராயினும் அகற்சி மேற்றே" என்னும் உடன்போக்குப்பற்றிய சூத்திரத்தில் "இதனால் மனைபயபற்கட்

பரத்தையிற்பிரிவும் பாலையாமென உணர்க" என்பர் நச்சினார்க்கினியர் (பக்—௬௩). இனி, கல்வி முதலியனபற்றித் தலைவன் பிரியும்போது, அக்கல்வியும், கொடையும், பொருள்செயலும், முற்றகப்பட்டோரை முற்றுவிடுத்தலுமாகிய காரியங்களின் ஆள்வினைச்சிறப்பைத் தான் எடுத்தோதித் தன்னைப் புகழ்வனென்க. இதனால், தான் பிரியநேர்ந்திருந்தலையும், தலைவி யாற்றியிருக்கவேண்டிய இன்றியமையாமையையும் குறிப்பித்தபடியாம் (௧௮௧). அன்றியும், பிரியுமுன்பு, தலைவிபால் தலைமகன்புரியும் தலையளியும் (பேரன்பும்,) பாராட்டும் அவன் பிரிவையும் அதனால் நிகழும் அவனது அச்சத்தையும் தலைவிக்கு வெளிப்படுத்தும் (௧௮௪—௨௩௨). இங்ஙனம், தலைமகன் பிரியக்கருதலைத் தோழி யுணர்ந்து, தலைவியது பிரிவாற்றாத்தன்மையைத் தலைவற்குக் குறிப்பா லுணர்த்தி வற்புறுத்துவள் (௨௩௧) * இனி, தலைவன்பிரிவுகேட்டுத் தலைவிக்கு வருத்த மிகுமாயின், அவளை ஆற்றுவித்தற்பொருட்டுச் சிலகாலம் அவன் செலவழுங்கியிருத்தலும் (௧௮௫), இதனாலும் அவள் ஆற்றாளாயின், தோழிக்குத் தன்காரியத்தின் இன்றியமையாமை கூறித் தலைவி யறியாமற்பிரிதலும் உண்டு (பக். ௬௪).

தலைமகன் இவ்வகையாற்பிரிந்து, மேற்குறித்த ஓதல் பகை முதலிய காரியங்களில் மூண்டுநிற்குங்கால், 'ஆண்டு அவன் தலைவியை நினைந்து ஆற்றானாயினன்' என்று கூறுதல் புலனெறிவழக்கிற்கு ஏற்புடைத்தன்று; ஆனால், எடுத்துக்கொண்டவினையில் அவன் வெற்றியடைந்த பின், தலைவியைநினைந்து இரங்கினனாகக் கூறுதல் உளதாம் (௧௮௬). இனித் தலைவன்பிரிவாற் றலைவிக்கு ஆற்றாமை கைகடத்தலும் (௨௩௬), அக்கலக்கத்தாற் பல்வேறுவகைப்படச் சொல்நிகழ்த்தலும் (௧௬௬), கனா நிகழ்ச்சிகளும் (௧௬௭) நிகழ்வனவாகும். வள்ளுவனாரும், இவற்றையே

* குறிப்பாற் கூறலாவது—இறைச்சிவகையாற் கூறுதல். இறைச்சி என்பது—குறித்த கருத்தைக் கருப்பொருள்களுள் ஒன்றன்மேல்வைத்து, வெளிப்படையாலன்றிக் கூறுவது. "இறைச்சி தானே பொருட்புறத் ததுவே" (௨௨௯) எனக் காண்க. "இலங்கும் அருவித்து இலங்கும் அருவித்து—வானின் இலங்கும் அருவித்தே தானுற்ற—சூள்பேணான் பொய்த்தான் மலை" என்னும் பாட்டில், சூளைப்பொய்த்தான் என்பதே கூறக்கருதிய பொருள்; அதனைப் 'பொய்த்தான் மலையகத்தே இன்னது நிகழ்ந்தது' என வேறுபொருள்பற்றிக் குறிப்பித்தல் கண்டுகொள்க.

தனிப்படர்மிகுதி, நினைந்தவர்புலம்பல், கனவுநிலையுரைத்தல்' என்ற மூன்று அதிகாரங்களால் முறையே கூறுவர். இங்ஙனம் நிகழும் தலைவியின் வருத்தங்களை அறிந்து பரிகரிப்பது, நல்லறிவுடையளான தோழியின் கடமையாம் (உ௬௬). இனி, மேற்கூறிப்போந்த ஓதல் முதலியவற்றின்பொருட்டுத் தலைவன் பிரிதற்குரியகாலம் வேனில் பின்பனிப் பருவங்களென்பதும், அவன் விரைந்து பரித்தேரூர்ந்து பாசறையினின்று ஊர்வயின்வருங்காலம், கார்ப்பருவமாகிய ஆவணி புரட்டாதி மாதங்களென்பதும் அறியத்தக்கன (பக். ௧௬). இக்கார்ப்பருவமே, பிரிந்தவர்க்குக் காமச்சிறப்பை மிகுத்துத் தலைவன் தலைவியரிருவரையும் கூட்டிமகிழ்விக்கும் என்பது—

"அளவில் காரெனு மப்பெரும் பருவம்வந் தணைந்தால்
தளர்வ தென்பது தவம்புரி வோர்கட்குந் தகுமால்
இளவி தேனினு மமுதினுங் [1]குழைத்தவள் விளைத்தோள்
[2]வளவி யுண்டவன் வருந்துமென் றுலது வருத்தோ."
(இராமா. கார்கா. ௫௦)

"பொருடரப் போயினர்ப் பிரிந்த பொய்யுடற்
குருள்தரு தேர்மிசை யுயிர்கொண் டெய்த்தலால்
மருடரு பிரிவெனு மாக ணங்கெடக்
கருடனைப் பொருவின கால மாரியே."
(கார்காலப்படலம். உஉ)

எனக் கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பநாடர், கார்காலத்தி னியற்கைத்தன்மைகளை எடுத்துச் சிறப்பித்தலால் விளங்கத்தக்கது. இவ்வாறு பிரிந்த தலைவியைக் கூடுதற்குரியகாலத்தே, தலைவன் எத்துணைத்தூரத்திருந்தானாயினும், இடைவழியில் தங்குதல்செய்யாது, பறவைபோல விரைதற்குரிய தன் பரிமாக்களின் உதவியால் தலைவியைவந்துகூடி மகிழ்விப்பதாகவே புலனெறிவழக்கஞ்செய்யப்படும். இவ்வாறன்றி, இடைச்சுரத்தே தங்கித் தாழ்த்துவந்தானாகக்கூறல் தகாது (௧௩௪). இங்ஙனம் தேரூர்ந்து ஊர்நோக்கிவருங்கால், தலைவியின் தனிநிலைக்குக் கவன்று, அதனைத் தன் பாங்கனாகிய தேர்ப்பாகனுக்குக் கூறிக்கொண்டு அவனை விரைந்து செலுத்தத் தூண்டுவனென உணர்க. இங்ஙனம் ஓதல் பகை

[1] 'இளைத்தவள் விளைதோள்'. [2] 'அளவி யுண்டவன்' என்பன பாடபேதங்கள்.

முதலிய பிரிவுகள் நிகழ்தற்குத் தக்க காரணங்கள், இறையனார்களவிய லுரைகாரரால் விரித்துக்கூறப்படுதல் படித்தறிதற் குரியது (௩௫-ம் சூத்திரவுரை.)

இங்ஙனம், தலைவனுந் தலைவியுங் கூடி இன்புற்று, அறம்பொரு ளின்பமென்னும் உறுதிப்பொருண்மூன்றையும் அடைதற்குரியர் என உணர்க. மேற்கூறிய பிரிவுகள், அறனும் பொருளும் அடைதற்கு ஒரு வகை ஏதுவேயாயினும், இன்பப்பகுதியாகிய இக்கற்பியலிற் காமஞ் சிறத்தற்குரியனவாகவே ஆசிரியராற் கருதிக் கூறப்பட்டன என்பதும், அவ்வுறுதிப்பொருளிரண்டையும் அடைதற்கு உபாயமும் பயன்களும் புறப்பொருளில்வைத்து விளக்கப்படுவன என்பதும் அறியற்பாலன.

இங்ஙனம், இல்லறநின்று நல்லறஞ்செய்யாநின்ற தலைவனுந் தலைவி யும் நிகழ்த்திப்போந்த அவ் வில்நிலையின் பயன், மெய்யுணர்ந்து வீடு பெறுதலேயாம்.

ஆதலால், தாம் ஒழுகிய அவ்வில்லறநிலையில் மக்கட்பேறு முதலிய வாய்க்கப்பெற்று, அனுபவமுதிர்ந்து அதனில் வெறுப்புவருங்காலத்தே, வீட்டின்பம்பெறுதற்கு வழியாகிய வானப்பிரத்தம் சந்நியாசநிலைகளை அடைந்து, அந்நெறிகளில் அவ்விருவரும் அடிப்படவேண்டுமென்பதை,

"காமஞ் சான்ற கடைகோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியும்
சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே"

என்ற கற்பியற்சூத்திரத்தால் ஆசிரியர் விளங்கக் கூறுகின்றார். இதிற் கண்ட "சிறந்தது" என்பது வீட்டினை; "சிறப்பென்னுஞ் செம்பொருள்" (குறள்-௩௫௮) "சிறப்பினும்" (௩௧) என வள்ளுவனாரும் இவ்வாறு வழங்குதல் காண்க. வீட்டினைச் 'சிறந்தது' என்றது, சிரேயஸ் என்று மோக்ஷத்திற்கு வழங்கிய உபநிடதவழக்குப்பற்றியதென்பர் (கடம். அத்-௧; வல்லி-௨; மந்-௧, ௨).

இதுவரை கூறிப்போந்தவற்றால், களவியல் கற்பியல்கள் ஆசிரியர் கூறியமுறையே ஆராயப்பட்டனவாம். ஆசிரியர் அகப்பொருளுணர்த் தற்கு அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல்—என நான்

மெய்ம்மை கூறினராயினும், அகத்திணையியலினும் பொருளியலினுங்கண்ட செய்திகள் இவ்வியாசத்து முதலில் விளக்கப்பட்ட பொதுவிதிகளினும், களவியல் கற்பியல்களினும் ஏற்றபெற்றி ஆராய்ந்து சேர்த்துக்கூறப்பட்டுள்ளன. ஆகவே யாம் இவ்வாராய்ச்சிக்குப் பகுத்துக்கொண்டவை— பொதுவிதி கற்பியல், களவியல் என மூன்றேயாயின. இனி, இவ்வகப் பொருட்செய்திகள்—குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐந்திணைக்கும் உரியவாமாறு முன்னூல்கள்கொண்டு உணரத்தக்கன. நச்சினார்க்கினியர், இங்ஙனம் உரிமையாகுமுறையே க௨-ம் சூத்திரவுரையிற் சிறிது கூறுவர். ஆண்டுங் கண்டுகொள்க.

---

## IV. புறத்திணையியல்.

பொருளதிகாரமானது அகம் புறம் என்று இருபகுதியாக ஆசிரியராற் கூறப்பட்டமையும், அவற்றுள் அகப்பொருள்கள் இன்னவென்பதும் மேலே விளக்கப்பட்டன. இனிப் புறப்பொருளின் இலக்கணங்களையும் ஆசிரியர் கூறிய முறையே ஆராய்வோம். புறமாவது- அகம்போல ஒத்த அன்புடையார் இருவரால்மட்டுமேயன்றி, எல்லாராலும் தாமே துய்த்து உணரப்படுவதும், 'இஃது இவ்வாறிருந்தது' எனப் பிறர்க்குப் புலப்படக்கூறப்படுவதுமாகும். அவை, பெரும்பான்மை அறமும் பொருளுமாம். இப் புறப்பொருள்பற்றிய செய்யுள்வழக்குக்களும், அகம்போலத் தமிழ்கூறுநல்லுலகத்து வழக்குக்களினின்று விரிந்தனவே எங்க அவ்வாறு செய்யுள்வழக்கம்பெறுங்கால், அவை வரம்புகடவாவண்ணம் அவற்றையும் முன்னோர் இலக்கணத்தால் வரையறைப்படுப்பாராயினர். அங்ஙனம் வகுத்த இலக்கணநூல்களில் ஒன்றான இத்தொல்காப்பியத்துள், இப்புறப்பொருள்கட்கும் திணை துறைகளை ஆசிரியர் வகுத்தோதுகின்றார். அஃதாவது- குறிஞ்சி முதலாகிய ஐந்திணையும் கைக்கிளை பெருந்திணைகளுஞ் சேர்த்து எழுதிணையாக்கி அகப்பொருள் விளக்கப்பட்டாற் போல, புறப்பொருளும்—வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என எழுதிணையாக வகுத்து விளக்கப்படுகின்றது. இத்திணையெல்லாம் பண்டைக்காலத்தே தமிழ்நாட்டில் வழங்கிய போர் முறைகளையும், அம்முறையிற் காட்டப்படும் வீரச்செயல்களையும் பெரும்பான்மையாகவும், ஏனை அரசியல், கொடை, புகழ், நிலையாமை முதலிய

வற்றைச் சிறுபான்மையாகவும் உணர்த்துவன. இத்திணைகளுள்:— வெட்சியாவது—இகல்குறித்தவேந்தர் இருவருள் ஒருவன், போர்த் தொடக்கமாகப் பகைவனுடைய ஆனிரைகளைக் கவர்வதும், அவன் கவர்ந்த வற்றை உரிய அரசன் மீட்பதுமாகும். வஞ்சித்திணையாவது—பகைவ னுடையநாட்டைக் கொள்ளநினைந்து போர்செய்தற்கு ஒருவேந்தன் மேற்சேறலும், அவனை நாட்டுக்குரியவேந்தன் எதிர்த்துநிற்றலுமாகும். உழிஞைத்திணையாவது—அங்ஙனம் வந்தவேந்தன் பகைவன்மதிலை வளைத்துநிற்க, உள்ளிருந்தவேந்தன் அதனைக் கைக்கொண்டு காத்தலாம் தும்பைத்திணையாவது-வந்தவேந்தனை இருந்தவேந்தன் எதிர்த்து அவன் வலியை அழித்தல். வாகைத்திணையாவது—பகைவரை வெல்லுதலும் அவரவர் தத்தம் தொழில்களில் மேம்படுதலுமாம். காஞ்சித்திணை யாவது பல்வேறு நிலையாமைகளைப்பற்றிய சான்றோர் குறிப்பு. பாடாண் டிணையாவது—பாடப்படுந்தலைவனது ஒழுகலாறு.

இந் நிரைகோடல் மீட்டல்முதலிய புறத்திணைகள், வெட்சி முத லாகப் பெயர்பெறுதற்குக் காரணம்—வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை என்னும் பூவிசேடங்களை அவ்வவ்வொழுக்கத்தின் அடையாள மாகக்கொண்டு பண்டைத் தமிழ்மக்கள் வழங்கிவந்தமையேயாகும். நச்சி னார்க்கினியர் "இதற்கு (வெட்சிக்கு) அப்பூச்சூடுதல் உரித்தென்று கொள்க" (பக். ௧0௩), "தும்பையென்பது சூடும்பூவினாற் பெற்றபெயர்" (பக் ௧௩௬) எனக் கூறுதலாலும், "கண்ணி கண்ணிய வயவர் பெருமகன்" என வரும் பதிற்றுப்பத்தடிக்கு (௫௮) 'தாங்கள் சூடிய போர்க்கண்ணிக்கேற்ப வினைசெய்யக்கருதிய வயவர்பெருமகன்' எனப் பொருள்கூறப்படுதலாலும் இதனுண்மை யுணர்க எனவே, முற் காலத்துத் தமிழ்மக்கள், போர்முதலாய புறவொழுக்கங்கட்கும், அன்பு பற்றிய அகவொழுக்கங்கட்கும், ஒவ்வொரு பூவை அடையாளமாகக் கொண்டிருந்தசெய்தி வெளியாதலான் அவர்க்குப் பூவணிவதிலிருந்த பெருவிருப்பம் புலனாவதாம். "வாங்கரும் பாதைாங்கும் வகுத்த வான்மீகி"முனிவரும் தமிழர்து இவ்வழக்கத்தைத் தம் இராமாயணத் திற் குறித்திருப்பது இங்கே குறிப்பிடற்பாலது. அயோத்தியாகாண்டம், கூ௩-ம் சருக்கத்தில் அம்முனிவர் பரதசம்பிரூற்றில்லைத்துக் கூறும் சுலோகத்தின்மொழிபெயர்ப்பாவது "நம் யுத்தவீரர் மேகங்களைப் போன்ற கறுத்த கேடயங்களுடன், தென்னாட்டாரைப்போலத் தலைக்

கணியாகப் பூக்களைச் சூடுகின்றனர்" என்பதாம்.* இதனால் தென்னாட்டாரெல்லாம் பொதுவாகப் பூவணிபவர் என்பதும், "நம் யுத்தவீரர்" என்றதனால் தென்னாட்டுமக்களிற் போர்வீரராயுள்ளார்க்கு அவ்வாறு பூவணிதல் சிறந்தது என்பதும் புலப்படுதல் காணலாம். ஆகவே, அம்முனிவர், தென்னாட்டாருக்குப் பொதுவாகவும் அவருள் வீரர்க்குச் சிறப்பாகவும் பூச்சூடுதல் உரியதென்பதைக் குறிப்பித்தாராவர். தமிழ்த்தலைவர் தமக்கென்று சூடும்பூவொன்றும், தம்குலத்துக்குரிய அடையாளப்பூவொன்றும் (நெடுநல்.௧௭௬) ஆக இருவகைப் பூக்களுடையாராயிருந்தமையும் நோக்கத்தக்கது. இக்காலத்தும், தென்னாட்டாரைப்போலவே மற்றை நாட்டாரும் பூவை மகிழ்ந்தணிதல் இல்லையென்பதை நாம் உசாவித் தெரிந்துகொள்ளலாகும். இவற்றால், வான்மீகியார்குறித்த தமிழரது புராதனவழக்கமொன்று, பண்டைத் தமிழ்நூல்களின் ஆதரவுபெறுதல் காண்க. இவ்வாறே அம்முனிவர்பெருமான் தென்னாட்டுச் செய்திகளில் வேறு சிலவுந் தெரிந்துகூறுவர். இவற்றை வான்மீகருந் தென்னாடும் என்ற தலைப்பின்கீழ் யாமெழுதிய ஆராய்ச்சியுரையிற் கண்டுகொள்க †

இனி, மேற்குறித்த புறத்திணைகளால், பண்டைத் தமிழ்த்தலைவருடைய போர்முறையானது, வெட்சியாகிய நிரைகோடல் நிரைமீட்சி என்பவற்றைத் தொடக்கமாகக்கொண்டு நிகழ்வதென்பது விளக்கமாகும். இம்முறை, ஆரியமக்கள் வழக்கன்றென்பதற்கு, சாணக்கியம் காமந்தகமுதலிய அர்த்தசாஸ்திரங்கள் அவற்றைப்பற்றி ஒன்றுங் கூறாமையே சான்றாயினும், பாரதகாலத்தே இரவில் நிரைகோடலும் மீட்டலும், யுத்தமுறையின் தொடக்கமாக வழங்கியசெய்தி வெளியாகின்றது. பாண்டவர்கள் விராடநகரத்தில் மறைந்துறையுங்காலத்து, அந்நனம் உறைதலறிந்த அவர் பகைவராகிய துரியோதனுதியர், போர்க்கோலங் கொண்டெழுந்து, அப்போரின் தொடக்கமாக விராடனது பசுக்கூட்டங்களைக் கவர்ந்துசென்றதும், விராடராசன்பக்கத்தார் பாண்டவரின் உதவியால் அவரை எதிர்த்துப் பகைவர்கவர்ந்தநிரைகளை மீட்கும்போது பெரும்போர் விளைந்ததும் பிரசித்தமான சரித்திரங்களாம். ஆகவே,

* "காலஜ்ஞ காலஸாரோ வீர்யாஶ் ஶிரஸ்ஸு ஸமாஸ்ரீநதீ ।
வைஷ்ணவாசைஶ் ஸமசைக தக்ஷிணாத்யா யதா நரா: ॥

† "செந்தமிழ்" தொகுதி-௫. பகுதி-௧௰

தமிழ்மக்களது போர்முறை, ஒருகாலத்திற் பாதகண்டமெங்கும் வழங்கியதாகல்வேண்டுமென்று தோற்றுகின்றது. அன்றி, விராடநாடு, விந்தமலையையடுத்த தக்ஷிணப்பிரிவுகளில் ஒன்றாதலால், அத் தென்றேய முறைப்படி நிரைகவர்ந்து மீட்கப்பட்டது என்றுகொள்ளினும் பொருந்தும். இவை நிற்க.

மேற்கூறிய வெட்சிமுதலிய எழுதிணைகளையும், குறிஞ்சி முதலிய அகத்திணை யேழற்கும் முறையே புறமாக ஆசிரியர் வகுக்கின்றார். அஃதாவது—குறிஞ்சிக்கு வெட்சியும், முல்லைக்கு வஞ்சியும், மருதத்துக்கு உழிஞையும், நெய்தற்குத் தும்பையும், பாலைக்கு வாகையும், பெருந்திணைக்குக் காஞ்சியும், கைக்கிளைக்குப் பாடாணும் புறமாகும் என்பதாம். "அகங்கையிரண்டுடையார்க்குப் புறங்கை நான்காகாது இரண்டாயவாறுபோல, அகத்திணை யேழற்கும் புறத்திணை யேழென்றலே பொருத்தமுடைத்தாயிற்று" (பக்-௯) என்பர். இவ்வாறு இவை முறையே புறமாதற்கு, நச்சினார்க்கினியர் கூறுங் காரணம் அடியில்வருமாறும்:—களவொழுக்கமுங் கங்குற்காலமும், காவலர் கடுகினுந் தான் கருதிய பொருளை இரவின்கண் முடித்து மீடலும் போல்வன ஒத்தலின்—(களவின்கணிரைகொள்ளுதல்) வெட்சி குறிஞ்சிக்கும்* (பக்-௧௦௩), முதலெனப்பட்ட காடுறையுலகமும், கார்காலமும், அந்நிலத்திற்கேற்ற பொருளும், அரசர் பாசறைக்கண் தலைவியைப் பிரிந்திருத்தலும், அவன் றலைவி அவனைப்பிரிந்து மனைவயினிருத்தலுமாகிய உரிப்பொருளும் ஒப்பச் சேறலின்—வஞ்சி முல்லைக்கும் (பக்-௧௨௫), இருபெருவேந்தர் தம் முண் மாறுகொண்டவழி, முற்றப்பட்டிருந்த வேந்தனது மதில் பெரும்பான்மை மருதநிலத்தது ஆதலானும், அம்மதிலை முற்றுவோனும் அந்நிலத்திருத்தலானும், மருதம்போல இதற்கும் பெரும்பொழுது வரைவின்மையானும் விடியற்காலமே போர்செய்தற்குரிய சிறுபொழுதாதலானும்—உழிஞை மருதத்திற்கும் (பக் ௧௩௯), நெய்தற்குரிய பெருமணலுலகம்போலக் காடும மலையுங் கழனியுமல்லாத களரும் மணலும் பொரு

* நிரைகோடல் குறிஞ்சிக்குரிய மலைசார்ந்தநிலத்தின்கண் நிகழ்தலானும், அந்நிலத்தின் மக்களாயினர் பிறநாட்டு ஆனிரையைக் களவிற்கோடல் ஒருபுடை குறிஞ்சிக்குரித்தாகிய களவொடு ஒத்தலானும், சூடும் பூவும் அந்நிலத்திற்குரிய பூவாதலானும் வெட்சி குறிஞ்சிக்குப் புறனாயிற்றென்பர் இளம்பூரணர் (௬௧).

களமாகவேண்டுதலானும்,* பெரும்பொழுது வரையின்மையானும், எற்பாடு (பிற்பகல்) போர்த்தொழில்முடியுங் காலமாதலானும், இரக்கமும் தலைமகட்கே (நெய்தற்றிணையில்) உளதாயவாறுபோல (போரிற்) கணவனையிழந்தார்க்கன்றி வீரர்க்கு இரக்கமின்மையானும், பிறவிரங்கல்களானும்—தும்பை நெய்தற்கும் (பக்-கசசு), பாலைக்குப் புணர்ச்சியினீங்கி ஓதல் முதலியவற்றாற் புகழெய்தற்குப் பிரிவுநிகழுமாறுபோலச் சுற்றத்தொடர்ச்சியினீங்கி அறப்போர்நிகழ்த்தித் துறக்கம்பெறுங்கருத்தினாற் சேறலானும், வாளினுந் தாளினும் நிறையினும் பொறையினும் வென்றியெய்துவோரும் ஏனையோரை நீங்கிச் சேறலானும்—வாகை பாலைக்கும்† (பக்-கடுஎ), "ஏறியமடற்றிறம்" (சூத்-டுக) முதலிய நான்குந் தீயகாமமாயினாற்போல, உலகியலைநோக்க நிலையாமையும் நற்பொருளன்றாகலால்‡—காஞ்சி பெருந்திணைக்கும் (பக்-கஎஎ), ஒரு தலைவன் பாவலும் புகழ்ச்சியும் வேண்ட ஒருபுலவன் பொருள் முதலிய பரிசு வேண்டலால், ஒருதலைக்காமமாகிய கைக்கிளையோடொத்தலின்—பாடாண்டிணை கைக்கிளைக்கும் (பக்-கஅசு) முறையே புறமாக ஆசிரியராற் கொள்ளப்பட்டன என்பர். இவற்றுக்கு வேறுசில ஏதுக்களும் கூறப்படுமாயினும் ஏற்றபெற்றியே ஈண்டுக் காட்டப்பட்டன.

இனி, அகத்தியனார் மாணாக்கர் பன்னிருவராலும் இயற்றப்பட்டதென்று சொல்லப்படும் பன்னிருபடலத்தின் வழிநூலும், ஐயனாரிதனார் இயற்றியதுமாகிய புறப்பொருள்வெண்பாமாலையுள் வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை—எனப் பன்னிரண்டுதிணை வகுக்

* 'அந்நிலங் கடல்சார்ந்தவழியல்லது இன்மையானும்' என வேறோர் ஏதுவுங் கூறுவர் இளம்பூரணர் (எ0).

† "பாலையாவது தனக்கென ஒருநிலமின்றி எல்லா நிலத்தினுங் காலம்பற்றிப் பிறப்பதுபோல, இதுவும் (வாகையும்) எல்லாநிலத்தினும் எல்லாக்குலத்தினுங் காலம்பற்றி நிகழ்வதாதலினாலும்" என வேறோரேதுவுங் கூறுவர் இளம்பூரணர்.

‡ "ஏறியமடற்றிறமுதலாகிய கோந்திறக் காமப்பகுதி அகத்திணையைந்தற்கும் புறனாயவாறுபோல, இது புறத்திணையைந்தற்கும் புறனாகலானும்" என வேறுங் கூறுவர் இளம்பூரணர். [கோந்திறம் - கழிபேரிரக்கம்; செந்திறம் அஃதல்லாதன; கோதிறம் என்று வழங்குவதுமுண்டு].

கப்பிலேவதோடு, அவற்றுள் வெட்சிமுதல் தும்பையீறாக வேழும் புறமென்றும், வாகை, பாடாண், பொதுவியல்—என்ற மூன்றும் புறப்புறமென்றும், கைக்கிளை பெருந்திணையிரண்டும் அகப்புறமென்றும் கூறப்படுகின்றன. வெண்பாமாலைகூறுமாறு, வெட்சியென்பது நிரைகோடல்மட்டுமேயாம். தொல்காப்பியனார் நிரைமீட்டலையும் வெட்சியி லடக்கிக்கூற, இந்நூல் அதனைக் ‘கரந்தை’ எனத் தனித்திணையாக்குகின்றது.* “கரந்தையாவது தன்னுறுதொழிலாக நிரைமீட்டோர் பூச்சூடுதலிற்பெற்ற பெயராதலின் வெட்சித்திணைபோல ஒழுக்கமன்று......‘நாகுமுலையன்ன நறும்பூங் கரந்தை, விரகறி யாளர் மரபிற் சூட்ட, நிரையிவட் டந்து’ (புறம்·உகூக) என்றவாறு காண்க” என்பர் நச்சினார்க்கினியர். இனி, போர்செய்தற்கு ஒருவேந்தன் படையெடுத்துச்சேறலும் அவனை நாட்டுக்குரிய வேந்தன் எதிர்சென்று தாக்குதலும் வஞ்சியென்று ஆசிரியர் கூறினராயினும், வெண்பாமாலை பகைவர்மேற்செலவதுமட்டில் வஞ்சியாமென்றுகூறி, அவ்வாறு மேற்சென்றவனை இருந்த வேந்தன் எதிர்சென்று ஊன்றுதலைக் காஞ்சியென வேறுதிணையாக வகுக்கின்றது. “வஞ்சியும் காஞ்சியுந் தம்முண் மாறே” என்பது பன்னிருபடலம். இக் காஞ்சி பல்வேறுநிலையாமை குறிப்பதென்பதே நம்மாசிரியர் கொள்கை. ஆயின், வெண்பாமாலை, அந்நிலையாமை முதலியவற்றை உணர்த்தப் பொதுவியல் என வேறோர் இயல் கூறும். இனி, நொச்சி என்ற ஒரு தனித்திணையை ஆசிரியர் குறித்தனரில்லையேனும், அந்நூல், (வந்தவேந்தன் பகைமதிலை வளைத்தலாகிய) உழிஞைக்குமாறாக, இருந்தவேந்தன் தன்மதிலைக் காத்தற்கு ‘நொச்சி’ என்ற பெயர்கொடுத்து வேறுதிணையாகக் கூறிச்செல்லும்.†

---

* இவ்வாறு வேறு கூறுகின்ற வெண்பாமாலைக்கு முதனூலாகிய பன்னிரு படலத்துள் வெட்சிப்படலத்தைத் தொல்காப்பியனார் இயற்றினார் என்று கூறுவாரை மறுத்துத் தந்நூலுக்கு முரண்பட ஆசிரியர் இவ்வாறு கூறாராதலால், அவ்வெட்சிப்படலம் தொல்காப்பியர் இயற்றியதன்று என்பர் இளம்பூரணர் (௬௰).

† பன்னிருபடலமுடையார்கொள்கை அடியில்வரும் யாப்பருங்கல விருத்தி வாக்கியங்களால் அறியத்தக்கது (பக். ௩௨0):—“வெட்சி ஆ கவர்தலானும், கரந்தை உட்குவரச்சென்று விடுத்தலானும் ‘வெட்சியுங் கரந்தையுந் தம்முண் மாறே’; வஞ்சி மேற்சேறலானும், காஞ்சி அஞ்சாதெதிர்சென்று ஊன்ற

நொச்சிபோலக் கைக்கிளை பெருந்திணை என வேறிரண்டு தனித்திணை
களையும் அது வகுப்பதாகும். ஆயின், அவ்விரண்டனையும் அகப்புற
மென்றேகொண்டு தொல்காப்பியங் கூறுகின்றது. அன்றியும், அகத்
திணைகளில் 'இன்னவின்னதற்கு இது புறம்' என்று ஆசிரியர்கூறிய
வாறு வெண்பாமாலை கூறிற்றில்லை. இங்ஙனம், இரண்டுநூல்கட்கு
முள்ள வேறுபாடுகளை நோக்குமிடத்து, புறப்பொருள் முற்காலத்தே
வெவ்வேறுவகையாக இலக்கணம்வகுக்கப்பெற்று வழங்கிவந்தமை
புலப்படக்கூடியதாம். வெண்பாமாலையுள், வெட்சிமுதல் வாகையீறாய
திணை எட்டனுக்கும் அவ்வப்பூச்சூடுதல் உரித்தென்று தெளிவாகக்
கூறப்படுதல் நோக்கத்தக்கது. மற்ற வேறுபாடுகளை அந்நூல்நோக்கி
உணர்ந்துகொள்க. இனி, வெட்சிமுதலிய திணைவிகற்பங்களைத் தொல்
காப்பியனார் கூறியமுறையில் வைத்து விளக்குவோம்.

## 1. வெட்சித்திணை.

புறப்பொருளின்முதற்றிணையாகிய வெட்சி என்பது, வேந்தனால்
வப்பட்டு முனைப்புலங் காத்திருந்த தண்டத்தலைவர், பகைநிலத்
ச்சென்று களவினாலே ஆநிரையைக் கைக்கொண்டுபோந்து, அவற்
ப் பாதுகாத்தலைச்செய்வதாம் (ள). இதனை—"வேந்துவிடு முனை
வேற்றுப்புலக் களவின்—ஆதந் தோம்பன் மேவற் றாகும்" என
ரியர் கூறுமாற்றால் அறிக. இதனுள் 'வேந்துவிடுமுனைஞர்'
றதனால் (போர்செய்யத்தொடங்கிய) இருவேந்தரும் தத்தந் தண்டத்
லைவரை ஏவிவிடுவரென்றும், 'ஆதந்து ஓம்பல்' என்றதனால் களவில்
ருவர்கொண்ட நிரையை உரியவர் மீட்டுத்தந்து ஓம்புவரென்றும்
பொருள்தருதலின், அவ் விருவேந்தர்தண்டத்தலைவரும் அவரேவலால்
நிரைகோடற்கும் மீட்டற்கும் உரியரென்றும், இங்ஙனம் இருவர்க்கும்

---

னும் 'வஞ்சியுங் காஞ்சியுந் தம்முண் மாறே'; உழிஞை ஆரெயின் முற்றலா
றும் நொச்சி விழுமிதி னவ்வெயில் காத்தலானும் 'உழிஞையு நொச்சியுந் தம்
முண் மாறே'; 'பொருதல் தும்பை புணர்வ தென்ப'. இவ் விகற்பமெல்லாம்
ன்னிருபடலத்துட் காண்க." "வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்—
வட்கார்மேற் செல்வது வஞ்சியாம்—உட்கா—தெதிரூன்றல் காஞ்சி யெயில்
ல் நொச்சி—அதுவளைத்த லாகு முழிஞை யதிரப்—பொருவது தும்பையாம்
போர்க்களத்து மிக்கோர்—செருவென் றதுவாகை யாம்" என்னும் வெண்பாவும்
ங், கசஎங.; வீரசோழியம், பொருட்பட. உஉ உரை.) இங்கு ஒப்பிடற்பாலது.

கோடற்றொழில் உளதாயிற்றதனின் அடித்துக்கோடலும் மீட்கோட லும் வெட்சியாயிற்றென்றும், மீட்டலைக் 'கரந்தை' எனத் தனித்திணை யாக்கிக் கூறுவாரு முண்டெனினும், அதனை இச்சூத்திரத்தானும் வருஞ்சூத்திரத்தானும் தொல்காப்பியனார் 'வெட்சி' என்றே கொண்டன ரென்றும் நச்சினார்க்கினியர் எழுதுவர். "இருபெருவேந்தரும் பொரு வது கருதியக்கால், ஒருவர் ஒருவர்நாட்டுவாழும் அந்தணரும் ஆவும் முதலிய தீங்குசெய்யத்தகாத சாதிகளை ஆண்டுநின்றும் அகற்றவேண் டிப் 'புறம்போக' எனப் புகறலும், அங்ஙனம் போதற்கு அறிவில்லாத ஆனிரையைக் களவாற் றமேகொண்டுவந்து பாதுகாத்தலும் தீதெனப் படாது அறமேயாம் என்பதை, ஆசிரியர் 'ஆதந்தோம்பல்' என்றதனாற் குறித்தாரென்க. இந் நிரைகோடற்கெழும் வீரர் வெட்சிப்பூச்* சூடுதல் மரபு; "வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச் - சுரியிரும் பித்தை பொலியச் சூடி" (புறம்-௩00) எனக் காண்க.

இவ் வெட்சித்திணையானது, படையியங்கரவம் முதற் கொடை யீறாகப் பதினான்குதுறைகளாக ஆசிரியராற் பகுக்கப்பட்டுள்ளது. இப்பதினான்கனையும் நிரைகோடல் நிரைமீட்டல் என்னும் இரண்டு வகைக்கும் உரியனவாகப் பொருள்கொண்டு நச்சினார்க்கினியர் இருபத்தெட்டாக விரிப்பர். பழைய போர்முறையின்தொடக்க மாகிய இந் நிரைகோடல் மீட்டல்களின் வரலாறுகளை இத்துறைகளாற் சுருக்கமாக உணரலாம். அவை வருமாறு—தம் தலைவனது கட்டளை பெற்றேனும் பெறாமலேனும் வேந்தனொருவனுடைய படைவீரர் பகை வாது ஆனிரையைக் கவர்தற்கு ஆரவாரித்தெழும்போது, தாம் புறப்பட்ட இடத்தே அசரீரியாக எழுகின்ற நற்சொல் கேட்டல் மரபு. இது விரிச்சி† எனப்படும். [விரிச்சி-நற்சொல்] அங்ஙனம்

---

*இது, பிரகாசமும் செந்நிறமுமுடைய பூக்களைக்கொண்ட ஒருவகைச் செடி என்றும், மேல்நாட்டார் இதனை "Flame of the forest" "The country geraniam" என்பரென்றும் கூறுவர் டாக்டர் ஜீ. யூ. போப். (Siddhanta Dipika. Vol. III.)

† நச்சினார்க்கியர் "விருச்சிகன்—கனி: காரணப்பெயர்" எனக் கூறுவர் (சிந். காந்த. ௩௨௪). இதற்கு மஹாமஹோபாத்தியாய-ஐயரவர்கள் "விருச்சி கன்=ப்ருச்சகன்-கனி, கேள்விகேட்கப்படுகிறவன்" என் றெழுதியிருத்தல் அறியத்தக்கது (ஷை. இரண்டாம்பதிப்பு, பக். ௭0௪௪). விரிச்சி என்பது இவ் வடசொல்லின் திரிபுபோலும்.

நற்சொல்கேட்டுப் புறப்பட்டோர் பகைப்புலத்துள்ள ஒற்றர் உணராமற் சென்று, தம்மொற்றர்வாயிலாகப் பகைவர்செயலை அறிவர். இங்ஙனம் உணர்வது வேய் எனப்படும். அறிந்தபின், பகைவர்நிரைப் புறத்தே ஒடுங்கியுறைந்து, சமயம் நேர்ந்துழி அந்நிரையை வளைத்துக்கொண்டு நிரைகாவலரைக் கொன்று எதிர்ப்பாரற்று அவற்றைக் கவர்ந்து மீள்வர். இங்ஙனம் மீண்டுசெல்லும்போது, அவர்பின்னே தொடர்ந்து வந்து வேறுசிலர் போர்விளைப்பாராயின் அவரையும் வென்று, தாம் பற்றிய பசுக்களுக்குத் துன்பமில்லாமற்செய்துகொண்டு, பாடிவீட்டிலுள்ளோர் மகிழ்ந்தெதிர்கொள்ளும்படிவந்து கொணர்ந்த நிரைகளை ஊர்ப்புறத்தே நிறுத்திப் பின், தங்கள் தலைவனதேவலால் அவற்றைத் தமக்குட் பகுத்துக்கொள்வர். இது பாதீடு எனப்படும் [பகுத்து இடுதல், கூறிடுதல் என்பது பொருள்]; பகுத்துக்கொள்ளுங்கால், தம் வெற்றிமகிழ்ச்சியாற் சுற்றத்தோடு கள்ளுண்டுகளித்து விளையாடுதலும், ஆங்கு வந்த இரவலர்க்கு அந்நிரையிற் சிலவற்றை மனமுவந்தளித்தலும் போர்வீரரால் நிகழ்த்தப்படுவனவாம் இவையே, நிரைகொண்டோர் செய்திகளாகப் பதினான்குதுறைகளினுந் தொல்காப்பியனாற் கூறப்படுவன என உணர்க. இனி, இந் நிரைமீட்டோர்க்கும்* இப்பதினான்கும் ஏற்றபெற்றி அமைத்துக்கொள்ளப்படும். அவ்வாறு அமைக்குமிடத்து, மீட்டபசுக்களை இழந்தோர்க்குப் பகுத்திடுதலைப் 'பாதீடு' என்று பொருள்கொள்க. இங்ஙனம், நிரைகொண்டேனும் கொண்டதனை மீட்டேனும் வெற்றிபெற்ற வீரர்,† தமக்கு வழிவழியாகத் துடி என்ற இயம் இயக்கிவரும் 'துடியனை' உபசரித்துப் புகழ்ந்தும், தம் வீரச்செயற்குக் காரணமான கொற்றவைக்குப்‡ பராவுக்கடன்செலுத்தியும் மகிழ்வர் (௫௧).

---

* இம் மீட்டலைக் 'கரந்தை' எனத் தனித்திணையாக வெண்பாமாலை கூறும் இதன்படி, இவ்வொழுக்கத்துக்குக் கரந்தைப்பூச் சூடல் உரித்தாம் வயல்களிலுள்ள கொட்டைக்கரந்தை என்னும் பூடே இக்கரந்தை என்பர் (பதிற்-௪௦). இது குறிஞ்சிமலப்பூக்களிலொன்றாய் நாறுகரந்தை எனவும் வழங்கும் (குறிஞ்சிப். ௭௬ உரை).

† நிரைகொண்ட வீரரை வெட்சிமறவர் எனவும், நிரைமீட்ட வீரரைக் கரந்தைமறவர் எனவும் முன்னூல்கள் வழங்கும். இவற்றை, 'ஆளெறிந்து நிரையொடு பெயர்ந்த வெட்சிமறவர்' எனவும் 'கரந்தை மறவர்...நிரைமீட்டோன்' (பக். ௪௦௭) எனவும் வருந் தொடர்களால் உணர்க.

‡ கொற்றவை-வனதுர்க்கை (திருமுரு. ௨௫௮ உரை), மலையாளநாட்டார் பகவதியைக் கொற்றி என்பர்.

துடியன் என்பான் தமிழ்ப் பழங்குடிகளுள் ஒருவன் என்பது "துடியன் பாணன் பறையன் கடம்பனென்-றிந்நான் கல்லது குடியு மில்லை" என்ற புறப்பாடற்பகுதியால் (கூகூடு) விளங்கும். போர்நிகழ்ச்சியில், தனக்குரிய வீரனுக்கு உள்ளக்கிளர்ச்சியுண்டாகத் துடியியக்குதலும் வேற்படை முதலிய ஆயுதங்களைக் கொண்டுசென்று வீரனுக்கு உதவுதலும் (புறம்-உ அ௫) இத்துடியரின் தொழில்களாகத் தெரிகின்றன. இவர் இழிபிறப்பினரென்பது, "இழிபிறப் பாளன் கருங்கை சிவப்ப—வலி துரந்து சிலைக்கும் வன்கட் கருந்துடி" (புறம். கஎ0) என்பதனால் அறிக. மேற்குறித்த வெட்சிச்செய்திகளுள், ஒவ்வொன்றுக்கும் வெவ்வேறு பகுதிகள் கூறி, அவற்றுக்கும் மேற்கோள் காட்டிச்செல்வர் உரைகாரர். ஐயனாரிதனார், இத்திணைக்கு இருபது துறை கொண்டார்.

---

## 2. வஞ்சித்திணை.

இனி, வஞ்சித்திணையாவது, இருபெருவேந்தர்கள், மண்ணிடத்துள்ளவேட்கையாலே நாட்டில்வாழ்வார் அஞ்சும்படி சென்று, ஒருவன் மற்றொருவனைக் கொற்றங்கோடல் குறித்தது (சுஉ).* ஒருவன் மண்ணைவிரும்பி மேற்செல்லின், இருந்தவனும் அம்மண் அழியாமற் காத்தற்கு எதிர்த்து மேற்செல்வானாதலின், அவ்விருவரும் 'வஞ்சி வேந்தர்' எனப்படுவர். இவ் வஞ்சிவேந்தருடையசெய்திகளை விரித்துரைக்குஞ் சிறப்புடைத்துறைகள் பதின்மூன்றும். இவ்வஞ்சித்திணையின் வரலாறு அடியில்வருமாறு:—இருவர்படைகளும் ஆர்ப்பரித்துப் பகைப்புலத்துப் பரந்துசென்று அப்புலத்தை எரியாற்கொளுத்தலும்; ஒருவர் ஒருவரை மேற்செல்லுமிடத்துப் பிறவேந்தர் அவர்க்குத் துணையாகவர அப்போதுண்டாம் பெருமிதமும்; அவ்விருவருந் தத்தம் படையாளர்க்கும் பரிசிலர்க்கும் படைக்கலமும் பரிசிலும் அளித்தலும்; இருவரும் இரவும் பகலும் பலகாலும் முட்டிச்சென்று அந்நாட்டைக் காவல்

* இதற்கு வஞ்சிப்பூச் சூடுதல் உரித்தாம். வஞ்சி என்பது பொதுவாக எல்லாக்கொடிகளையும் உணர்த்துமேனும், ஈண்டுக்குறித்தது, ஆண்டுமுழுதும் பசுமைநிறமுடையதாக உள்ள ஒருவகைக்கொடியின் மஞ்சணிறப் பூவாம், என்பர், டாக்டர் போப்.

புரியும்வீரரைக் கொல்லுங் கொற்றமும்; போரில் வீரச்சிறப்பைக் காட்டிய தானைத்தலைவர், வேந்தனாற் சிறப்பெய்திப் புகழப்படும் நெடுமொழியும்;* [சிறப்பாவன—ஏனாதி காவிதி முதலிய பட்டங்களும் நாடும் ஊரும்† பெறுதல்.] பகைவேந்தரை ஒருபொருளாக மதியாது படையைச் செலுத்தும் பேராண்மையும்; தன் படை நிலையாற்றாது பெயர்ந்தவிடத்து விசையோடுவரும்வெள்ளத்தைக் கல்லணை தாங்கினாற்போலத் தன்மேல் வரும்படையைத்தானே தடுத்துநிற்கும் பெருமையும்; வேந்தன் பெரும் போர்புரிந்த பிற்றைநாள், அப்போர்வீரர்செயலைப் புகழ்ந்து ஊக்க முறுத்தற்குத் தானே அவருடன் உண்பவன்போலவந்து, அவர்க்கு வேண்டிய உண்டியை அளிக்கும் பெருஞ்சோற்றுநிலையும்; இவ்வாறு பொருதுநின்ற இருபெருவேந்தருள், ஒருவர் ஒருவாது வலிமிகுதியைக்கண்டஞ்சித் திறைகொடுத்தற்குடம்பட அது பெற்றோர்க்கு உளதாகிய விளக்கமும்; அங்ஙனம் திறைகொடுத்தோனது குறைபாடும்; வென்றவேந்தன் பகைநாடழித்தமைக்கு இரங்கித் தோற்றோனைச் சிறப்பிக்கும் கொற்றவள்ளையும்‡ [வள்ளை—உரற்பாட்டு]; அங்ஙனம் வென்றுந் தோற்றும் மீண்ட வேந்தர் தம் படைவீரரில்—கணை வேல் முதலிய பாய்ந்து புண்புற்றவரிடந் தாமேசென்று உசாவியும் பொருள் கொடுத்தும் தழுவி யுபசரித்தலாகிய தழிஞ்சியும் பிறவுமாம். [தழுச்சுதலால் தழிஞ்சியாயிற்று; தழுச்சுதல்—தழுவுதல்: "பொருகணை

* "மாராயம் பெற்ற நெடுமொழி - வேந்தனாற் சிறப்பெய்தியதனாற் பெற்ற மீக்கூற்று" என்பர் நச்சினார்க்கினியர் [மா + ராயம்-பேரரசனாற் பெறுஞ் சிறப்பு]. இனி, 'மாராயமாகிய உவகைபெற்ற நெடுமொழியும்' என்பர் இளம்பூரணவடிகள். மாராயம் - உவகை (திவா.).

† தஞ்சைஜில்லா, அறந்தாங்கித்தாலுகாவில் மாராயக்குடி என்றும், கும்பகோணந்தாலுகாவில் மாராயம் என்றும், சாஸனங்களில் மாராயப்பாடி என்றும் காணப்படும் ஊர்களின்பெயர்கள் இவ்வழக்கைக் குறிக்கவல்லன. "தானாதி யாகிய தார்வேந்தன் மோதிரஞ்சே-சேனாதிப் பட்டத் திவன்" (பக். கஉ அ) என்பதனாலும், காவிதிப்பூ, காவிதிப்புரவு என்னும் வழக்குக்களாலும் (நன். கஙஅ. மயிலைநாதருரை), அரசனால் மோதிரம் பொற்பூ முதலிய அடையாளங்களும் ஊர்களும் பட்டங்களுடன் பெறுவது பண்டைவழக்கென்பது விளங்கும்.

‡ 'கொற்றவள்ளை-தோற்ற கொற்றவன் அளிக்குந் திறை' என்பர் இளம்பூரணவடிகள்.

தழுஞ்சிய புண்மிசை மார்பின்" எனக் காண்க] ஆசிரியர் கூறிய உட்பிரிவுகளாகிய துறைகளும் இவற்றுள் அடங்கியுள்ளமை உரைநோக்கியுணர்க.

இத்துறைகளால், பழையவேந்தர், தம்படையாளரைத் தம்மைப் போலவே மதித்துப் போற்றிவந்தசெய்தி புலப்படும். இவ்வாறு வஞ்சிப்பூச்சூடி வெற்றிகருதி மேற்செல்லும்வழக்கம் கடைச்சங்ககாலத்தும் நன்கு வழங்கியதேயாம்; இதனைச் சேரன்—செங்குட்டுவன், கண்ணகியின்படிமஞ்செய்யக் கற்கொணர்தற்கும், தன்னையிகழ்ந்த ஆரியவரசராகிய கனகவிசயரை வெற்றிகொள்ளுதற்கும் 'யாத்திரை' (போர்குறித்தசெலவு) தொடங்குங்காலத்துத் தன்படையாளர்க்கு— "சொடைநிலை வஞ்சியுங் கொற்ற வஞ்சியும், நெடுமா ராய நிலைஇய வஞ்சியும், வென்றோர் விளங்கிய வியன்பெரு வஞ்சியும், குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும், வட்கார் போகிய வான்பனந் தோட்டுடன், புட்கைச் சேனை பொலியச் சூட்டி" யதைக் குறிப்பிட்டுக் கூறுதலால் அறியலாம் (சிலப். ௨௫, ௧௪௧—௧௪௭.).

---

## 3. உழிஞைத்திணை.

உழிஞையாவது—மேற்சென்றவேந்தன் வேற்றுவேந்தனது பேரரணை வளைத்து நிற்றலும், அதனுள் இருந்தவேந்தன் அவ்வரணைக் கைக்கொண்டு காத்தலுமாம். இத்திணையுள், சென்றுவளைத்த வேந்தன் செய்திகளுக்கு நான்கும், இருந்துகாத்த வேந்தன்செய்திகட்கு நான்கும் ஆக எட்டுத்துறைகள் கூறப்படுகின்றன. அவற்றுள், சென்றவேந்தன் செய்திகள் நான்காவன— (1) கொள்ளார்தேஎங் குறித்த கொற்றம்; அஃதாவது பகைவர்நாட்டைத் தான்கொள்வதற்குமுன்பே, அதனைக் கொண்டவன்போல வேண்டியோர்க்கு அந்நாடு அளித்தலைக் குறித்துவிடும் வெற்றி; "கழிந்தது பொழிந்தென" (௨௦௩) என்ற புறப்பாட்டினுள் "ஒன்னார் ஆரெயில் அவர்கட் டாகவும்—நுமதெனப் பாண்கடனிறுக்கும் வள்ளியோய்" என ஊன்பொதிபசுங்குடையார், சோழனொருவனது கொள்ளார்தேஎங் குறித்தகொற்றத்தைக் கூறுதல் காண்க. "இராமன் இலங்கை கொள்வதன்முன்பு (அதனை) வீடணற்குக் கொடுத்த துறையும் அது" என்பர் நச்சினார்க்கினியர். (2) இங்ஙனம்

குறித்தகொள்கையை முடிக்கவல்ல வேந்தனது பெருமையைப் படைத் தலைவர் தூதர் முதலியோர் சென்று பகைவேந்தற்கு எடுத்துப் புகழ்வது; இவருள் தூதன், புறத்துள்ள உழிஞைவேந்தன்பால் தன்னரசன் சிறப்புக் கூறுவனென்க. (3) ஒருகாலத்தும் அழிவில்லாதமதிலை, இற்றைப்பகலில் அழிப்பேம் என்று கூறி அங்ஙனமே அழிக்கவிரும்பு தல்; (4) அங்ஙனம் அழித்தலை விரும்பியவன், பகைமதின்மேற் சென்ற விடத்து, அம்மதிலகத்துள்ளோர் பொழியாநின்ற அப்புமாரியை விலக்குதற்குக்—கிடுகு கேடகம் பரிசை பலகை முதலிய தோற்கருவிகளை மிகுதியாகக்கொண்டு செல்லுதல் எனக் காண்க.

இனி, உள்ளிருந்து தன்மதிலைக் காக்கும் உழிஞைவேந்தன்செய்தி கள் நான்காவன— (1) அவ்வுழிஞையோனது படை குடி கூழ் அமைச்சு நட்பு நீர்நிலை ஏமப்பொருள் ஏமப்பண்டங்கள்முதலாகிய பெருஞ்செல் வங்களைக்கூறுதலும், (2) புறத்தோனை அவ்வகத்தோன் செல்வத்தா லன்றிப் போர்த்தொழிலால் வருத்தியது கூறுதலும், (3) அகத்திருந் தோன் தன் அரணுக்கு அழிவுதோன்றியவழி அவன் புறத்துப் போந்து போர்செய்தலைக் கூறுதலும், (4) புறத்தோன் அகத்தோன்மேல் வந்துழி, அவன்பகையைப் பொருட்படுத்தாது அகத்தோன் இகழ்ந் திருத்தற்கேற்ற மதிலின்பெருமைகூறுதலும் ஆகும்.

இனி, இவ்வுழிஞைத்திணையில், இருபெருவேந்தர்க்கும் ஒன்றுப் வரும் வேறு பன்னிரண்டுதுறைகளும் ஆசிரியர் கூறுவர். அவையா வன:—(1,2) அவ்விருவரும் தம் ஆக்கங்கருதியும் குடிகளைக் காத்தற்கும் உயர்த்திய குடைகளையும் வாள்களையும் நாட்கோள்ளுதல்; "நாட் கொள்ளுதலாவது—நக்ஷத்திரமும் இராசியும் தத்தமக்கு ஏற்பக்கொண்டு காரியந் தொடங்கும்போது, அக்காலத்துக்கு இடையூறுதோன்ற, அது பற்றித் தமக்கு இன்றியமையாக் கருவிகளை அத்திசைநோக்கிக் குறித்த காலத்திலே முன்செல்லும்படி விடுதல்." இதனைப் "பரஸ்தானம்" என் பர் வடநூலார். (3) புறத்தோரும் அகத்தோரும் எயில்மதிலில் ஏணி மிசைநின்று போர்செய்தல்; இஃது "ஏணிமயக்கம்" எனப்படும்;

"பொருவரு மூதூரிற் போர்வேட் டொருவற்
கொருவ னுடன்றெழுந்த காலை—யிருவரும்
மண்ணொடு சார்த்தி மதில்சார்த் தியவேணி
விண்ணொடு சார்த்தி விடும்"

எனக் காண்க. (4) அவ் விருபகைவரும், புறத்தும் அகத்தும் தம் படைகொண்டு போர்தொலைத்து, அம்மதிலைக் கைப்பற்றிய வினை முதிர்ச்சி; (5) உண்மதிலில் வளைத்துநின்றவன், போர்செய்யும் உள்ளத்தை விடாமலும், வளைக்கப்பட்டவன் மதிலைவிடாமலுங் காத்தலை விரும்பிய நொச்சி; நொச்சியாவது மதில்காவல்; "இதற்கு நொச்சி ஆண்டுச் சூடுதலும் உரித்து"* என்பர் நச்சினார்க்கினியர். இந் நொச்சியை ஒரு தனித்திணையாகக் கொண்டு ஐயனாரிதனார் கூறுதல் மேலே குறிக்கப்பட்டது. (6) இடைமதிலில், அகத்தோனிடத்தைப் புறத்தோனும், புறத்தோனிடத்தை அகத்தோனும் விரும்பிக் கைப் பற்றிய புதுமை; (7) அவ்விருவரும் எயிற்புறத்துள்ள அகழியின் இரு கரையும்பற்றிக்கொண்டு, அங்குநின்று போர்புரியும் பாசி; நீர்ப்பாசி போல அவ்விருவரும் நீங்காமல் நிற்றலால், "பாசி" எனப்பட்டதென்பர். (8) அம்மதிற்புறத்தன்றி, ஊரகத்தே போர்குறித்துநின்ற பாசிமாறன்; நீர்ப்பாசிபோல, இருவரும் ஒதுங்கியுந் தூர்ந்தும் பொருதலின் இதனையும் "பாசி" என்றார். (9) புறஞ்சேரிமதிலும் ஊர்மதிலுமல்லாத கோயிற் புரிசை(அரண்மனைமதில்) மீது ஏறிநின்று அவ்விருவரும் போர்செய்தல்; (10) அங்ஙனம் போர்செய்த மதிற்கண்ணே, ஒருவர் ஒருவரைக்கொன்று, பட்டவேந்தன்பெயரானே வென்றவேந்தன் முடிபுனைந்து நீராடும் மங்கலம்; இதனை "மண்ணுமங்கலம்" என்பர்.† (11) அங்ஙனம் வெற்றிக் கேதுவாய்நின்ற தன் வாளைக் கொற்றவை (மாகாளி) மேல் நிறுத்தி அதற்கு நீராட்டும் வாண்மங்கலம்; (12) அவ்வாண்மங்கலம் நிகழ்ந்த பின்னர், வென்றவேந்தன் தன்படைக்கெல்லாம் சிறப்புச்செய்தற்காக அவற்றை ஒருங்குகூட்டி மகிழ்வித்தல்; ஆகப் பன்னிரண்டு துறைகளுங் காண்க. இனித் தேவர்க்குரிய உழிஞைத்துறைகள் சிலவும், வேறுபல துறைகளும் இப்பன்னிரண்டுடன்சேர்த்து உழிஞைத்திணைக்குக் கூறுவர், ஐயன் ஆரிதனார். நச்சினார்க்கினியர் "இனித் தேவர்க்குரிய

* "நீரற வறியா நிலமுதற் கலந்த—கருங்குரனொச்சிக் கண்ணார் குவவுத் தழை" (புறம். உஎ௧) என்பதனால் இப்பூவினியல்பு காண்க. இஃதோர் காட்டு மரமென்றும், பல வினமுடையதாகவும், ஐந்திலைகள்கொண்டதாகவும் உள்ள தென்றும், இதன்பூ மங்கின நீலவர்ணமும் சுத்தமும் இனியமணமுமுடைய தென்றுங் கூறுவர் டாக்டர்-போப்.

† "வீராபிடேகம்" எனவும் கூறுவர் (சீவகசிந். மண். உஉ௯.).

உழிஞைத்துறைகள்பலவுங் கூறுவரால் எனின்—அவை, உலகியலாய் எஞ்ஞான்றும் நிகழ்தலின்றி, ஒருகால் ஒருவர் வேண்டியவாறு செய்வன வாகலின், தமிழ்கூறுநல்லுலகத்தன அல்லவென மறுக்க" என்பர். இத்திணையில், உழிஞைக்கொடியும்* சூடுதலுண்டென்பது, "நெடுங் கொடி யுழிஞைப் பவரொடு மிடைந்து—செறியத் தொடுத்த தேம்பாய் கண்ணி" (புறம்—எசு) என்பதனால் அறியலாகும்.

---

## 4. தும்பைத்திணை.

தும்பையாவது, தன்வலியை உலகம்புகழ்தலே பொருளாகக் கருதிப் பகைமேற்சென்ற வேந்தனைப் பகைவேந்தனும் அப்புகழே கருதி ஒருகளத்தெதிர்த்து அவன்வலியினை அழித்தலாம. இத்தும்பைத் திணை, படையாளரது அரிய பெரிய வீரச்செயல்களை விளக்குவதாகும். அஃதாவது—பலரும் ஒருவனை அணுகிப் பொருதற்கஞ்சி விலகிநின்று, அம்பாலெய்தும் வேல்கொண்டெறிந்தும் போர்புரிய, அவ்வாயுதங்கள் அவனுடம்பிற் பாய்தலாற் குற்றுயிரானநிலையிலும் வீரச்செயலில் அவன் துளங்காமையும், வாள்முதலியவற்றால் அவனுடம்பேனுந் தலை யேனும் அறுபட்ட நிலையினும் நிலத்துச்சாயாது அவனுடம்பு வீரச் செயல்காட்டி ஆடுவதும் போல்வன. இந்நிலையினை "அட்டையாடுதல்" என்பர். அட்டை, உடலிரண்டானபொழுதும் ஊர்ந்துசெல்லுமாறு போலப் படையோடு தான் பட்டவிடத்தும் அவனுடம்பு ஆடுதலின் இப் பெயர் வழங்கியதென்பர்.† "விழித்தகண் வேல்கொண் டெறிய அழித் திமைப்பின்—ஒட்டன்றோ வன்க ணவர்க்கு" என வள்ளுவனாரும் இத்தும்பைச்செயலையே குறித்தல் காண்க. இத்தும்பை, ஏனைத்திணை கட்கும் பொதுவாம் எனப்படுகின்றது. அஃதாவது—நிரைகொள்ளப் பட்டோன் அவற்றை மீட்கும்போது முற்கூறித்த வீரச்செயல்காட்டுத

---

*"பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டி" என்ற புறநானூற்றடி யின் (௫௦) விசேடவுரையில் "உழிஞை-கொற்றான்; அது குடநாட்டார்வழக்கு" என்பர் உரைகாரர். இது, பருத்தியில் ஓரின மென்பர், டாக்டர்-போப்.

†கன்னடத்தில் 'அட்டெ' என்பதும், தெலுங்கில் 'அட்ட' என்பதும் உடற்குறைக்குப் பெயராதலின், அவ்வழக்குப்பற்றிக் 'குறைபட்ட உடற்றுண் டம் ஆடுதல்' எனினும் அமையும்.

னும், நிரைகொண்டோனும் அவ்வாறுகாட்டுதலும் வெட்சிப்புறத்துத் தும்பையெனப்படும்; இவ்வாறே மற்றைத்திணைகளின்புறத்தும் இத் தும்பை நிகழ்தல் அறிந்துகொள்ளற்பாலது.

இனி, இத்தும்பைத்திணைக்கு ஆசிரியர் பன்னிரண்டுதுறைகள் கூறுவர். அவை மேற்காட்டிய வீரச்செய்திகளைப்பற்றாது, மேற்சென்றவனும் அவனை எதிர்த்துநின்றவனுமாகிய வேந்தர்செய்திகளையே குறிப்பன; அவை வருமாறு:-(1) பகைவர் அஞ்சத்தக்க தானை (= காலாள்) நிலை; (2) யானைநிலை; (3) குதிரைநிலை; இம் மூன்றுநிலைகளும்பற்றிய செய்திகள், தனிச்செய்யுள்களிற் சிறுபான்மையாகவும், தகடூர்யாத்திரை பெருந்தேவனார்பாரதம் போன்ற தொடர்நிலைச்செய்யுட்கண்ணே பெரும்பான்மையாகவும் வரும் என்பர். (4) தன் படைவீரர்போலத் தானும் நேர்நின்று பொருகின்றவேந்தனைப் பகைவர் சூழ்ந்து மொய்த்தவிடத்து அவனுடைய படைத்தலைவன் ஒருவன், தான் வேறிடத்துச்செய்து நின்ற போரைக் கைவிட்டுத் தன்வேந்தனோடு பொருகின்றாரை வென்ற தார்நிலை; தார் என்பது முந்துற்றுப்பொருகின்ற படையாதலின், இது தார்நிலையாயிற்று. "தார் தாங்கிச் செல்வது தானை" (குறள்-எசுஎ) எனக் காண்க. (5) அத் தானைத்தலைவரே தம்மிற் பொருது வீழ்தல்; (6) தனது உடைந்த படையிடத்தே ஒருதலைவன் சென்று அதன் பின்னணியை மதர்த்த எருமைபோலத் தாங்கிநிற்கும் எருமை; இதனை "எருமைமறம்" என்பர்* ஐயனாரிதனார் (தும்பை. கரு). (7) கையிலுள்ள ஆயுதத்தை எறிந்துவிட்டு மெய்யாற் பொருதல்; (8) பகைவேந்தன் ஊர்ந்துவந்த களிற்றை எறிந்து வீழ்த்தல்; (9) அங்ஙனம் களிற்றொடுவீழ்ந்த அரசனை, மற்றவேந்தன்படையாளர் கொன்று, அக் கொல்லப்பட்டவனைச் சூழ்ந்துநின்று ஆடும் அமலை; இதனால், வீழ்ந்த அரசனைச் சூழ்ந்துநின்றாடி, வென்றவர் மரியாதைசெய்தல் பண்டைமரபாதல் விளங்கும்.

"ஆளுங் குரிசி லுவகைக் களவென்னும்
கேளன்றிக் கொன்றோர் கேளாகி—வாள்வீசி
ஆடினார் ஆர்த்தார் அடிதோய்ந்த மண்வாங்கிச்
சூடினார் வீழ்ந்தானைச் சூழ்ந்து."

---

*மற்போரும் இவ் வெருமைமறமாம் என்பர் (சீவகசிந். மண். கஙெஅ).

என்னும் வெண்பாவாலும் இச்செய்தி உணர்க. (10) இருபெருவேந்தரும் அவர்க்குத் துணையாகவந்த அரசரும், தானைத்தலைவரும் வாளாற் பெரும்போர் புரிந்து, ஒருவரும் ஒழியாமற் களத்துவீழ்ந்த தொகைநிலை; (11) போரிடத்தே, தன்வேந்தன் மாற்றரசனது வஞ்சத்தாற் பட்டானாக, அதுகண்டு சினங்கொண்ட மனத்தனாகிய பெரும்படைத் தலைவனொருவன், தலைமயங்கிப் போர்புரிந்த நல்லிசைநிலை; "அது குருகுலவேந்தனை (துரியோதனனை)க் குறங்கு (துடை) அறுத்த ஞான்று, இரவு ஊரெறிந்து, பாஞ்சாலரையும் பஞ்சவர்மக்களையும் கொன்று வென்றிகொண்ட அச்சுவத்தாமாவின் போர்த்தொழில் போல்வன" என்பர் நச்சினார்க்கினியர். (12) அவ்வஞ்சத்தாற் கொல்லப் பட்ட வேந்தனுடைய பல்படையும் புறங்கொடுத்தலால், அப்புறங்காட்டியவரைக் கொல்லுதல் அறனன்று என்று கருதாது, அவரையுங் கொன்றுகுவிக்கும் நூழிலாட்டு (நூழில்-கொன்றுகுவித்தல்); ஆகத் துறை பன்னிரண்டுங் கண்டுகொள்க. இத்திணையிற் சூடுதற்குரிய தும்பைப்பூ, பொன்னாலும் அரசர் அணிந்துகொள்வதுண்டென்பது, "பொலம்பூந்தும்பை" (புறம்-உ) என்னும் மேற்கோளால் அறியப்படும்.

---

## 5. வாகைத்திணை.

வாகையாவது வலியும் வருத்தமுமின்றி, இயல்பாகிய ஒழுக்கத்தானே, நான்குவருணத்தோரும் அறிவரும் தாபதர்முதலியோரும் தம்முடைய தொழிற்கூறுகளை மிகுதிப்படுத்தலாம்; "தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்-பாகுபட மிகுதிப் படுத்த லென்ப" என்பர் தொல்காப்பியனார். ஐயனாரிதனார்—"வாகைப்பூவைப்* புனைந்து மாறு

---

* இதனில் "கொத்தான்வாகை" என்ற இனத்தின் பூவைச்சூடுதலே பழையவழக்கென்று தெரிகிறது (புறப். வெண். அ-க உரை). இது வெண்மை நிறமுடைய பூக்கள்கொண்ட ஒருவகைமரமென்றும், இதனை "Mimosa flectuosa" என்பரென்றும் கூறுவர் டாக்டர் போப். ஐரோப்பாவிலும்—"ஆலிவ்" (Olive) என்ற சிதவிருக்ஷத்தின் இலைகளால், கிரீடம்போலச் செய்யப் பட்டமாலையைப் பண்டைக்காலத்து ரோமர் யவனர்கள், போரில் வெற்றி கொண்ட வீரர்க்குப் பரிசாக அளித்துவந்தசெய்தி—"ஹோமர்" (Homer) என்ற பூர்வகவி இயற்றிய "ஒடீஸி" "இலியட்" என்ற காவியங்களால் அறியப்படுவன என்றும், தற்காலத்தே, எல்லா மேல்நாடுகளிலும், இவ்விருக்ஷத்தின் பூமாலையைச் சாந்தத்துக்கு அடையாளமாக வழங்கிவருகின்றனரென்றும் கூறுவர்.

பாட்டோடு பகைவேந்தைக் கொன்று ஆரவாரித்தல்" என்பர்; "இலைபுனை வாகை சூடி யிகன்மலைந்து—அலைகடற் றானை யரசட் டார்த்தன்று" எனக் காண்க. இவ்வாசிரியர்கூற்றுப்படி தத்தம் தொழிற்கூறுகளை மிகுதிப்படுத்தல் என்பது, தம்மைத் தாமே மிகுதிப்படுத்தலும், தம் மைப் பிறர் மிகுதிப்படுத்தலும் என இருவகையாம். இரணியனைப் போல வலியாலும் வருத்தத்தாலும் பிறரைக்கொண்டு கூறுவித்துக் கொள்ளுதல் வாகையன்றென்றும், ஒருதொழிற்கண்ணே வெற்றியானது உறழ்ச்சியால் (மாறுபாட்டால்) வருமாயின் அது வாகை எனவும், இயல் பான் வருமாயின் அது முல்லையெனவும் நச்சினார்க்கினியர் எழுதுவர். அகத்திணையுட் பாலை பெருவரவிற்றாய் நூல்களுள் வருமாறுபோல, அதன்புறமாகிய இவ்வாகையும் பெருவரவிற்றாய்வரும் எனப்படுதலால் (பக். கஙஎ), புறப்பொருள்பற்றியசெய்யுள்வழக்கில், இத்திணை மிகுதி யாகப் பயில்கின்றமை உணரப்படும்.

இனி, இவ்வாகைத்திணைப்பகுதிகள் பரந்துபட்டனவாயினும் அவற்றை ஏழாக ஒருவாறு தொகுத்துரைப்பர் ஆசிரியர். அவையாவன:- (1) அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்கம்; பார்ப்பார்க்குரிய ஆறுவன— ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், கொடுத்தல், கோடல் என் பன. (2) ஐவகை மரபின் அரசர் பக்கம்; ஐவகையாவன-ஓதல், வேட்டல், ஈதல், காத்தல், தண்டஞ்செய்தல் என்பன (புறப்-வெண். அ-கூ உரை). (3) இருமூன்றுமரபி னேனோர்பக்கம்; ஏனோர்-வணிகரும் வேளாளரும். வணிகர்க்குரிய ஆறு:-ஓதல், வேட்டல், ஈதல், உழவு, நிரையோம்பல், வாணிகம் என்பன. வேளாளர்க்குரிய ஆறு:-வேதமொழிந்தன ஓதல், ஈதல், உழவு, நிரையோம்பல், வாணிகம், வழிபாடு என்பன. "இனி வேளாளர்க்கு வழிபாடுகொள்ளாது, அரசர் இவரிடம் பெண்கோடல் பற்றி வேட்டலுளதென்று வேட்டலைக்கூட்டி ஆறு என்றும், அரசரால் அச் சிறப்பெய்தாத வேளாளர்க்கே வழிபாடு உரித்தென்றுங் கூறுவாரு முண்டு" என்பர். (4) மூவகைக்காலமும் நெறியினாற்றிய அறிவன் தேயம்-குற்றமற்ற ஒழுக்கங்களை மூவகைக்காலத்தும் வழங்கு நெறிப் படியமைத்த முழுதுணர்வுடைய அறிவர்பகுதி; இவ்வறிவர், கலச யோனியாகிய அகத்தியன்முதலியோர் என்பர். (5) "நாலிருவழக்கிற் றாபதபக்கம்"-எண்வகைமார்க்கத்திற் றவம்புரியும் முனிவர்பகுதி; இப் பகுதி-தவஞ்செய்வார்க்குரிய எட்டும், தவம்புரிந்து யோகஞ்செய்வார்க்

குரிய எட்டும் என இருவகையாமென்பர்; இவற்றுள், தவம்புரிவார்க்குரியவையாவன உணவினும் நீரினும் சென்ற மனத்தைத் தடுத்தலும், ஐந்தீநடுவிலும் நீர்நிலையிலும் நிற்றலும், கடலுங் காடும் மலையுமுதலியவற்றில் நிற்றலும், தாமரையும் ஆம்பலும் யாமையுமுதலிய ஆசனத்திருத்தலும், உண்டற்காலை உரையாடாமையும், இறந்தகாலந்தொட்டு வாய்வாளாமையும் (மௌனம்) ஆறுமென்றும்; தவம்புரிந்து யோகஞ்செய்வார்க்குரியவாவன:-இயமம், நியமம், ஆசனம், வளிநிலை (பிராணாயாமம்), தொகைநிலை (பிரத்தியாகாரம்), பொறைநிலை (தாரணை), நினைதல் (தியானம்), சமாதி என்பன என்றுங் கூறுவர் நச்சினார்க்கினியர் (பக்-கசுரு). (6) "அறிமரபிற் பொருநர்கட்பால்"-தத்தம் தொழின்முறையானே போர்புரிவார்பகுதி; அவை, "சொல்லானும் பாட்டானுங் கூத்தானும் மல்லானுஞ் சூதானும் பிறவற்றானும் வேறலாம்." (7) அனைநிலைவகை-மேற்கூறிய மூன்றுவருணத்தாரும் பிறரும் அடியாக-அவரிடத்துத் தோன்றி வேறுபட்டோர் பகுதி; இவர்கள், வருணசாங்கரியத்தால் வந்த கலப்புச்சாதியராவர். இச்சாதியாரின் வேறுபாட்டுவிரிவை மனுமுதலிய நூல்களிற் கண்டுகொள்க. "யோகிகளாய் உபாயங்களால் முக்காலமுமுணர்ந்த மாமூலர் முதலியோர் அறிவன்றேயத்து அனைநிலைவகையோராவர்; அவர்க்கு மாணாக்கராகித்தவஞ்செய்வோர் தாபதபக்கத்தராவர்; தகர் (ஆடு) வென்றி, பூழ் (சிவல்) வென்றி, கோழிவென்றி முதலிய பகுதிகள் பொருநர்கண் அனைநிலைவகையாம்" என்பர் உரைகாரர். இனிப் பார்ப்பனப்பகுதி முதலியவற்றின் விரிவு ஈண்டு விரிப்பிற் பெருகுமாதலால் உரைநோக்கி உணரற்பாலன. மேலே பார்ப்பனப்பக்கமுதலியவற்றுக்கு ஆசிரியர்கூறிய எண்கள், "அவைகூறிய வடநூல்களில் வேறே எண்ணுதற்குரியன சில இல்லாமல் எண்ணப்பட்டன" என்பர் நச்சினார்க்கினியர் (பக்-உ௭௬). இங்ஙனம் அவ்வுரைகாரர் கருதிய வடநூல்களிலே கௌடில்யரது அர்த்தசாஸ்திரம் தலைமையானதாகும்.*

---

* ஈண்டுக் கூறப்பட்டவாறே, கௌடில்யரது அர்த்தசாஸ்திரத்தும் (பிரகரணம்-க, அத்-ங.) அந்தணர்முதலியோர்க்குரிய தொழில்கள் கூறப்படுவனவாயினும், அரசரைத்தொழில்களுள் தண்டஞ்செய்தல் என்பதற்குப் பிரதியாகப் படைக்கலம்வழங்கல் என்பதும், சூத்திரரதுதொழில்களுள் ஓதல் ஈதல்களுக்குப் பிரதியாகக் காருகத்தொழில் குயிலுவத்தொழில் என்பனவும் அந்நூலுள் வேறுபடுவனவாம். திவாகரரும் (கஉ, அக), வீரசோழியவுரைகாரரும்

## 6. காஞ்சித்திணை.

காஞ்சித்திணையாவது, பெரும்பான்மை வீட்டின்பம் ஏதுவாக, அறம்பொருளின்பமென்றவற்றானும் அவற்றின்பகுதியாகிய உயிர் யாக்கை செல்வம் இளமை முதலியவற்றானும் நிலைபேறில்லாத உலகியற்கையைக் கூறுவதாகும். இக்காஞ்சி வீடு ஏதுவாகவன்றிச் சிறுபான்மை நிலையாமைக்குறிப்பே ஏதுவாகக் கூறவும்படும் என்பர். பிற்கூறிய நிலையாமைக்குறிப்பேபற்றி நிகழுங் காஞ்சியை, ஆண்பாற்காஞ்சி பெண்பாற்காஞ்சி என இரண்டு துறைகளாக வகுத்து ஒவ்வொன்றும் பத்துப் பகுதிப்பட ஆசிரியர் விரிக்கின்றார். அவற்றுள், ஆண்பாற்காஞ்சி பத்தாவன:—(1) பிறரால் தடுத்தற்கரிய கூற்றம் வருமென்று சான்றோர் கூறும் பெருங்காஞ்சி. (2) இளமைத்தன்மை நீங்கிய அறிவுமிக்கோர், அவ்விளமை கழியாத அறிவின்மாக்கட்குக் காட்டிய முதுகாஞ்சி. "வழிநின்று பயவா மாண்பில் வாழ்க்கைக்—கழிந்தோ ரொழிந்தோர்க்குக் காட்டிய காஞ்சியும்" என்றார் இளங்கோவடிகளும் (சிலப்-காதை-உ௫ கஅ-உ). (3) போரில் விழுப்புண்†பட்ட பெருவீரனொருவன், அதனை ஆற்றிக்கொண்டு வாழும் வாழ்க்கையை வேண்டாது, அப்புண்ணைக் கிழித்து இறக்கும் மறக்காஞ்சி. "தன்னொடு—முன்மலைந்து மடிந்த ஓடா விடலை—நடுகல் நெடுநிலை நோக்கி யாங்குத்தன்—புண்வாய் கிழித்தனன் புகழோன்" என இலக்கியமும் காண்க. (4) போர்நிகழ்ந்த இரவிற் புண்பட்டுக் கிடந்தவீரனைக் காத்தற்குரிய சுற்றமில்லாமையால்,

---

(பொருட். கக, உரை.) அர்த்தநூனமுறையையே பெரும்பானமை தழுவிக் கூறுவர். ஆயின், ஈண்டுப் படைக்கலம் வழங்கல் என்றுள்ளது, படைக்கலம் பயிறல் எனத் திவாகரத்தும், புறப்பொருள்வெண்பாமாலையுரையினும் (அ, ௩) வேறுபடக் காணப்படுகின்றது. காருகமும் குயிலுவமும இன்னவென்பதனை முறையே—"பருத்திநூல் பட்டுநூலமைத்தாடை யாக்கலும், சுமத்தலும் பிறவுங் காருகவினைத்தொழில்" "குயிலுவம் வாத்தியங் கொட்டுத லாகும" என வரும் திவாகர சூத்திரங்களால் உணர்க. இனித் தாபதர்க்குரிய எணவகைத்தொழிலை—'நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடீஇச், சோர்சடை தாழச் சுடரோம்பி—யூரடையார், கானகத்த கொண்டு கடவுள் விருந்தோமபல், வானகத் துய்க்கும் வழி" என, ஐயனாரிதனார் கூறியது கௌடில்யரது அர்த்தசாஸ்திர முறைபற்றியதே (பிரக—க, அத்-அ) என்பதும் அறியத்தக்கது.

†விழுப்புண்-போர்முகத்து "முகத்தினும் மார்பினும் பட்ட புண்" என்பர் பரிமேலழகர் (குறள்-எஎசு).

அவனைப் பேயே காத்ததாகக் கூறும் பேய்க்காஞ்சி; அஃதாவது—அவனுயிர்போந்துணையும், ஓரியும் பேயும் நாயும் நரியுங் கடிந்து அவன் தசையைக் கொள்ளாவண்ணம் பாதுகாத்தல் என்பர். (5) ஒரு வீரன் இறந்தவிடத்து அவன் இத்தன்மையன் என்று கழிவுபொருள்படும்படி, ஏனையோர் இரங்கிக்கூறும் மன்னைக்காஞ்சி; இது பெரும்பான்மை, மன் என்ற இடைச்சொற்பற்றியே வருதலால், உடம்பொடுபுணர்த்து 'மன்னைக்காஞ்சி' எனப்பட்டதென்பர். அதியமான் இறந்தபோது ஔவையார் இரங்கிப்பாடிய "சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே" என்ற புறப்பாட்டு இக் காஞ்சிக்கு ஏற்ற உதாரணமாம். (6) 'இத்தன்மைய தொன்றைச் செய்ய ஆற்றேனாயின் இன்னவாறாகக் கடவேன்' என்று கூறும் வஞ்சினக்காஞ்சி; இது தான் செய்யக்கருதியது பொய்த்துப் போக, அதனால் வந்த குற்றம் பொறுக்காது உயிர்விடுதலாம். (7) போரிலே புண்ணுற்றுக்கிடந்த தன்கணவனை அவனமனைவி பேய் தீண்டாதவண்ணங் காத்துத் தானும் அவனைத் தீண்டாது நிற்கும் தொடாக்காஞ்சி. (8) உயிர்நீத்த கணவன்மேல் வேல்பாய்ந்த வடுவைக் கண்டு அவன்மனைவி அஞ்சிய ஆஞ்சிக்காஞ்சி; எஞ்ஞான்றும் தனக்கு இன்பஞ்செய்துவந்த வீரனுடம்பு அடையாளந்தெரியாமற் புண்பட்டதனால் அச்சம் நிகழ்ந்ததென்க (ஆஞ்சி—அச்சம்). இக்காஞ்சியை—உருத்தெரியாமற்செய்து தன் கணவன்மேற் பாய்ந்துகிடந்த வேலைப் பிடுங்கிக்கொண்டு அவன்மனைவி தன்னுயிரைப் போக்கிக்கொள்ளுதலாகவுங் கொள்வர்;

"கல்லைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோன்—அவ்வேலே
அம்பிற் பிறழுந் தடங்க ணவன்காதற்
கொம்பிற்கு மாயிற்றே கூற்று"

என இச்செயல் காண்க. (9) தம் பெண்ணை மணம்புரிந்துகொடுக்காது மறுத்தல்பற்றிப் பகைவனாய் அப்பெண்ணை வலிந்துகொள்ளுதற்குப் படையெடுத்துவந்த அரசனோடு, முதுகுடியிற்பிறந்த மக்கள் தம் மகளிரைக்கொடுத்தற்கு அஞ்சிய மகட்பாற்காஞ்சி; இச்செய்தி பண்டைக் காலத்தில் இராக்கதமணம் வழக்கிலிருந்துவந்தசெய்தியைக் குறிக்கும். இம் மகட்பாற்காஞ்சிபற்றி இவ்வாராய்ச்சித்தொடக்கத்தே (பக். 9-11) விளக்கப்பட்டுள்ளது. (10) போரில் வீழ்ந்துகிடந்த தன் கணவன்

தலையைத் தன் முலையினும் முகத்தினுஞ் சேர்த்துக்கொண்டு, அவன் மனைவி மனமுடைந்து இறந்தநிலை—என ஆண்பாற்காஞ்சிபத்துங் கண்டு கொள்க. இவற்றுள்ளே ஈற்றில் நின்ற சிலபகுதிகள் பெண்பாற்குரியன வாகத்தோற்றினும் ஆண்பாலாரதுவீரத்தையே சிறப்பிக்கும் நோக்க முடையன என்க.

இவற்றுள், போரிடையே, மனைவியர் களத்திற்சென்று தம் கணவரை உபசரித்தலும், அவரிறந்தால் ஆண்டே தாமும் உடனிறத்தலும் முதலாய வீரச்செயல்களைப் பெண்பாலார்க்கும் ஆசிரியர் கூறுதலால், அக்காலத்து விளங்கிய வீரபத்தினிகளின்பெருமை வெளியாம். பெண்டிர்க்குள் மிக்க வீரம் முற்காலத்திருந்தசெய்தியை "வீரத்தாய்மார்" என்ற வியாசத்து விளக்கியுள்ளேம் (செந்தமிழ். தொகுதி-௫. பகுதி-௧௦, பக். ௪௫௯-௪௯௯).

இனிப் பெண்பாற்காஞ்சி பத்தும் முறையே வருமாறு:—(1) பெரும்புகழுடையனாக மாய்ந்தானொருவனை, அவனைச் சேர்ந்த பெண்கிளைச்சுற்றம் சூழ்ந்துகொண்டு அழுங் கூப்பீடு; இது சுற்றத்தாரது அழுகைக்குரல் விரவியெழுந்த ஓசையாம். இது முதலிய துறைகள், போரிடத்தன்றி வேறிடத்து நிகழ்வனவென்க. (2) சுற்றத்தாரில்லாமல் மனைவியர் தாமே தத்தம் கொழுநரைத் தழுவிக்கொண்டு அழுவதனாற் கண்டோர்க்கு உண்டாகிய துக்கம். (3) தன்கணவன் முடிந்தபொழுதே உடனுயிர்நீத்த மனைவியின் உழுவலன்பை அறிந்தவர் பிறர்க்குக்கூறிய மூதானந்தம். [முதுமை—உழுவலன்புபற்றிய; ஆனந்தம்—சாக்காடு]. ஆரியப்படைதந்த நெடுஞ்செழியன், கண்ணகிகணவன் கோவலனைக் கொன்று தான் அவட்கு அநீதிபுரிந்தமை தெரிந்து உயிர்நீத்தகாலத்து, அவன்மனைவி பெருங்கோப்பெண்டும் ஒருங்குடன்மாய்ந்ததும் (சிலப். காதை ௨௫, ௭௮-௮௫), சூரபதுமன் முருகக்கடவுளால் அழிவுண்டமைகேட்டதும், அவன் "தேவியாகிய பதுமகோமளையெனுந் திருமங்கை ஆவிநீத்ததும்"* இம் மூதானந்தத்தின்பாற்படுமென உணர்க. கணவனிறந்தசெய்தி காதில்விழுந்ததும், மனைவியினுயிர் இயல்பாகவே நீங்கிவிடுந்தன்மையே ஒப்புயர்வற்ற அன்பாகும்; இதன் சிறப்பினை இறையனார்களவியலுரைத்தொடக்கத்தே, அதனுரைகாரர் தடைவிடைக

* கந்தபுராணம் - இரணியன்புலம். ௨.

ளால் நன்கு விளக்குதல் காணலாம். (4) கொடியவழியிலே தன்கணவனை யிழந்து அவன்மனைவி தனித்துப்புலம்பிய முதுபாலை; பாலை என்பது பிரிவாதலால், இது பெரும்பிரிவாதல் (மரணம்) பற்றி 'முதுபாலை' எனப்பட்டது. (5) கணவனொடு மனைவியரிறந்தவிடத்து, அவர்பால் முன்புநிகழ்ந்த செய்திகளையெல்லாம் பிறர்க்கறிவுறுத்தி, அவர்சுற்றத் தார் பரிசிலாளர்-முதலியோர் துக்கப்படுகின்ற கையறுநிலை. (6) தன் மனைவியைக் கணவனிழந்து நிற்கும் தபுதாரநிலை; (தபு-தாரம்=இழந்த தாரம்). (7) காதலனையிழந்த மனைவி தவம்புரிந்தொழுகிய தாபதநிலை. (8) கற்புடைமனைவி தன் கணவனிறந்தவிடத்து அவனோடு எரிபுகுதலை வேண்ட, அச்செயலை விலக்குவாரோடு அவள் மாறுபட்டுக் கூறும் பாலை நிலை [பாலை-புறங்காடு]. கணவனொடு மனைவி உடன்கட்டை ஏறாது தவம்புரியும் தாபதநிலையும், உடன்கட்டையேறும் இப்பாலையும், கண வன் இறந்ததும் உடனுயிர்மாயும் மூதானந்தமும், முறையே கடை யன்பு, இடையன்பு, தலையன்புபற்றி நிகழ்வன என்க. மணிமேகலையில், இம் மூன்றுசெயலையும் சீத்தலைச்சாத்தனார்—

> "காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி
> ஊதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்காது
> இன்னுயி ரீவர் ஈயா ராயின்
> நன்னீர்ப் பொய்கையி னளியெரி புகுவர்
> நளியெரி புகாஅ ராயின் அன்பரோடு
> உடனுறை வாழ்க்கைக்கு நோற்று உடம்படுவர்
> பத்தினிப் பெண்டிர்"

என்று கூறுதல் ஈண்டறியத்தக்கது. (9) தன் சிறுவன் போரில் வீரச்செயல்காட்டி இறந்தசெய்தி கேட்டேனும், அச்செயல்காட்டாமற் புறங்காட்டி ஓடியசெய்தி கேட்டேனும் தாய் இறந்துபடுநிலை. இவ்வாறு பண்டைத்தாயர் வீரத்தாற் பெரிதும் விளக்கமுற்றிருந்தசெய்திக்குப் பழைய மேற்கோள்கள் பல வுண்டு. அவற்றை மீண்டுவிரிப்பிற் பெருகும். (10) இவ்வாறு, தன்கண்ணே பலரும் இறந்தொழியவும் தானொழியாது உலகத்திலையாமையை அறிவித்துநிற்கும் புறங்

* 'வீரத்தாய்மார்' என்ற தலைப்பின்கீழ் யாம் எழுதிய வியாசத்தால் பண்டை மகளிரது வீரச்செயல்கள் நன்கு விளங்கத்தக்கன (செந்தமிழ். தொகுதி. ௬. பகுதி ௧௦.).

னாட்டைப் புகழும் காவேோழ்த்து—ஆகப் பெண்பாற்காஞ்சி பத்துங் கண்டுகொள்க. இனி, ஐயனாரிதனார், காஞ்சி என்பது—வேற்றுமன்னன் வந்துவிடக் காஞ்சி* என்ற பூவைச் சூடித் தன் காவலிடத்தைக் காப்ப தென்பர்.

---

## 7. பாடாண்டிணை.

பாடாணாவது, புகழ்முதலியவற்றை விரும்பிய ஆண்மகனொருவ னிடம் பரிசில்வேண்டி, ஒருபுலவன் அவன் குணஞ் செயல் முதலிய வற்றைப் புகழ்ந்து பாடுவதாம். பாடாண்—பாடப்படும் ஆண்மகனது ஒழுகலாறு. வெட்சி முதலாய திணைகளும் புலவனால் இவ்வாறு பாடப் படுவனவேனும், அவை பெரும்பாலும் தலைவனொருவனிடம் ஒன்றை விரும்பிக் கூறப்பெறாமையாலும், அத்தலைவன்பெறும் புகழ் பிறரை வேண்டிப் பெறுவதன்றித் தாமே தலைவராய்ப் பெறப்படுதலாலும் அவற்றின்வேறாக இத்திணை கூறப்பட்டதென்பர். ஆயினும், சிறு பான்மை அவ்வெட்சிமுதலிய திணைகள், புலவன் ஒன்றைப் பெறவிரும்பி னும், தலைவன் ஒன்று கொடுக்கவிரும்பினும் வெட்சிப்பாடாண் என்பது முதலிய பெயர்பெறுமெனவும், அத்திணைகள் இரண்டும் பலவுங்கூடிப் பாடாண்டிணையொடு கலந்துவருமெனவும், பதிற்றுப்பத்து நூறுபாட் டும் இவ்வகைப் பாடாண்டிணையேயாம் எனவும் கூறுவர் நச்சினார்க் கினியர். இத்திணை தேவரும் மக்களுமாகிய இருதிறத்தார்க்கும் உரியன.

இவற்றுள், தேவர்க்குரிய பாடாண் இருவகைப்படும். முதலாவது— பிறப்பினாலன்றிச் சிறப்பினால் தேவசாதியைச் சார்ந்தனவாகச் சொல்லப் படும்—முனிவர், பார்ப்பார், ஆனிரை, மழை, முடியுடைவேந்தர், உலகு

---

* இது குறிஞ்சிநிலப்பூக்களில் ஒன்றாகக் குறிஞ்சிப்பாட்டிக் கூறும். இதனை, இலையுதிர் தளிரும் கருநிறமுமுடைய ஒருவகைமரத்தின் பூ எனவும், "Ulmus Integrifolia" அல்லது "Elm-tree" என இம்மரத்தினை வழங்குவரெனவும் கூறுவர், டாக்டர் போப். நிலையாமை அல்லது தக்கமிகுதியை உணர்த்தற்குக் காஞ்சி என்னும் பெயர்வழங்குவது இப்பூவை அவற்றுக்கு அடையாளமாக முன்னோர்கொண்டதனாலாகும். "Weeping willow" என்ற பூவிசேடத்தை, ஐரோப்பியர் துக்கமிகுதியைக் குறிக்கும் அடையாளமாகக்கொண்டிருத்தலும் ஒண்டு ஒப்பிடற்பாலது.

என்னும் அறவரையும் வாழ்த்துதல். இஃது "அறமுறைவாழ்த்து" எனப்படும். இதனாற் பிறப்புமுறையாற் சிறந்த கடவுளரை வாழ்த்துதல் சொல்லாமையே அமையும். தொகைநூல்களிலும் கீழ்க்கணக்கிலும் உள்ள கடவுள்வாழ்த்தெல்லாம் இவ் வறமுறைவாழ்த்தின்பாற்படு மெனக் கூறுவர். இரண்டாவது—அத்தேவரிடத்தே சிறப்பில்லாத இம்மைப்பயன்களைவேண்டி அவர்பால் அக்குறிப்பைக் கூறுதல். இம்மைப்பயனைவேண்டுதலாவது, தன்பொருட்டேனும் பிறர்பொருட்டேனும் இம்மைச்செல்வங்களைக் காமுறுதல். இக்காமவகையில், புணர்ச்சி வேட்கையைக் கடவுளரிடத்துக் கூறும் பகுதியு முண்டு; "அது கடவுண்மாட்டுக் கடவுட்பெண்டிர்நயப்பனவும், அவர்மாட்டு மானிடப் பெண்டிர்நயப்பனவும், கடவுளர் மானிடப்பெண்டிரைநயப்பனவும் பிறவுமாம்" (அரு.).

இனி, மேற்கூறிய அறமுறைவாழ்த்தோடு—கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றும் கடவுள்வாழ்த்துடன்வருமென்பர் ஆசிரியர்;

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

எனக் காண்க.

இவற்றுட் கொடிநிலை என்பதற்குக் கீழ்த்திசையில் நிலைபெற்றுத் தோன்றும் சூரியன் என்றும் (கொடி-கீழ்த்திசை), கந்தழி என்பதற்கு ஒரு பற்றுக்கோடுமின்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவங்கடந்த பொருள் என்றும் (கந்து அழி-பற்றுக்கோடு அழிந்தது), வள்ளி என்பதற்குச் சந்திரன் என்றும் பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர். ஐயனாரிதனார் இம்மூன்றுபகுதியையுங் கூறுமிடத்து, கொடிநிலையாவது—அரி அயன் அரன் என்ற மூவர்கொடிகளுள் ஒன்றனோடு உவமித்துத் தன் அரசன்கொடியைப் புகழ்தல் எனவும், கந்தழியாவது—திருமால் வாணனது *சோகரத்தாரணை அழித்த வெற்றியினைச் சிறப்பித்தலென்றும், வள்ளியாவது—முருகக்கடவுள்பொருட்டுப் பெண்டிர் வெறியெடுத்தாடுவது என்றும் கூறுவர். இளம்பூரணர்க்கும் இதுவே கருத்தாதல் மேற்குறித்த சூத்திரத்துக்கு அவர் எழுதிய

* சோணிதபுரம்.

உரைநோக்கியறிக. "கொடிநிலையாவது கொடியது தன்மை கூறுவது. கந்தழியாவது செருவிற் றெட்பமுடைமை. வள்ளியாவது முருகவேளைக்குறித்தது" என்பர், வீரசோழியவுரைகாரர் (பொருட். உக, உரை). இவற்றால், பழைய ஆசிரியர்கள் இவற்றுக்குக் கூறும் பொருள்கள் தம்முட் பெரிதும் மாறுபட்டுநிற்றலாற் கொடிநிலைமுதலியவற்றின் உண்மைப்பொருள்கள் துணியக்கூடாதனவாகின்றன. இனி, இச்சூத்திரத்துக்கு எங்கருத்திற்றோற்றியபொருளொன்றும் அறிஞர் ஆராய்ச்சிக்கு உரியதாகும். அஃதாவது—தெய்வப்புலமைத் திருவள்ளுவனார், தம் பெருநூற்றொடக்கத்தே கடவுள்வாழ்த்து, வானசிறப்பு, நீத்தார்பெருமை, அறன்வலியுறுத்தல் என்ற நான்கதிகாரங்களைப் பாயிரமாகத் தனியே நிறுத்திக் கூறினாரன்றே? "ஆயிரத்து முந்நூற்று முப்பதருங்குறளும்-பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்" என்று சங்கப் புலவர் ஒருவர் இவற்றை வேறுபிரித்துச் சிறப்பித்தலுங் காண்க. இங்ஙனம் இந்நான்கதிகாரங்களைமட்டும் பாயிரமாக வள்ளுவனார் தனியே கொண்டது எக்காரணம்பற்றி என்ற கேள்வி நெடுக நிகழ்ந்துவருவதுண்டு. இதற்குத் தக்கவிடை இதுகாறும் பெறப்பட்டதில்லை. ஆயினும், தொல்காப்பியனார்கூறிய "கொடிநிலை கந்தழி" என்ற இச்சூத்திரம் அக்கேள்விக்கு ஏற்ற விடைதரவல்லதென்பதே எங்கொள்கை. அஃதாவது—இச்சூத்திரத்திற் கொடிநிலை கந்தழி வள்ளி என்ற மூன்றும் கடவுள்வாழ்த்தொடு வரும் என, உயர்பில்வழியும் ஒருவினையொடுச்சொல்லைக் கடவுள்வாழ்த்துக்குக் கூறுதலால் அவ்வாழ்த்து முதற்கட்கூறுஞ் சிறப்புடையதென்பதும், மற்றவை அதன்பின்னர் வைத்து வாழ்த்தப்படுதற்கு உரியவென்பதும் அறியத்தக்கன. இவற்றுட் 'கொடிநிலை' என்பது மேகத்தை யுணர்த்தும்; கீழ்த்திசைக்கண்ணே நிலைபெறுதலுடையது, நீடுநிலையுடையது என்பன இதன் பொருளாம். [கொடி — கீழ்த்திசை*] நச்சினார்க்கினியரும் இவ்விருபொருள்களைபற்றிச் சூரியனுக்கு இப்பதத்தை இணைத்துதல் காண்க. மேகவாகனனாகிய இந்திரனது திசை கிழக்காதலின் அத்திசையே

*கொடி-கீழ்த்திசையாதல், 'குணதிவர்ந்து கொடிக்கொண்ட கோடையால்' (கரு0), 'கொடியிசை மையறு மண்டிலம்' (கஎச) எனவரும் கலித்தொகையடிகளாலும், 'கொடிமுதலா வீங்கிவற்றைக் கொண்டெண்ணுங் காலை' என்னுஞ் சினேந்திரமாலைத்தொடராலும் (ருஎ) அறிக.

மேகத்துக்கும் உரியதென்பதும், அங்குநின்றெழுந்த கொண்டல்களே உலகதாபந்தீரப் பெய்வன என்பதும் அறியத்தக்கன. குணக்கினின்று எழுவது பற்றியே மேகம் கொண்டலெனப் பெயர்பெற்றதென்க* "ஞாலம் வறந்தீரப் பெய்யக் குணக்கேர்பு-காலத்திற்றோன்றியகொண்மூப் போல்" என்பதனால் (கலித். அ) கிழக்கிலெழும் கொண்டல்களே பெயலிற் சிறந்ததாதல் அறியப்படும். இவ்வாறன்றி மின்னற்கொடிக்கு நிலைக்களமாதல்பற்றி மேகம் 'கொடிநிலை' எனப்பட்டதெனினும் அமையும். இவற்றால், கொடிநிலை என்பது மேகத்தைக் குறிக்கவல்ல தாதல் தெளியலாம். இரண்டாவது கந்தழி என்பது — கந்து — பற்று, அழி—அழிவு; அஃதாவது பற்றழிந்தார் ஆகிய நீத்தாரது தன்மை என்றபடியாம். மூன்றாவதான வள்ளி என்பது அறத்தைக் குறிக்கும். என்னை? அவ்வறம் சிறப்பாக வண்மைபற்றியே நிகழ்வதாகலின்; 'ஈதலறம்' என்றார் ஔவையாரும். நச்சினார்க்கினியர் தங்கொள்கைக் கியையச் சந்திரனுக்கு இப்பதத்தை இணக்குமிடத்து, "வெண்கதிர் தேவர்க்கு அமிர்தம்வழங்கலான் வள்ளியென்பதூஉமாம்" என்று கூறுதலினின்று, வண்மையடியாகவே வள்ளி என்ற சொல் வழங்கிய தென்பது அவர்கருத்தாதல் தெரியப்படும். படவே, வண்மையாகிய அறத்துக்குரியகடவுள் வள்ளி யெனப்பட்டதென்க. இங்ஙனம் மேகம் நீத்தார் அறக்கடவுள் என்ற மூன்றும், முதற்கடவுளை முதலாகக் கொண்டு வாழ்த்தப்படுதலும் இப்பாடாண்பகுதியாம் என்பது, சூத்திரப்பொருளாதல் கண்டுகொள்க. எனவே வள்ளுவனார்கூறிய பாயிரமும் இவ்விலக்கணம்பற்றியே அமைந்ததென்பது விளக்கமாம். ஆயின், மேற்கூறிய அறுமுறைவாழ்த்தில் வானையும் முனிவரையும் வாழ்த்துதல் கூறப்பட்டுள்ளதே எனின்:—"அமரர்கண் முடியும் அறு வகை யானும்" என்றே தொல்காப்பியனார்கூற நச்சினார்க்கினியர் அவ்வறு வகை இன்னவின்ன என்று எழுதியதன்றி, மூலத்தால் அப்பதுப் பொன்றும் அறியப்பட்டதில்லை; அதனாலும், 'அமரர்கண்முடியும்' எனப் பிறப்புவகைப்பட்ட தேவசாதியையே ஆசிரியர் கருதுவதனாலும், அவ்வறுவகையின்கண்ணே செங்கதிர்க்கடவுள், தண்கதிர்க்கடவுள்

*வடக்குக் குடக்குக்களினின்று எழும் காற்று வாடை கோடை எனவும், தெற்குக் குணக்குக்களினின்று எழுங் காற்றுத் தென்றல் கொண்டல் எனவும் திரிந்து பெயர்பெறுதல் காண்க.

முதலிய தேவர் அறுவர் அடங்கியவரென்றும், அறுமுறையுளடங்கியவராக நச்சினார்க்கினியர்கருதிய வரையும் முனிவரையும் 'கொடிநிலை கந்தழி' என்பதனால் ஆசிரியர் தனிப்படக் கூறினரென்றும் நாம் கருதுவது இழுக்காதென்க*. மேற்கூறிப்போந்த எம் அபிப்பிராயங்கள் அறிஞர்க்கு ஏற்புடையவாயின், தெய்வப்புலவர், தம் பொதுமறைத் தொடக்கத்தே பாயிரமாக நான்கதிகாரங் கூறிப்போந்தது, தொல்காப்பிய முறைபற்றியதே என்பது வெள்ளிடைமலையாகும். இவை நிற்க. தேவர்க்குக் கூறும் பாடாண்பகுதியில், நிரைகோடல் நிரைமீட்சி (வெட்சி), மேற்சேறல் (வஞ்சி) என்ற செய்திகளை அத்தேவரும் நிகழ்த்தினராகப் புலனெறிவழக்குஞ்செய்தல் கூடாதென்றும், உழிஞை முதலிய திணைகள் அவர்க்கும் உரியவாமெனவும் கூறுவர் (அகூ).

இனி, மக்கட்பகுதியாகிய பாடாண்டிணைக்குத் தொல்காப்பியனார் இருபதுதுறை கூறுவர்; இவையும் பழையவழக்குகளேகுறித்தலால் முறையே அவை வருமாறு:— (1) கொடுப்போரை ஏத்திக் கொடாரைப் பழிப்பது. (2) தலைவன் எதிர்சென்று அவன்செய்தியேயன்றி, அவன் குலத்தோர்க் கியல்பானசெய்தியையும் அவன்மேல் ஏற்றிப் புகழ்தல் (இஃது இயன்மொழிவாழ்த்தெனப்படும்). (3) சான்றோர் வாயில்காக்கின்றவனுக்குத் தம்வரவைத் தலைவனிடமுணர்த்தும்படிகூறுங் கடைநிலை; (இழிந்தோர் தம்வரவை அரசனுக்கறிவிக்குமிடத்துத் தத்தம்வாத்தியங்களை இயக்குதலால் உணர்த்தி, வாயிற்கண் நிற்றற்குரியர் என்ப). (4) அரசரும் மற்றைத் தலைவரும் அவையில் நெடும்பொழுது இருந்தவிடத்து, மருத்துவரும் அமைச்சரும் அவர் கண்படுத்தலைக்கருதிக் கூறுங் கண்படைநிலை. (5) இன்னல்வந்துற்றகாலத்து, உயர்ந்தோர் மொழிப்படி, சேதாவைப் பார்ப்பார்க்குத் தானமாகக்கொடுத்தலைக் கரு

*இளங்கோவடிகள், சிலப்பதிகார மங்கலவாழ்த்துக்காதையுள் இவ்வறுமுறையே கூறுதலும், சந்திரசூரியர் இவற்றுள் அடங்குதலுங் காண்க. அவ்வடிகள்—திங்கள், செங்கதிர், மழை, புகார் (உலகு), உயர்ந்தோர் (முனிவர்), சோழன் (அரசு) என அறுவகைகொண்டு வாழ்த்துதல் அக்காதையால் உய்த்துணரற்பாலது. தம் பொதுக்கொள்கைக்கேற்ப, ஆவையும் பார்ப்பாரையும் விலக்கி அவ்விடங்கட்கு மழையையும் முனிவரையும் கொண்டு இளங்கோவடிகள் அறுமுறை கூறினர் என்றே தோற்றுகின்றது. இங்ஙனம் தெளியக்கிடப்பவும், அடியார்க்குநல்லார் இம்மங்கலவாழ்த்துக்களை அறுமுறைப்பாற்பட்டனவாகக் கொள்ளாது சென்றமைக்குக் காரணந் தெரிந்திலது.

ரும் வேள்விநிலை. (6) தம் செங்கோலோடு திருவிளக்கும் ஒன்றுபட்டு ஒக்கும்படிசெய்த விளக்குநிலை. இது கார்த்திகைத்திங்களிற் கார்த்திகைநாளில் ஏற்றிய விளக்கு, கீழ்மேலும் வலமுமிடமும் திரிபரந்து சுடரோங்கிக் கொழுந்துவிட்டது என்றாற்போல அறிந்தோர் ஆக்கங் கூறுவதெனபர். (7) ஒருதலைவன் விரும்பாதவிடத்தும், அவனுக்கு உறுதிபயத்தலைச் சான்றோர்வேண்டி, வாய்மொழிபட அவனை வாழ்த்திக் கூறும் வாயுறைவாழ்த்து. (8) ஆடம்பரமின்றிப் பெரியோர்களில் தங்கிவாழ்வதே கடப்பாடு எனக் கூறும் செவியறிவுறூஉ. (9) 'இன்ன கடவுள்காப்ப நீ வாழ்க' எனக் கூறும் புறநிலைவாழ்த்து (10) முற்பு ஒத்த அன்பினராயிருந்து, பிற்காலத்தே தலைவன் வேறுமகளிர்வயப் பட்டு நீத்ததனால் வருந்திய பெண்பாலைப்பற்றி, இடைநின்ற சான்றோரும் பிறருஞ் சென்று கூறும் கைக்கிளைவகை; இதற்குப் பேகன் என்ற வள்ளல், தன்மனைவி கண்ணகியைத் துறந்ததுகாரணமாகப் பாணர் முதலிய நல்லிசைப்புலவர் அவன்பாற்சென்று இரக்கந்தோன்றப்பாடிய பாட்டுக்கள் உதாரணமாம் (புறநானூறு பார்க்க). (11) தம் வலி மிகுதியால், பாசறையில் ஒரு மனக்கவற்சியுமின்றித் துயின்ற அரசனை, அவரது நற்புகழ்கூறிச் சூதர்கள் துயிலெழுப்புந் துயிலெடைநிலை. இவ்வாறு, அரசர்க்கு அவர்புகழ்கூறித் துயிலுணர்த்துமுறை தொன்று தொட்ட வழக்கென்பது வடநூல்களாலும் அறிந்தது. சூதர், மாகதர், வேதாளிகர், வந்திகர் என்ற அரசர்புகழ் கூறுதற்கு உரியவருள், சூதரே வீரத்தாற் றுயின்ற அரசரைத் துயிலுணர்த்தற்குரியராவர். இவரைப் பிராமணர்க்கு க்ஷத்திரியப்பெண்ணிடம் பிறந்தவர் என்பர். "துயிலெடைமங்கலம்" பாடல் பாணரதுதொழிலு மாகும். இதனால், இப் பாணரைச் சூதர்போன்றவராகத் தமிழ்மக்கள் கருதினர்போலும். (12) கூத்தர், பாணர், பொருநர், விறலியர் என்ற நால்வரும், தாம் அரசனொருவனிடம் பெருஞ்செல்வம் பெற்றவகையை வழியெதிர்வந்த வறியவர்க்கு அறிவுறுத்தி, அவரும் அவ்வரசன்பாற்சென்று தாம்பெற்ற பெருநலம்பெறுமாறுகூறும் பகுதிகள். இக் கூத்தர் பாணர் விறலியரைப்பற்றி முன்பு* விளக்கப்பட்டன. பொருநரென்பவர்—ஏர்க்களம் பாடுவோரும்†

* இந்நூல், 77—79-ம் பக்கம் பார்க்க.

† இவர் "கிணைநிலைப்பொருநர்" எனப்படுவோர்; கிணைப்பறைகொட்டி வேளாளரைப் புகழ்பவர்.

போர்க்களம் பாடுவோரும் பரணிபாடுவோரும் எனப் பலவகையராவர். இந்நால்வரும் தாம்பெற்ற பரிசிலை எதிர்வந்தவர்க்குக் கூறி அவரையும் அதுபெறச் செலுத்துவது "ஆற்றுப்படை" எனப்படும் (ஆறு—வழியில்; படை—படுத்தல், செலுத்தல்). இவ்வாறு ஆற்றுப்படுக்கும் முறைகளைப் பத்துப்பாட்டில் வரும் பாணாற்றுப்படைகள், பொருநராற்றுப்படை கூத்தராற்றுப்படை (மலைபடுகடாம்) களால் உணர்க. (13) அரசன் தான் தினமும் மேற்கொண்டுநடத்தும் சிறைசெய்தல் செருச்செய்தல் முதலாய செற்றங்களை நீக்கி, சிறைவிடுதல் செருவொழிதல் முதலிய சீரியகாரியங்களைச் செய்யத்தொடங்கும் பெருமங்கலம்; இது "வெள்ளணி" எனவும்படும்; "மங்கலவண்ணமாகிய வெள்ளணியணிந்து எவ்வுயிர்க்கண்ணும் அருளை நிகழ்த்தலின், அதனை வெள்ளணி* என்ப" என்றார் நச்சினார்க்கினியர் (சீவக. காந்தருவ. கநக). இதனால், சமாதானசித்தத்துடனிருந்து அருள்புரியுநிலைக்கு வெண்மைநிறம் முற்காலத்தே அறிகுறியாக வழங்கியமை பெறப்படும்.† (14) அரசன் முடிபுனைந்தகாலந்தொடங்கி ஆண்டுதோறும் அவன் முடிபுனைந்துகொண்டு ஆடும் நீராட்டு மங்கலம். (15) உலகுடனிழற்றும் அரசனது கொற்றக்குடைநிழலின் சீரிய இயல்பு கூறுதல். (16) அவ்வரசனது வாளை, அதனாற் பசிதீர்ந்த பேயும் பிறரும் வாழ்த்துவதாகக் கூறும் வாண்மங்கலம். (17) மாற்றரசன்வாழ்ந்த மதிலையழித்துக் கழுதையேரால் உழுது, வெள்ளைவரகுங் கொள்ளும் வித்தி மங்கலமல்லாதவற்றைச் செய்து அரசன் மங்கலநீராடுதல். "இருங்களந்தோறும்—வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி—வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்—வைகலுழுவ"(புறம்—நகஉ)என ஒருதலைவன் புகழப்படுதல் காண்க. (18) பரிசில்விரும்பிவந்தவன், தன் குடும்பத்தின் இடும்பைகூறித் தான்விரும்பியபொருளை வேண்டிக்கேட்டல். (19) வேண்டிய பரிசிலைப் பெற்றவன், தான் பெற்றதை உயர்த்துக்கூறித் தலைவன்

* வெள்ளணிநாள் - பிறந்தநாளென்பர் புறப்பொருள்வெண்பாமாலை உரைகாரர் (கூ. உசு.).

† இக்காலத்து மேனாட்டார் போர்நிகழ்ச்சியிலும், வெள்ளைக்கொடிபிடித்துப் போரிடையே பகைவர் வருவாராயின் அது சமாதானத்தைக் குறிப்பதாகக் கருதப்படுதல் ஈண்டு ஒப்பிடற்பாலது. போர்நிறுத்துதற்குறியாகத் "தூத்துகில் வீசும்" பண்டைவழக்கும் அறியத்தகும் (சீவகசிந்-கஅசுரு.).

பால் விடைபெற்றபின்பேனும் தானே அவன்பால் விடைகொண்டேனும் செல்லுதல். (20) பலவகைத் தீயசகுனங்களாற் பாடாண்டலைவர்க்குத் தோன்றிய தீங்கு கண்டு, அவரால் உதவிபெற்றவர் 'அவர்க்குத் தீங்கின்றாக' என்று ஓம்படைகூறுதல்; இவை மக்கட்பகுதியாகிய பாடாண் துறைகள் என உணர்க.

இனி, மக்கட்பாடாணிலன்றித் தெய்வப்பாடாணிலும் புணர்ச்சி வேட்கைபற்றி நிகழும் காமப்பகுதிகளும் சேர்க்கப்படுமெனவும் (அடு), குழவிப்பருவமுள்ள மக்களிடத்தும் அன்புபற்றிக்கூறும் காமப்பகுதிகளுண்டென்றும் (அச) [அவை—பிள்ளைப்பருவத்துக்குக் கூறும் செங்கீரை தால் சப்பாணி முத்தம் முதலியபற்றிய கூற்றுக்கள்], ஊரிற் பொதுமகளிரொடு கூடியொழுகும் தலைவனொருவனது பவனிமுதலியை விளக்கும் புணர்ச்சிவேட்கைபற்றிய காமப்பகுதியாகுமென்றும் (அரு) [இது, பின்னுள்ளோர், ஏழுபருவமாகப் பகுத்துக் கலிவெண்பாட்டாற் செய்கின்ற உலாச்செய்யுளாம். இது பரத்தையர்க்கன்றிக் குலமகளிர்க் குரித்தன்று என்பர்]—இவையெல்லாம் சான்றோர் புலனெறிவழக்கத் தொடுபொருந்தக் கூறுதற்குரியன என்றுங் கூறுவர் (பக். கக௯,கஉ௦).

மேற்கூறியவாற்றால், வெட்சி முதற் பாடாண்டிணையிறுதியாகவுள்ள புறத்திணை ஏழனிலக்கணங்களும் அவற்றின் பகுதிகளும் குறிக்கப்பட்டன. அவ்வெழுதிணைக்கும் பொதுவாகவழங்கும் வேறுசில துறைகளும் உள. அவற்றை ஆசிரியர் "வெறியறிசிறப்பின்" (௬௦) "கூதிர் வேனில்" (௭௬) என்ற சூத்திரங்களாற் கூறுகின்றார். அவற்றாலும் பழைய தமிழ்வழக்கங்கள் பல அறியக்கிடத்தலின், அவற்றுட் சிறப்புடையனவற்றை ஈண்டுக் கூறுவேம். (1) வேலன்வெறியாடல்—இது முன்பே நன்குவிளக்கப்பட்டது.* (2) மூவேந்தருடைய படையாளரும் போரில் 'இன்னவேந்தரைச் சார்ந்தவர்' என்பது தெரியும்படி அவ்வரசர்க்குரிய போந்தை (பனம்பூ), வேம்பு, ஆர் (ஆத்தி) என்ற அடையாளப்பூக்களைச் சூடிக்கொள்ளுதல்†. (3) வள்ளிக்கூத்து—இது இழிங்

* இந்நூல் 65-ம் பக்கம் பார்க்க.

† சேனைத்தலைவர் அரசர்மாலையே சூடுதல், பதிற்றுப்பத்து ௩௧-ம் பாட்டாலும் அறியலாகும். 'லங்காஸ்டிரியன்ஸ்' (Lancastrians) யார்க்கிஸ்ட்ஸ் (Yorkists) என்ற இருபகுதியாரும் இங்கிலாந்தின் முடிகருதிப் போர்புரிந்த

தோர் ஆடும் ஒருவகையாடல். (4) கழனிலைக்கூத்து—இளம்பிராயத்தா னொருவன் போரில் ஓடாது வீரச்செயல்காட்டிநின்றதற்கு வியந்து அவற்கு வீரக்கழல்கட்டி ஏனைவீரர் ஆடுகின்ற கூத்து; இங்ஙனம் கழல் கட்டுதலேயன்றிக் கொடி முதலியவும் அவற்குக் கொடுப்பதுண்டு என்பர் நச்சினார்க்கினியர். (5) உன்னநிலை—போரிலே வைத்தகால் வாங்காது முன்னின்றுபொருத வேந்தனை உன்னமரத்தோடுசேர்த்திப் புகழ்வது. இம்மரம்‡ தெய்வத்தன்மையுடையதாய்ப் பின்னிகழும் நிமித்தங்களைக் காட்டுவதாகும் (பதிற்று. ௪0). (6) பூவைநிலை—மாயோன்புகழை மன்னர் புகழுக்கு உவமையாக்கிக் கூறுவது; பிறகடவுளர் புகழை உவமையாக்கி னும் இத்துறையாம். (7) பிள்ளையாட்டு—வாளாற் போர்செய்துயர்ந்த அரசிளங்குமாரனுக்கு, அந்நாட்டார் பறையொலி முழங்க அரசுகொடுப் பது. இதனாற் குடிகளே அரசிளங்குமாரைத் தம் வேந்தனாக நியமித் துக்கொள்ளுதல் பண்டைமரபென்பது அறியப்படும்.

(8) நடுகல்:—போரிற் சிறந்த வீரனொருவன் பட்டுவீழ்ந்தபோது, அவன் வீழ்ந்தவிடத்தே கல் நடுதல். இங்ஙனம் கல்நடுதற்கு ஆறு செய்திகள் கூறுவர் ஆசிரியர். அவை—கல்லிருக்கும் இடங்கண்டு உரியகல்லை ஆராய்ந்துகொள்ளுதல்; அங்ஙனம் ஆராய்ந்துகொண்ட கல்லை அவ்வீரனது உருவாக்கி அவன்பெயரும் பீடுமெழுதற்கு நல்ல நாள்கோடல்; நாட்கொண்டபின்னர்க் கல்லை நன்னீராட்டித் தூய்மை செய்தல்; அவ்வாறு தூய்மைசெய்தபின் அக்கல்லைக் குறித்தவிடத்தே நடுதல்; நட்டபின்பு அக்கல்லைத் தெய்வமாகக்கருதி அதற்குப் பெருஞ் சிறப்புப் படைத்தல்; படைத்து எல்லாருங்கூடி வாழ்த்துதல்—என்பன. இவற்றை முறையே ஆசிரியர்—"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்— சீர்த்த மரபிற் பெரும்படை வாழ்த்தல்" என்பர். உரைகாரர் வேறுசில செய்திகளையும் இவற்றுடன் கூட்டியுரைப்பர். ஐயனாரிதனாரும் இந் நடு கற்செய்திகளை விரித்துக்கூறினார். இஃது, "என்னைமுன் னில்லன்மின்

காலத்து, தங்கட்கு அடையாளங்களாக வெள்ளையும் சிவப்புமான ரோஜா மலர்களை அணிந்துகொண்டு போர்விளைத்தமையும், அவ் ரோஜாக்கள்—"Wars of the Roses" என ஆங்கிலசரிதத்து வழங்குதலும் ஈண்டு அறிதற்பாலன.

‡ "உன்னம் என்பது மரம்; அது தன்னாட்டகத்துக் கேடுவருங்கால் உலறி யும் வாராதகாலங் குழைந்தும் நிற்கும்" என்பர் இளம்பூரணவடிகள். இலந்தை யை உன்னமென்பது மலையாளநாட்டுவழக்கு.

தெவ்விர் பலரென்னை—முன்னின்று கன்னின்றவர்" எனத் திருக்குறளிலும், "ஆடவர் பீடும் பெயரு மெழுதி யதர்தொறும்—பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்" என அகப்பாட்டிலும் (கஉக) புறநானூறுமுதலிய நூல்களிலும் பெரிதும் சிறப்பிக்கப்படுதல் காணலாம். இவற்றாற் போரில் இறந்த வீரரைத் தமிழ்மக்கள் எத்துணையாகச் சிறப்பித்து வந்தவரென்பது விளங்கும். இத்தகைய கற்களுள் பழைமையான தொன்று, திருவனந்தபுரம் காட்சிச்சாலையில் உள்ளது.* இந் நடுகற்கள் சேலம் வட ஆர்க்காடு ஜில்லாக்களிலும் கன்னடநாட்டிலும் மிகுதியுங் காணப்படுவனவாம். "வீரக்கல்" என்று கன்னடநாட்டார் இதனை வழங்குவர். இக்கற்களுள், முற்பட்டதையும் பிற்பட்டதையும் குறிக்கும் இரண்டு மாதிரிகைப்படங்களை ஸ்ரீமான் T. A கோபிநாதராயர் செந்தமிழ்ப்பத்திரிகையில் முன்பு வெளியிட்டுள்ளார். (தொகுதி-ரு. பகுதி-உ. பக்-ருரு). அடுத்துக்காட்டப்பட்டுள்ள மாதிரிகைப்படங்களால், ஆடவர்பெயரும் பீடு மெழுதிய நடுகற்கள், ஆசிரியர்கூறியமுறையிற் பிற்காலத்தும் அமைக்கப்பட்டுவந்தசெய்தி வெளியாம். சாஸனங்களிலும் இந்நடுகற்செய்திகள் கூறப்படுகின்றன என்பர்.

இனி, போர்த்தொழில்கருதிய வேந்தன் தங்கியுறையும் பாசறை, வேனிற்பாசறை கூதிர்ப்பாசறை என இரண்டாம் (எசு). "கூதிர் வேனி லென்றிரு பாசறைக்—காதலி னொன்றிக் கண்ணிய மரபினும்" என ஆசிரியர் கூறுதல் காண்க. இதனால், வேனிற்பருவமும் கூதிர்ப்பருவமும் யுத்தயாத்திரைக்குச் சிறந்தனவாகக் கொள்ளப்பட்டமை விளங்கும். 'பலமுள்ளகாலத்தேயே பகைவர்நாட்டை எதிர்க்கவிரும்பின் (வேனிற்பருவமாகிய) பங்குனி சித்திரை மாதங்களிலும் புறப்படலாம்' என்று

---

* இந் நடுகல்லில் ஒருபுறம் வீரனுருவமும் மறுபுறம் அவன்செய்தியும் பொறிக்கப்பட்டுள்ளன. இது கி. பி. 770-ல் விளங்கிய மாறஞ்சடையனகாலத்தது என்பர். இதனுள் வரையப்பட்டசெய்தி வருமாறு:—"ஸ்ரீ கோமாறஞ் சடையற் [கு இ] இருபத்தேழாமாண்டு சேரமானார்படை விழுஞத்து புறத்து விட்டிழக்கக் கரைக்கோட்டை அழிப்பான்வர பெருமானடிக ளுள [ன் பு] மிக்கூள இரணகீர்த்தியும் அமர்க்கழியும் உள்வீட்டி னுற்றைச்சேவகர் கோட்டை அழியாமை காத்தெறிந்து பலரும் பட்ட இடத்து இரணகீர்த்தி உள்வீட்டுச் சேவகன் கொழுவூர்க்கூற்றத்துத் தாதமபெருந்திணை அத்திரத்தாற் பலரொடுங் குத்திப் பட்டான் இருபது—கமாளி" எனக் காண்க.

மனுவும் (அத்-எ. சு. கஅஉ), "ஒருவரோடொருவர் வயிரங்கொண்டு வெல்ல வெண்ணும் அரசர் யுத்தத்திற்கு ஆயத்தஞ்செய்தற்கேற்ற காலம் (கூதிர்ப் பருவம்) வந்து விட்டது; இதுவே அரசர் படையெடுத்துச் செல்லுதற்குச் சிறந்தகாலம்" என வான்மீகிமுனிவரும் (இரா. கிஷ்கிந் சர். ௩0.) வேனில் கூதிர்ப் பருவங்களை யுத்தத்துக்குரியகாலங்களாக முறையே கூறுதல் கண்டுகொள்க. இனி, வேளாண்மாந்தர் விளையுட்காலத்துக் களத்துச்செய்யுஞ்செய்கைகளைத் தேரேறிவந்த கிணைப்பொருநர் முதலியோர் அந் நெற்போர்க்களத்தே விளங்கப் பாடுவதேயன்றி, பொரும் போர்க்களத்திற் புலவர் தேர் ஏறிவந்து 'களவழிச்செய்யுள்' பாடுவது முண்டென்பதும் (பொய்கையார்பாடிய களவழிநாற்பது இத்தகையதாம), போரில் வென்றவேந்தன் அவ்வெற்றிக்களிப்பாலே, தன் னட்பினராய அரசரோடும் தானைத்தலைவரோடும் சேர்ந்து கைபிணைந்து தேர்த்தட்டில்நின்று குரவைக்கூத்தாடுவ துண்டென்பதும், வீரர்க்குரிய ஆயுதங்களுள் வேற்படையே மிகுதியாக முற்காலத்து வழங்கியதென்பதும், தாம் குறித்த காரியத்தை நிறைவேற்றமுடியாவிடத்துத் தமிழ்வீரர் தம்முயிரை அங்கியங்கடவுட்கு அவிப்பலிகொடுப்பவரென்பதும், அரசன் வெறுப்புவந்தபோது தன் சிங்காதனத்தைத் துறப்பதுண்டென்பதும் (இச்சிங்காதனம் 'கட்டில்' எனப்படும்), தர்மசபைகளில் (நீதிஸ்தலங்கள்) குடிப்பிறப்பு கல்வி ஒழுக்கம் வாய்மை தூய்மை நடுநிலைமை அழுக்காறின்மை அவாவின்மை என்ற எண்குணங்களாற் சிறந்த பெரியோரே விளங்கிவந்தனரென்பதும், ஒழுக்கமும் கொடையும் பிழைத்தவை பொறுத்தலும் பிற உயர்குணங்களு முடையராகி, முடிவில் துறவுள்ளம் பிறந்து பற்றற்றவராகப் பண்டைவேந்தர் விளங்கினரென்பதும், பிறவும் "கூதிர் வேனில்" என்ற பொதுவியல்கூறுந் துறைப்பகுதிகளினின்று நாம் தெரிந்துகொள்ளலாகும்.

ஆகவே, புறத்திணையியலானது, பண்டையரசருடையவும் போர் வீரருடையவும் ஏனைமக்களுடையவும் அரும் பெருங் குணங்களையும் செயல்களையும் பழங்காலத்து வழங்கிய முறைதவறாது கூறுவ தென்பதும், ஆதலால் அப்பகுதிமுழுவதும் பழைய சரித்திரக்கூறுகளே என்பதும் ஆராய்ந்துகொள்ளத்தக்கன. இப் புறத்திணைத்துறைகளைப் புனைந்துபாடிய சிறப்புப்பற்றியே புறத்திணை நன்னாகனார், நொச்சி நியமங்கிழார், வெறிபாடிய காமக்கணியார் முதலாகப் பண்டைப்புலவர் பெயர்பெற்று விளங்கியதும் இங்கு அறியத்தக்கது.

## V. மெய்ப்பாட்டியல்

இனிப் பொருளதிகாரத்துள், தொல்காப்பியனார் அகம் புறமென்ற இருபகுதிப்பட்ட பொருள்களையே கூறப்புக்காராயினும், அவ்விருபகுதியும் பற்றிய சான்றோர்வழக்குக்களுக்குப் பெரிதும் உபகாரப்படுதலுடைய மெய்ப்பாடு, உவமம், செய்யுள், மரபு என்பவற்றின் இலக்கணங்களையும் அப் பொருட்கூறுகளோடு அமைத்து விளக்குவாராயினர். அவற்றுள், மெய்ப்பாடாவது, உலகத்தாரது உள்ளத்தேநிகழும் நிகழ்ச்சிகள், ஆங்கு நிகழ்ந்தவாறு புறத்தார்க்குப் புலப்படுவதோர்வழியால் வெளிப்படுதலாம். வீரசோழிய உரைகாரர் "மெய்க்கட் பட்டு விளங்கிய தோற்றம்" என்பர். இதனைச் சத்துவம் என்பது வடநூல்வழக்காகும். இம் மெய்ப்பாடுகளின்வகையும் இலக்கணங்களும் அகம் புறமென்னும் பொருட்பகுதிகட்கு ஏற்பவைத்து இவ்வியலிற் கூறப்படுவன என உணர்க. இம் மெய்ப்பாடுகள்:—நகை (சிரிப்பு), அழுகை (அவலம்), இளிவரல் (இழிவு), மருட்கை (வியப்பு), அச்சம், பெருமிதம் (வீரம்), வெகுளி (உருத்திரம்), உவகை—என எட்டாக ஆசிரியர் வகுக்கின்றார். நாடகநூலார்—இவ்வெட்டோடு சமநிலை (சாந்தம்) ஒன்றுகூட்டி ஒன்பதென்று கூறுவரொன்பதும்,* இவற்றுள், உருத்திரமொழிந்த எட்டையும் 16-ஆகவும், 32-ஆகவும் விரிப்பரொன்பதும், "பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும், கண்ணிய புறனே நானான் கென்ப" என்ற சூத்திரத்தாலும் அதனுரையாலும் தெரியவருகின்றன. வடமொழியலங்கார நூலார், இவ்வெண்வகை மெய்ப்பாடுகளாலும் நடப்பதே சுவையென்னும் அணியாம் என்பர். சுவையாவது—"வடிவம் இளமைமுதலிய விபாவங்களாலும் (விபாவம்—விசேடித்துத் தோன்றியது), கட்பார்வை, மயிர்சிலிர்த்தல் முதலிய அநுபாவங்களாலும் (பின்னர்த் தோன்றியது), வெறுப்பு பலக்குறைமுதலிய சஞ்சாரிபாவங்களாலும் (துணைசெய்வதாகத்தோன்றியது) உண்டாகும் விருப்புமுதலிய மனச்செய்கை" யாம்.

இனி, மெய்ப்பாடு எட்டனுள், நகை—எள்ளல் இளமை பேதைமை மடன் என நான்குபகுதியும்; அழுகை—இளிவு (இகழப்படுதல்), இழவு,

---

*சிலப்பதிகாரத்தில் இச்சுவை யொன்பதும் சுருங்க விளக்கப்படுதல் காணலாம் (ந, கக, அடியார்க். பக். அந, அச). இவ்வொன்பதுடன் "வற்சலம்" ஒன்றுகூட்டிச் சுவை பத்தென்பாருமுளர். வற்சலம்-புத்திரர் முதலியோரிடத்துக் காணப்படும், வீரம் கல்விமுதலியவற்றால் உண்டாய அன்பு.

அசைவு (பண்டைநிலைமைகெட்டு வருந்தல்), வறுமை என நான்குபகுதியும்; இளிவரல்—மூப்பு, பிணி, வருத்தம், மென்மை என நான்குபகுதியும்; மருட்கை—புதுமை, பெருமை, சிறுமை, அச்சம் என நான்கு பகுதியும் உடையவாம். ஆக இவை நானான்குபதினாறும் தன்கட்டோன்றுதல் பிறர்கட்டோன்றுதல் என்ற இருபகுதிப்பட்டு முப்பத்திரண்டாக நடக்கும் என்றும்; இனிவரும் அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்ற நான்குமெய்ப்பாடுகளும் நானான்கு பதினாறுபகுதிப் படுமேனும், முன்னவைபோல ஒன்றிரண்டாகி முப்பத்திரண்டாகாது, பதினாறேயாமெனவும் உரைகாரர் கூறுவர். பிற்பட்ட அந்நான்கனுள் அச்சத்தின்வகையாவன:-அணங்கு (பேய் பூத முதலியவை), விலங்கு, கள்வர், இறை (அரசன்) என்பன. குவலயானந்தமுடையார்—"குரூரமுடையவற்றைப் பார்த்தல் முதலியவைகளால் உண்டாம் மனக்கலைவு" அச்சமென்பர். பெருமிதத்தின்வகையாவன:-கல்வி, தறுகண் (அஞ்சத்தக்கவற்றுக்கு அஞ்சாமை), இசைமை, கொடை எனபன. வெகுளியின்வகை:—உறுப்பறை (அங்கவீனம்), குடிகோள் (தாரம் சுற்றமுதலியவற்றிற் கேடுசூழ்தல்), அலை (கோல்கொண்டு அலைத்தல் முதலியன), கொலை என்பன. உவகையின்வகை:—செல்வம், புலன் (அறிவுடைமை), புணர்ச்சி, விளையாட்டு எனபன. இவ் வெட்டுமெய்ப்பாடுகளேயன்றி, உடைமை முதல் நடுக்கமீறாக வேறு கூஉ பொருளுங் கூறி, அவையும், மெய்ப்பாட்டின்வகையே என்பர் ஆசிரியர். அவற்றின் விரிவு உரை நோக்கி உணரற்பாலன. இவ்வாறு கூறப்பட்ட மெய்ப்பாடுகள், அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவானவை என உணர்ந்துகொள்க.

இனி, அகத்திணைக்கே பெரும்பான்மையுரிய மெய்ப்பாடுகளை ஆசிரியர் கூடு—சூத்திரங்களாற் கூறி இவ்வியலை முடிக்கின்றார். இங்ஙனம் கூறும் முறையிலே, ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட்டவிடத்து, அவ் வெதிர்ப்பாடுதொடங்கிப் புணர்ச்சியளவும் மூன்றுபகுதியாகவும், புணர்ச்சிப்பின் களவுவெளிப்படுந்துணையும் மூன்றுபகுதியாகவும், இவ்வாறும் தனித்தனி நந்நான்கு பிரிவுடையவாகவும் மெய்ப்பாடுகள் விரிக்கப்பட்டுள்ளன. இவற்றுள், எதிர்ப்படுதல்தொடங்கிப் புணர்ச்சிவரையுள்ள மூன்றுபகுதியிலே முதற்பகுதிக்குரிய நான்குவகையும் தலைவிமாட்டே நிகழ்வன; அவை வருமாறு:—

(1) தலைவனுந் தலைவியும் எதிர்ப்பட்டவிடத்துத் தன்னை அவன் நோக்குதலைத் தலைவி விரும்பும் உள்ளநெகிழ்ச்சி; இது 'புகுமுகம் புரிதல்' எனப்படும். "யானோக்குங் காலை நிலநோக்கு நோக்காக்காற்—றானோக்கி மெல்ல நகும்" (குறள்-௧௦௯௪) எனக் காண்க. (2) தலைமகன் தன்னை நோக்கியவழி, உட்கும் நாணும் ஒருங்குவந்தடைதலால், வியர் உண்டாகிய நெற்றியினளாதல். (3) அதன்பின்னர்த் தலைவனிடந் தோன்றிய குறிப்புக்களால் தலைவி உள்ளமுவந்தவழியும், நகாது நிற்றல்; "முகை மொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை – நகை மொக்கு ளுள்ளதொன் றுண்டு" (குறள்-௧௨௭௪) என உதாரணங் காண்க. (4) அங்ஙனம் நகையை மறைத்தவழியும், உள்ளஞ் சிதைந்து நிறையழித லியல்பாதலால் அச்சிதைவு பிறர்க்குத் தெரியாவகை அவள் தன் நெஞ்சினை நிறுத்தல்.

"யான்தற் காண்டொறுந் தான்பெரிது மகிழான்
வாணுதல் வியர்ப்ப நாணின ளிறைஞ்சி
மிகைவெளிப் படாது நகைமுகங் கரந்த
நன்னுத லரிவை தன்மனஞ் சிதைந்ததை
நீயறிந் திலையால் நெஞ்சே
யானறிந் தேனது வாயா குதலே"

என, இயற்கைப்புணர்ச்சிபெற்றுநீங்கிய தலைவன் தன்னெஞ்சிற்குச் சொல்லிய செய்யுளில், இந் நான்குமெய்ப்பாடுகளும் முறையே நிகழ்ந்தனவாகக் கூறப்படுதல் காண்க.

இனி, இரண்டாம்பகுதிக்குரிய நான்கு மெய்ப்பாடுகளாவன:— (1) மெய்யும் மெய்யுந் தீண்டியவழி மெல்லியன்மகளிர்க்குத் தலைமயிரின் முடி உள்ளநெகிழ்ச்சியாலே தன்வயமன்றியும் நெகிழ்தல். புணர்ச்சிக் காலத்து மகளிர்க்கு இஃது இயல்பாமெண்க. (2) உறுப்புக்களிற் பூட்டப்படாது பெய்துவைக்கப்பட்ட தோடு முதலாயின எளிதின் வீழ்தல். (3) நெகிழ்தற்குரிய வளைமுதலியவற்றை முன்கையில் இறுகச் செறித்தல் மோதிரந்திருத்தல் முதலியன. (4) உடுத்த உடையைப் பலகாலும் அழித்துடுத்தல் என இவை.

"விண்ணுயர் விறல்வரைக் கவாஅ னொருவன்
கண்ணி நோக்கிய தல்லது தண்ணென
உரைத்தலு மில்லை மாதோ அவனே

வரைப்பாற் கடவுளு மல்ல னதற்கே
ஓதி முந்துறக் காதொன்று நெகிழ
நிழலவிர் மணிப்பூ ணெஞ்சொடு கழலத்
துகிலும் பன்முறை நெடிது நிமிர்ந்தனவே
நீயறி குவையதன் முதலே
யாதோ தோழியது கூறுமா றெமக்கே"

எனத் தோழிக்குத் தலைமகள் அறத்தொடுநின்றசெய்யுளில், இந்நான்கு மெய்ப்பாடுகளும் முறையே கூறப்படுதல் காண்க.

மூன்றுவது பகுதிக்குரிய மெய்ப்பாடுகள் நான்காவன:— (1) மேற் கூறியவாறு, அவிழ்ந்த உடையினைப் பெயர்த்து உடுத்துங்கால், அது பெரிதும் நெகிழ்ந்துகாட்ட, அவ்வற்றம் மறைத்தற்குத் தன் மறைந்த தானத்தைக் கையாற் பொத்துதல். (2) இடையில் அணிந்த அணிகளைத் திருத்திக்கோடல். (3) புணர்ச்சியை வேண்டாதாள்போல் ஒருவன் செய்கையைப் படைத்துக்கொண்டு புரிதல். (4) அங்ஙனம் படைத்துக் கொண்டதிலும் நிற்காது தன்னிறையழிதலாற் கைகள் தாமே முயங் கல்விருப்பத்தால் எழுதல் என்பன. இங்ஙனம் கூறப்பட்ட (நால் வகையான) மூன்றுபகுதிகளும், முதலிற்குறித்தவாறு, எதிர்ப்படுதல் முதற் புணர்ச்சியளவா நிகழ்வனவாதல் நோக்கிக்கொள்க. இனி வரு வன, புணர்ச்சிப்பின்னர்க் களவுவெளிப்படுந்துணையுமுள்ள பின் மூன்று பகுதிகளாகும்.

நான்காம்பகுதி மெய்ப்பாடுகள் நான்காவன—(1) புணர்ச்சிநிகழ்ந்த பின்பு, தலைமகனைத் தன்னவனாகப்பாராட்டும் குறிப்பு நிகழ்தல். (2) விளையாடும்பருவத்து நிகழ்ந்த மடம் நீங்கக் காமப்பொருட்கண்ணே சிறிதறிவுதோன்றுதல். (3) சுற்றத்தாற் கூறப்படுங் கடுஞ்சொற்களை வெறுக்காது ஏற்றுக்கொண்டு, புறத்தார்க்கு இவ்வொழுக்கம் புலனாகுங் கொல் என்று நாணுதல். (4) தலைமகனாற் கொடுக்கப்பட்ட தழையுங் கண்ணியுந் தாரு முதலியனகொண்டு கையுறைபாராட்டுதல்—என்பன வாம்.

ஐந்தாம்பகுதி மெய்ப்பாடுகள் நான்காவன:—(1) இங்ஙனம் தலைவன் தலைவி யிருவர்க்குங் கூட்டமுண்மை சிலர் பலர்க்குப் புலனாக, அதனால் எழுகின்ற அலருக்குத் தலைவி நாணமுற்று, அச்செய்தியைத் தோழிக் குந் தமர்க்கும் அறிவுறுத்தற்குறிப்பைத் தெரிந்துடம்படுதல். (2) அங்

னைம் உடம்பட்டபின்பு, பண்டுபோலப் பகற்குறியினும் இரவுக் குறியினும் தலைவனுடன் கூடுதலை அவள் மறுத்தல். (3) அக்காலத்தே தலைவி இற்செறிக்கப் படுதலால் தலைவன்முன் வெளிப்படாது ஒழுகுதல். (4) அங்ஙனம் காத்து ஒழுகுங்காலத்துத் தலைவனை ஒருஞான்று கண்ட தலைவி கழியுவகைகொள்ளுதல். இங்ஙனம் தலைவனைக்கண்டு மகிழ்தல், "புகாஅக் காலைப் புக்கெதிர்ப் பட்டுழிப்–பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும"* (பக்-௨௯௧) "வேளாண் எதிரும் விருந்தின் கண்ணும்" நிகழுமென அறிக.

ஆறும்பகுதி மெய்ப்பாடுகள் நான்காவன:- (1) தலைவனைக்கூடப் பெறாமையால், புறத்தே கோலஞ்செய்தவழியும் அகத்தே சிதைவுண்டாதல். (2) அக்கவற்சியானே சுற்றத்தாரிடையிருந்தும் தமியாள் போன்ற குறிப்பை வெளிப்படுத்தல். (3) கையொடுபிடிபட்ட கள்வரைப்போலச் சொல்லுவனவற்றைத் தடுமாறிச்சொல்லுதல். (4) கலங்காதுசொல்லிய வழியும் தனபாலுள்ள கவற்சிதோன்றக் கூறுதல்–என்பன. இங்ஙனம் கூறிய ஆறுபகுதி மெய்ப்பாடுகளும முறையே காமக்கூட்டத்துக்கு நிமித்தமாய்த் (௨௬௭) தலைவிபால் நிகழ்வனவாதல் காணலாம். இவை (அறுநான்கு) இருபத்துநான்குமெய்ப்பாடுகளிற் சில குறைந்தும் (௨௬௮) சில கூடியும் (பக்-௫00) வருவன வுளவெனறும், கைக்கிளை பெருந்திணைகட்கு மெய்ப்பாடுகள் வரையறையில்லையெனவுங் கூறுவர் (பக்-௪௯௯). களவு கற்புக் காலங்களில், மேற்குறித்த இருபத்துநான்கன்றி வேறுபலவும் நிகழ்தலை "இன்பத்தைவெறுத்தல்" (௨௭0) "முட்டுவயிற்கழறல்" (௨௭௧) "தெய்வமஞ்சல்" (௨௭௨) என்ற சூத்திர உரைநோக்கி உணர்க. இனித் தலைமகன்கண் நிகழும் மெய்ப்பாடுகளில், நிம்பிரி (=அழுக்காறு: இச்சொல இப்பொருளில் ஆசிரியரால் அருமையாக வழங்கப்படுவதாம்.), கொடுமை, தன்னைவியத்தல், புறங்கூறுதல், வன்சொல், உறுதியின்மை, சோம்பல், தன்குடியை மேலாக மதித்தல், இருவருள் ஒருவர்தானே இன்பம் பெரிதும் அடைவதாக நினைத்தல், அறிவின்மை, மறவி, இவனொடு ஒப்பள் இவளென்று அன்பு செய்தல் என்பவை உயர்ந்தகாமக்குறிப்பிற்கு ஆகாதன என்பர் ஆசிரியர் (௨௭௪).

* "உண்டிககாலத்துத் தலைவியில்லத்துத் தலைவன் புக்கெதிர்ப்பட்டவழி அவனை விருந்தேற்றுக்கொள்ளும் பகுதிக்கண்ணும்; எ-று. இவ்வாறு விருந்தேற்றல், கலித்தொகை ௫௯-ம் பாட்டின் அழகாகக் கூறப்படுதல் காணலாம்.

முடிவாக, கண்ணாலும் செவியாலும் நுண்மையாக அறியும் உணர் வுடையார்தார்க்கல்லது, மற்றவர்க்கு, மெய்ப்பாடுகளை ஆராய்ந்து கொள்ளு தல் அரிதாம் என்று கூறுவர் ஆசிரியர்; அஃதாவது—"எள்ள லிளமை பேதைமை மடனென்—றுள்ளப் பட்ட நகை நான்கென்ப" என்று, நகைக் கேதுவாகிய பொருள் கூறப்பட்டதாயினும், அப்பொருள்பற்றிப் பிறக் கும் நகையுணர்வு இவ்வாறு புலப்படுமென்று அவர் கூறினரில்லை; இவ்வாறே ஏனையவும். இவற்றைக் கண்ணும் செவியுங் கருவிகளாக அறிவுடையோர் நுனித்துணர்ந்துகொள்ளக்கடவர் என்பதாம்.

---

## VI. உவமவியல்

மேற்கூறிய மெய்ப்பாடுகள்போல, அகப்பொருள் புறப்பொருள்களை அறிவதற்கு உபகாரப்படுமவற்றுள் இவ்வுவமவியலும் ஒன்றாகும். உவமமாவது—ஒருபொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுதலாம். இவ்வுவமையைத் தொல்காப்பியனார் உள்ளுறையுவமம், ஏனையுவமம் என இரண்டாகப் பகுத்தோதுவர். இவற்றுள், பின்னதான ஏனையுவம மாவது—வெளிப்படையுவமமாம்; இஃது உள்ளத்தான் உணரவேண் டாது, சொல்லிய சொற்றொடரே பற்றுக்கோடாகத் தானே உணரப்படு வது. "ஏனை யுவமந் தானுணர் வின்றே" (சஉ) எனக் காண்க. வட நூலார் வழங்கும் பலவகையணிகளிலே உவமையணியொன்றே இவ்விய லிற் கூறப்படுவதென உணரற்பாலது. இவ்வுவமத்தின் விகற்பங்கள் நான்காகும்:—வினை, பயன், மெய் (வடிவு), உரு (வண்ணம்) என. 'புலி யன்னமறவன்' என்பது வினையுவமம்; புலி பாயுமாறுபோலப் பாய்வன் எனத் தொழில்பற்றிவந்தமையின். "மாரியன்ன வண்கைத்—தேர்வேள் ஆய்" என்பது பயனுவமம்; மாரியால் விளைக்கப்படும் பொருளும், வண் கையாற் பெறும் பொருளும் ஒக்கும் என்றவாறு. 'துடியிடை' என் பது மெய்யுவமம்; கீழும் மேலும் அகன்றுகாட்ட இடை சுருங்கித் தோன்றுதலால், உருவொத்தபடி. 'பொன்மேனி' என்பது உருவுவமம்; பொன்னிடத்தும் மேனியிடத்துமுள்ள நிறமே ஒத்தலின். இந்நான்கு விகற்பங்களில் ஒன்றும் பலவும் ஒருவமையில் விரவியும் வரும்; உதாரண மாக—'பிறையன்ன வையெயிறு' என்றவிடத்து, பிறைக்கும் எயிற்றுக் கும் வண்ணமும் வடிவும் ஒத்தல் கண்டுகொள்க (உஎஎ). இவ்வுவமை

யாண்டும் உயர்ந்து நிற்பதாகல்வேண்டுமென்றும், உவமிக்கப்படும் பொருள் [=உவமேயம்: இதனைப் 'பொருள்' (உஎஅ) என்று வழங்குதலுமுண்டு.] இழிந்துவரல்வேண்டுமென்றும், இங்ஙனம் கூறுமிடத்து 'அவ்விரண்டும் ஒத்தன' என்று உலகம் மகிழும்படி அமையவேண்டுமென்றும் (உஅகூ) கூறுவர். இவ்வுவமவகை நான்கும்—சிறப்பு நலம் காதல் வலி என்ற நான்கனிடமாகவே பெரும்பான்மை பிறக்கும் (உஎகூ—உஅ0); உவமங்களின் பொதுத்தன்மைகள் நன்குவிளங்காதவிடத்து அவை உய்த்துணர்ந்து அறியப்படுமென்பதும், உவமேயமே உவமையாகக் கூறுதலுமுண்டென்பதும், மிகவுயர்ந்ததையும் மிகவிழிந்ததையும் ஒப்புக் கூறும்போது, கேட்டோர் மனங்கொள்ளும்படி இனிமைபயப்பக் கூற வேண்டுமென்பதும், பிற உவமப்பகுதிகளும் இவ்வியலுட் கூறப்பட்டுள்ளன.

இங்ஙனம் கூறப்படும் உவமங்களை விளக்குதற்கு உரிய உருபுகள் பலவாகும். அவற்றை ஆசிரியர் எட்டுச்சூத்திரங்களாற் கூறுகின்றார். இங்ஙனம் கூறுவதிலுள்ள விசேடம் என்னெனில், வினை பயன மெய் உரு என்ற நான்குபகுதிகளிலும்—இவ்வுருபுகள் வழங்குமிடத்து, இன்னவின்ன உருபுகள் இன்னவின்ன உவமைகட்கே உரியன என்று வரையறைப்படுத்துவதாகும். இதனை "அன்ன ஆங்க மான இறப்ப—என்ன உறழத் தகைய நோக்கொடு—கண்ணிய எட்டும் வினைப்பா லுவமம்" என்பது முதலிய சூத்திரங்களால் உணர்க. இவ்வாறு, ஒவ்வோர் உவமப்பகுதிக்கு உரிமைப்படுத்து உருபுகளை நியமித்தலின் பிற்காலத்துப் போல எல்லா உருபுகளும் எல்லா உவமைகட்கும் ஆசிரியர்நாளில் வழங்கினவல்ல என்பதும், அங்ஙனம் வழங்காது உரிமைப்பட்டது ஒவ்வொருகாரணம்பற்றியே எனபதும் நன்கு அறியப்படும். இதனை யன்றே, "தத்த மரபிற் றோன்றுமன் பொருளே" என்று, அவ்வுருபுகளின் மரபுவழுவாநிலையையும், ஆசிரியர் வற்புறுத்துவாராயினரென்க. ஈண்டு உரைகாரர் எழுதுவன வருமாறு. "மறுப்ப ஒப்ப என்பன முதலாயின ஒருகாரணமுடையன என்பது, ஆசிரியர் பெருமரபினவாக உரிமைப்படுத்துக்கூறினமையின் அறிந்தாம்; அல்லதூஉம், 'மரபிற்றோன்றும்' என்றதனுன், இவையெல்லாம், மரபுபற்றியே அறியல்வேண்டும்; எனவே, தலைச்சங்கத்தார் முதலாயினோர் செய்யுட்களுள் அவ்வாறு பயின்றுவருமென்பது அறிந்தாமன்றே, இவ்வாறு சூத்திரஞ்செய்த

லான் என்பது" எனக் கண்டுகொள்க. இங்ஙனமாக மரபுபற்றிவரும் உருபுகளாக ஆசிரியர் கூறியவற்றுள் "நளிய, நந்த" என்ற விரண்டும் பண்டே வழக்கு வீழ்ந்தன என்பது—"அவ்விரண்டும் இக்காலத்து அரியபோலும்; அவை வந்தவழிக் கண்டுகொள்க" என உரைகாரர் குறித்தலால் அறியலாகும்.

இனி, உவமம் பலவகையாக விருத்தலாலும், வேறு பல அலங்காரங் கட்கு அடிப்படையாதலாலும், பிற்காலத்து அணியிலக்கணங்கூறும் வடநூல்களுந் தென்னூல்களும் இதனைப் பலவகையாக விரிப்பன வாயின. மகாகவியாகிய தண்டியாசிரியர் வடமொழியிலியற்றிய காவியா தரிசத்தின் தமிழ்மொழிபெயர்ப்பாகிய தண்டியலங்காரநூல், சொல்லணி பொருளணியென இருபகுதிகொண்டும், அவற்றுட் பொருளணியை முப்பத்தைந்துவகையாக்கியும் விளக்குகின்றது. இம் முப்பத்தைந்த னுள்ளே, தொல்காப்பியனார்கூறிய உவமமும் ஒன்றும். இவ்வணிதன்னை யும் பலபகுதிகளாக வடநூலார் விரித்துக்கூறுவதேயன்றி, அப்பகுதி களை வெவ்வேறணியாக்கியும் பேதப்படுத்துவர். தொகையுவமம் என்று தண்டியாசிரியர்கூறுவது 'சுட்டிக்கூறாவுவமம்' என்றசூத்திரத்தும்(உ௮உ) விபரீத உவமை என்பது "பொருளே உவமஞ் செய்தனர்" (உ௮ச) என்றதினும், ஐயம் இதரவிதரம் என்பவை "தடுமாறுவமம்" என்பதி னும் (௩0எ) அடங்குதலும், இவ்வாறே சுவையணி என்று தனியாகத் தண்டியலங்காரங் கூறுவது "பெருமையுஞ் சிறுமையும்" (உ௮ரு) என்ற சூத்திரத்தடங்குதலும் உய்த்துணரக்கூடியன.* சாகித்தியதருப்பணம், சரஸ்வதீகண்டாபரணம் முதலிய வடநூல்களில், இவ்வுவமவகைகளிற் சில வேறுவேறலங்காரமாகக் கூறப்பட்டுள்ளன என்பர். ஆனால், வட நூலார்கூறிய அணிவிகற்பங்கள் தொல்காப்பியனார்காலத்து வேறுபட வழங்கின அல்ல என்பதை, உரைகாரர்—"இனி, இவ்வோத்தினுட்கூறு கின்ற உவமங்களுட்சிலவற்றையும், சொல்லதிகாரத்துள்ளும் செய்யுளிய லுள்ளும் சொல்லுகின்ற சிலபொருள்களையும் வாங்கிக்கொண்டு,மற்றவை செய்யுட்கண்ணே அணியாமென இக்காலத்து ஆசிரியர் நூல்செய்தாரு முளர்; அவை ஒருதலையாகச் செய்யுட்கு அணியென்று கூறப்படா;

* இன்னும் இவ்வேனையுவமத்தின்பகுதிகளை—"வேறுபட வந்த வுவமத் தோற்றம், கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல்" என்ற செய்யுளியற்சூத் திரத்துள்வரும் உரைகாரர்கூற்றான் உணர்க.

* * * பொருளதிகாரத்துள் (வரும்) பொருட்பகுதியெல்லாம் செய்யுட் கணியாகலான், அவை பாடலுட் பயின்றன என்றதனுன், அவற்றையுந் தொகுத்து அணியெனக்கூறாது, வேறுசிலவற்றை வரைந்து அணி யெனக்கூறுதல் பயமில்கூற்றாம் என உணர்க." (உவமவியல், சூத். ௩ ௭) எனவும் மற்றும் பல ஏதுக்கூறியும் பிற்காலத் தணிவகைகளை விரிவாக மறுத்துரைகூறுதல் காணலாம் (பக்-௫௫௨). மேலேகூறிய உவமவுருபு களிலே, "என்ற" எனவும் ஓர் உருபு ஆசிரியர்கூறுதலால், "வாயென்ற பவளம்" என்பதைப் பிற்காலத்து அணிநூலார் உருவகமாகக்கொண்ட முறையில் தொல்காப்பியங்கொள்ளாது, உவமைப்பாற்படுத்தே கூறி னமையும் உய்த்துணரப்படும் (பக். ௫உஉ).

இனி உள்ளுறையுவமம் ஆராயற்பாலது. அஃதாவது—ஒரு புல வன் 'தான் புலப்படக்கூறுகின்ற உவமத்துடன், புலப்படக்கூறாது உவமிக்கப்படும் பொருள் ஒத்துமுடிவதாக' என்று தன்னுள்ளத்தே கருதி, அதனைப் பிறருமறிய உணர்த்துதற்குரிய சொல்லெல்லாம் நிறை யக்கொண்டு முடிப்பதாம் (௪௮). இது தெய்வமொழிந்த உணவு முத லிய கருப்பொருளடியாகப் புலப்படுமென்பர். இவ்வுவமம், ஏனையுவமம் போல உவமையும் உவமிக்கப்படும்பொருளுமாக நிறுத்திக்கூறப்படாது, நல்லுணர்வுடையார் உவமம்போலப் பொருள்கொள்ளும்படி செய்யப்படுவ தாய் வேறான உவமம் ஆகாமையால் 'உவமப்போலி' எனவும்படும். இவ் வுவமமும்—வினை, பயன், உறுப்பு (மெய்), உரு, பிறப்பு—என்பவைபற்றி நிகழ்வதாம். உதாரணமாக—"கரும்புநடு பாத்திக் கலித்த தாமரை— சுரும்புபசி களையும் பெரும்புன லூர." (ஐங்குறு. ௬௫) என்பது, வினை பற்றிவந்த உள்ளுறையுவமமாம். இதனுள், பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகனை விளிக்குமிடத்துத் தலைமகள்—"தாமரையை விளைப்பதற் கன்றிக் கரும்புநடுதற்குச் செய்த பாத்தியுள், தானே முளைத்த தாமரை சுரும்பின்பசியைத் தீர்க்கும் ஊரனே!" என்று தலைவனை விசேடித்து அழைத்தல் கூறப்படுகின்றது. இக்கூற்றால், 'பரத்தையர்க்கென்று அமைக்கப்பட்ட தலைவனது இல்லத்தில் யான் இடைவந்து விருந்தோம்பு கின்றேன்' என உவமைக்குப் பிறிதொருபொருள் எதிர்நின்று உவமஞ் செய்யாது, ஆண்டுள்ள கருப்பொருளொடுநோக்கிக் கருத்திறற் கொள்ள வைத்தலின் உள்ளுறையுவமம் ஆதலும், அவ்வுவமத்துள்ளும்—தாமரை பூத்து சுரும்பின்பசிகளையுந் தொழிலோடு, தலைவியின் விருந்தோம்பு

தற்றொழில் உவமங்கொள்ளநின்றமையால் இது வினையுவமம் ஆதலுங் கண்டுகொள்க. திருக்கோவை உகூ0-ல் பேராசிரியரும் இவ்வுள்ளுறையை விளக்குதல் அறியத்தகும். இவ்வாறே பயன் உறுப்பு முதலியனபற்றி நிகழும் உவமங்களும் கொள்ளற்பாலன.

இவ்வுள்ளுறையுவமம்பற்றித் தலைவி கூற்றுநிகழ்த்துமிடத்து, மருதம் நெய்த லென்ற இரண்டுநிலங்களில் (ங0உ) அவளறியும் கருப் பொருள்கொண்டே உவமஞ்செய்தற்குரியள் எனவும் (ங0க), தோழியும் செவிலியும் இருந்தநிலத்துள்ள எல்லாக்கருப்பொருளாலும், பிறநிலப் பொருள் மயங்காது பொருந்தும்வகையால் உவமஞ்செய்தற்குரியர் என வும் (ங0ச, ங0ரு), தலைவனுயின் தன் னுடைமைதோன்ற எல்லா நிலத்துப்பொருள்களாலும் உவமஞ்செய்தற்குரியன் என்றும் (ங0உ, ங0நி), ஏனையோர், தாந்தாம் அறிந்தவகையால், நிலம் வேறுபடாது கூறுவரெனவும் (ங0௬), விதிப்பர் ஆசிரியர். இவையெல்லாம் முறை தவறாது பண்டு வழங்கிவந்தன வென்பது, பிற்காலத்தார்க்குப் புதிய வாகவுள்ள இவ்விதிகளை ஆசிரியர் நியமித்தலால் அறியலாம். அன்றி யும், பொருளிலக்கணத்துக்கு ஏனையுவமமும் உரியதாயினும், இவ் வுள்ளுறையே சிறந்தது எனப்படுகின்றது (பக்-நிஙகூ). உரைகாரரும் 'மற்றிவையெல்லாம் அகப்பொருட்கே உரியவாக விதந்தோதியது என்னை, புறப்பொருட்கு வாராதனபோல: எனின், ஆண்டுவருதல் அரிதாதலின் இவ்வாறு அகத்திற்கே கூறினுன் என்பது' (பக்-நிசச) என்று எழுதினுர். இதுபற்றியே, இவ்வுள்ளுறையுவமத்தை அகத் திணையியலில்வைத்து ஆசிரியர் ஓதுவாராயினர் என உணர்க (சகூ-சஅ).

---

## VII. செய்யுளியல்.

மேற்கூறிய அகப்பொருள் புறப்பொருள்களின் புலனெறிவழக்கிற் குரிய மெய்ப்பாட்டின் இலக்கணங்களையும் உவமவிலக்கணங்களையும் கூறிப்போந்த ஆசிரியர் தொல்காப்பியனுர், அப்புலனெறிவழக்கங்க. அமைத்து நல்லிசைப்புலவர் பாடிப்போந்த செய்யுள்களின் இலக்கணங் களையும் எட்டாவதியலிற் கூறுவாராயினர். இப்போது அச்சிடப்பட் டுள்ள பொருளதிகாரச் செய்யுளியலுக்குள்ள உரைப்பகுதி நச்சினுர்க் கினியாதன்றிப் பேராசிரியரதே என்பது, சேதுஸம்ஸ்தானம் மகாவித்

வான் ஸ்ரீ ரா. இராகவையங்காரவர்கள் "செந்தமிழில்" எழுதிய ஆராய்ச்சியுரையானும், பின் வேறாக வெளியிட்ட செய்யுளியல்-நச்சினார்க்கினியருரையானும் அறிஞர் அறிந்தவை. இனி, இச்செய்யுளியலை "யாப்பதிகாரம்" எனத் தனியதிகாரமாக்கி வழங்கியதுண்டென்பதும், ஆனால், அது பலர்க்கும் ஒப்பமுடிந்ததன்றென்பதும், "மற்றிதனை யாப்பதிகாரம் என வேறோர் அதிகாரமாக்கி உரைப்பாருமுளர்; அங்ஙனங் கூறின் (மரபியலை) வழக்கதிகாரம் எனவும் வேறுவேண்டுமென மறுக்க. அல்லதூஉம், எழுத்துஞ் சொல்லும் பொருளும் என மூன்றும் மூன்றதிகாரமாக்கி, அதிகாரம் ஒன்றற்கு ஒன்பதோத்தாகத் தந்திரஞ் செய்ததனோடு மாறுகோளாம்" எனப் பேராசிரியர்கூறுதலால் தெரிகின்றன. களவியலுரைகாரர் "எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, பொருளதிகாரம் வல்லாரை எங்குந் தலைப்பட்டிலேம் என்றார்" எனப் பாயிரத்துக் கூறுவதும், யாப்பதிகாரம் எனத் தனியே வழங்கிய பண்டைவழக்கைக் குறிப்பிக்கின்றது.

இனி, இவ்வியலில், செய்யுள் என்பது முப்பத்துநான்கு உறுப்புடையதாகக்கூறப்படும், அவை வருமாறு:-

(1) மாத்திரை - எழுத்திற்கோதிய மாத்திரைகள் செய்யுளில் விரவிக்கிடக்கும அளவை.

(2) எழுத்தியல்வகை - எழுத்துக்களை இயற்றிக்கொள்ளுங் கூறுபாடு. இவ்விரண்டுறுப்புக்களும் எழுத்ததிகாரத்தில் ஆசிரியாற் கூறப்பட்டன.

(3) அசைவகை-அசைக்கூறுபாடு; இஃது இயலசை உரியசை என இரண்டாகப் பகுத்து ஓதப்படும். குற்றுகர முற்றுகரங்களில் வரும் நேபு நிரைபு என்ற அசைக்கூறுகளும், குற்றியலிகர குற்றியலுகரங்கள் அசைக்குறுப்பாகுநிலையில், ஒற்றேபோலப் புள்ளிபெறுதலும் ஆசிரியாற் கூறப்படுதல் ஆராயற்பாலன.*

* தொல்காப்பியனார் "மெய்யீறெல்லாம் புள்ளியொடு நிலையல்" "குற்றியலுகரமு மற்றென மொழிப" என்ற சூத்திரங்களால் (எழுத்ததிகாரம்-க0ச-ரு) மெய்யீறுபோலக் குற்றியலுகரம் புள்ளிபெறுதலுங் கூறினார். இச்சூத்திரங்கட்கு உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் கூறிய வேறுரையை, நன்னூல்விருத்திகாரர்—"அற்று, என்னும் மாட்டேற்றிற்கு, மெய்யீறுபோலக் குற்றியலுகா

(4) சீர்-அவ்வசைகள் இரண்டானும் மூன்றானுஞ் சேர்ந்து ஓரோர் சொல் இலயம்படமுடிவது சீர் எனப்படும். பேராசிரியர் "உலகத்துச் சொல்லெல்லாம் ஈரசையானும் மூவசையானுமன்றி வாரா" என்றுகூறி நாட்டுவர். இனித் தளையெனப்பதோர் உறுப்பு ஆசிரியர் கூறுமை நோக்கற் பாலது. தளைத்தலிற் றளையாகி அது சீரதுதொழிலேயாதலின், தொல் காப்பியனார் அதனைத் தனியுறுப்பாகக்கொண்டிலரென்பதும் இத் தளை வேண்டினார் பிற்காலத்து ஆசிரியரே யென்பதும் பேராசிரியர்கொள்கை.

---

வீறும் புள்ளியொடுநிற்குமெனக்கொள்ளாது, இம்மூன்றுஞ் சூத்திரத்தைப் 'புள்ளியீற்றுமுன்' என்னும் கஙசு-ம் சூத்திரத்தோடு மாட்டெறிந்ததாக–கொண் டார்..........அவ்வாறு கூறுதல் மாட்டேற்றிலக்கணம் அன்றும்" எனக்கூறி மறுத்தனர். இவ்வாறே சிவஞானமுனிவரும்—"'குற்றிய லுகரமு மற்றென மொழிப' என்னுஞ் சூத்திரத்தாற் குற்றியலுகரமும் புள்ளிபெற்றுநிற்கும் என முற்றுகரத்தோடு இதனிடை வரிவடிவினும வேற்றுமைதோன்றக் கூறி, உம்மையாற் குறறியலிகரமும் புள்ளிபெற்று நிற்கும் என்றேதிணமையானும்" என எழுதல் காண்க (தொல். முதற்சூத். விருத்தி). இவற்றால் குற்றியலுகரம் மெய்போலப் புள்ளிபெறுதலைக் கூறுவதே பின்னோர்கருத்தென்பது விளங்கும். இக்கொள்கையே யாப்பருங்கலவிருத்தியுடையாரும் கொண்டதென்பது, அவர், "**குற்றியலுகரமுங் குற்றியலிகரமும் புள்ளி பெற்றுநிற்கும்**; என்னை? 'குற்றிய லுகரங் குற்றிய லிகரம்—மற்றவை தாமே புள்ளி பெறுமே' என்பது **சங்கயாப்பு**" என்றெழுதலான் உணர்க. இவர்கூற்றில், குற்றியலுகரத்தோடு, குற்றியலிகரமும் புள்ளிபெறுமாறு கூறப்படுதல் அறியத்தக்கது. ஆசிரியர் தொல்காப்பியனார்காலத்தும், அக்குற்றிகரம் புள்ளிபெற்றே வழங்கியதென்பது, பேராசிரியர் "ஒற்றெழுத் தியற்றே குற்றிய லிகரம்" என்னுஞ் செய்யுளியற் சூத்திரவுரையில்—"எனவே எழுத்தோத்தினுள், 'மெய்யி னியற்கை புள்ளி யொடு நிலையல்' எனக் கூறிக் 'குற்றிய லுகரமு மற்றென மொழிப' எனக் குற்றியலுகரத்துக்குப் புள்ளிபெறுதலுங் கூறினர். அதுபோல, **குற்றியலிகர மும் புள்ளிபெற்றுநிற்றல்** உடைத்தென்றவாறுபெற்றாம்..........இவற்றை யெல்லாம் '**ஒற்றெழுத்தியற்றே**' என்றதனால் **புள்ளியிட்டெழுதுக**" என்று கூறுதலால், தெள்ளிதின் உணரப்படும். இவற்றால் **நாகழ்கிது, நாகியாது** என்னுங் குற்றுகர குற்றிகரங்கட்கு, மெய்யெழுத்துப்போல–ககர கிகரங்கட்கு மேலே—புள்ளியிட்டெழுதல் தொல்காப்பியர்காலத்துவழக்காதல் தேறப்படும். மற்றும் இப்புள்ளியெழுத்துக்களின் வரலாறுகளை, **செந்தமிழில்** "தொல் காப்பியனாரும் புள்ளியெழுத்துக்களும்" என்ற கட்டுரைநோக்கியுணர்க (தொகுதி-உ௫. பகுதி-௫. பக். ௧௫ங-௧௬அ).

(5) அடி—அச்சீர் இரண்டும் பலவுந் தொடர்ந்தாவதோர் உறுப்பு; இது, குறளடி சிந்தடி முதலிய ஐந்துவகையும் கூ௨௰ விரியு முடையது. நாற்சீர்கொண்டதே அடியென்று சிறப்பிக்கப்படுமென்பதும் (௩௪௪.), அந்நாற்சீரடி இரண்டும் பலவுந் தொடர்ந்து வருதலே பாட்டாமென்பதும் ஆசிரியர் கொள்கை. இதனாற் பண்டைச்செய்யுள்கள் இம்முறைப்படியே அமைந்திருந்தன என்பது உணரப்படும். பேராசிரியரும், "தலையிடை கடைச்சங்கத்தாரும் பிறசான்றோரும், நாற்சீரடியான்வரும் ஆசிரியமும் வெண்பாவும் கலியுமே பெரும்பான்மையுஞ் செய்தார்; வஞ்சிப்பா சிறுவரவிற்றுமெனக் கொள்க" எனக் கூறிச்செல்லுதல் நோக்கத்தக்கது.

(6) யாப்பாவது—அவ் வடிதோறும் பொருள்பெறச்செய்வதோர் செய்கையாம். இது பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுமொழி என்ற ஏழனடியாகச் சேர சோழ பாண்டியர் என்ற மூவேந்தர் ஆட்சிக்குட்பட்ட தமிழ்நாட்டுவழங்கும் செய்யுள்மரபா மென்பர் ஆசிரியர் (௩அ௭). இதனை உணர்த்துஞ்சூத்திரத்தே "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின" என 'மூவர் ஆட்சிக்குட்பட்ட தமிழ்நாடு' எனறு குறிக்கப்படுதலால், ஆசிரியர்காலத்தில் மூன்றுபிரிவாகவே தமிழகம பகுக்கப்பட்டிருநதசெய்தி விளங்கும். இனி, மேற்குறித்த பாட்டு உரை நூல் முதலிய ஏழனியல்புகளையும் ௪௭அ—முதலிய சூத்திரங்கள் நோக்கி உணர்க.

(7) மரபு என்பது, காலமும் இடமும்பற்றி வழக்குத்திரிந்தவிடத்தும், திரிந்தவற்றுக்கேற்ப வழுப்படாமற் செய்வதோர் முறைமை என்பர் (௩அஅ). இமமரபுகள் செய்யுட்கே உரியவெனபதும், மரபியலிற் கூறப்படுவன பொதுவென்பதும் வேறுபாடு உணரத்தக்கன.

(8) தூக்கு என்பது, பாவினை வரையறுத்துப்பாடித் துணித்து நிறுப்பதென்பர். அஃதாவது—அகவி (அழைத்து,க் கூறும் ஓசையது அகவல், செப்பலோசையது வெண்பா, துள்ளலோசையது கலி, தூங்கலோசையது வஞ்சி யெனத் துணிவது.

(9) தொடையென்பது சீரும் அடியுந் தொடுத்துநிற்பது; இது மோனை எதுகை முரண் இயைபு அளபெடை என ஐந்துவகையும், பதின்மூவாயிரத்தெழுநூற்றெட்டு விரியும் உடையது (௪௧௩).

(10) நோக்கென்பது—மேற்கூறிய மாத்திரைமுதலிய உறுப்புக்களைக் கேட்டோர்க்கு நோக்குப்படச்செய்வது.

(11) பா-என்பது, சேட்புலத்து இருந்தகாலத்தும் ஒருவன் எழுத்துஞ் சொல்லுந் தெரியாமற் பாடமோதுங்கால், அவன் சொல்லுகின்ற செய்யுளின்பகுதியறிந்து 'இன்னசெய்யுள்' என்றுணர்தற்கு ஏதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை என்பர். இப்பா—ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலிப்பா, பரிபாடல், மருட்பா என அறுவகையாம். இவை, அறம் பொருளின்பமென்ற மும்முதற்பொருட்கும் பிற வாழ்த்துவகைகட்கும் உரியவாகும். இவ் வாறுவகைகளுள், பரிபாடலும் மருட்பாவும் ஏனை நான்கனிடமாகப் பிறப்பனவென்றும், அந் நான்கனுள்ளும் ஆசிரியமும் வெண்பாவும் ஆதிப்பாக்களென்றும் (சகக), வஞ்சியுங் கலியும் அவ் விரண்டனிடமாக முறையே கிளைத்தமையால் அவற்றுள் அவை அடங்குமென்றும் கூறப்படுகின்றன. பிற விலக்கணங்களெல்லாம் ஈண்டு விரிப்பிற் பெருகும்.

(12) அளவியல்—அப்பாவின் வரையறை; இதனுட் பாக்களது பல்வகைப்பட்ட விகற்பங்களும் கூறப்படும்.

(13) திணை — அகத்திணை புறத்திணை என்பவற்றை அறியச்செய்தல். (14) கைகோள் — அகத்திணை விகற்பங்களை அறியச்செய்தல்; அவ் விகற்பம் களவு கற்பு என்பன. (15) கூற்றுவகை — அச்செய்யுள் கேட்டார்க்கு, இது சொல்லுகின்றார் இன்னார் என்பது உணர்த்தல் (16) கேட்போர் — இன்னார்க்குச் சொல்லுகின்றது இது எனத் தெரித்தல் (17) களன் என்பது முல்லை குறிஞ்சி முதலாயினவும், பகற்குறி இரவுக்குறி முதலாயினவும் உணரச்செய்தல் இவ்விடங்களன்றித் தன்மை முன்னிலை படர்க்கையிடங்களாகக்கூறுதலு முண்டு. (18) காலவகை — பெரும்பொழுது சிறுபொழுது முதலாயின. (19) பயன்—சொல்லியவகையாற் பிறிதொன்றுபயப்பச் செய்தல். (20) மெய்ப்பாடாவது சொற் கேட்டார்க்குப் பொருள் கண்கூடாவது. (21) எச்சவகை — சொல்லப்படாதமொழிகளைக் கூற்றானுங் குறிப்பானுங் குறித்துக்கொள்ளச்செய்தல். (22) முன்னம் — உயர்ந்தோர் இழிந்தோர் முதலியோர் தத்தம்வகையான் ஒப்பச்சொல்லுவதிற் கருத்துப்படச் செய்தல். (23) பொருளென்பது, 'புலவன்', தான் தோற்றிக்கொண்டு

செய்வதோர் பொருண்மை. (24) துறைவகை என்பது முதலுங் கருவும் பிறழவந்தாலும் இஃது இதன்பாற்படும் என்று ஒரு துறைப் படுத்தற்குரிய கருவி செய்யுட்கு உளதாகச்செய்தல். களவும் கற்பும் பற்றிய பாட்டுக்களை மேற்கூறிய இலக்கணமுறையால் உரைக்கவேண்டு மென்பது,

"திணையே கைகோள் கூற்றே கேட்போர்
இடனே காலம் எச்சம் மெய்ப்பாடு
பயனே கோளென் றங்கப் பத்தே
அகனைந் திணையு முரைத்த லாறே"

என்று இறையனார்களவியலும், ஆசிரியர் கூறியவற்றுள் 13 முதல் 21 வரையுள்ள பகுதிகளைக் கூறுதல் காண்க. இச்சூத்திரத்து ஈற்றில் எஞ்சிநின்ற கோள் என்பது, பாட்டினகத்துப் பொருள்கொண்டுநிற்கும் நிலை. அஃதாவது விற்பூட்டு, விதலையாப்பு, கொண்டுகூட்டு, பாசிநீக்கு, ஒருசிறைநிலை என்னும் ஐந்து நிலைகளில் இன்னதோர்பொருள்கொண்டு நின்றது இப்பாட்டு என்பதாம். இங்ஙனம் திணைமுதற் கோளீறாக வைத்து அகத்திணைப் பாடல்களை உரைத்தல் பண்டைவழக்காகும். உதாரணமாக—

"முளிதரு மேனற்கட் கானவ ரார்ப்ப முரிற்கணங்கள்
தளிதரு தண்சிலம் பாதக்க தன்று தரணிதன்மேல்
அளிதரு செங்கோ லரிகே சரியந்தண் கூடலன்ன
ஒளிதரு வாணுத லாள்ளைய விவ்வா றொழுகுவதே"

இப்பாட்டிற்குத் திணை – குறிஞ்சி; கைகோள் – களவு; கூற்று – தோழி கூற்று; கேட்டான் – தலைமகன்; இடம் – முன்னிலை; காலம்–எதிர்காலம் எச்சம் – நீ என்பது எஞ்சிற்று; மெய்ப்பாடு – அச்சம்; இவ்வொழுக்கம் பிறர் அறியின் இறந்துபடும் நிலைமையள் ஆயினமையின்; பயன்–வரைவு கடாதல்; பொருள்கோள்–'சிலம்பா! இவள் இவ்வாறு நையக் களவொழுக்கம் ஒழுகுவது தக்கதன்று' என முதலு மிடையுங் கடையுங் கூட்டிப் பொருள்கொண்டமையால் விதலையாப்பாம்.—இவ்வாறே அகப்பாட்டுக் களை அமைத்துக்கொள்க.* (25) மாட்டு என்பது – அகன்றுபொருள்

* "அணியு மமிழ்துமென் னாவியு மாயவன்" என்னுந் திருக்கோவையாரி னும் இத் திணைமுதலிய உறுப்புகளைப் பேராசிரியர் கூறுதல் காண்க (இ).

கிடப்பச்செய்யினும் அணுகிக்கிடப்பச்செய்யினும் இருவகையானும், சென்று பொருள்முடியுமாற்றாற் செய்வது. இது மேற்கூறிய 'கோள்' என்பதன்பாற்படுவதேயாம். (26) வண்ணமென்பது ஒருபாவின்கண் நிகழும் ஓசைவிகற்பம்.

இவ்விருபத்தாறு உறுப்பும் யாப்புக்கு இன்றியமையாத பகுதிகள் எனவும், இனிவரும் எட்டுறுப்பும் அங்ஙனமன்றி ஏற்றபெற்றி வருமெனவுங் கூறுவர். அவையாவன:—அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்பன. இவற்றுள்—(1) அம்மை என்பது, சிலவாய மெல்லியசொற்களால் அறம்பொருளின்பம் என்பவற்றின் இலக்கணமும் இலக்கியமும் கலந்துவரச்செய்வது; பதினெண்கீழ்க்கணக்குநூல்களும்—இங்ஙனம் இலக்கணமும் இலக்கியமும் கலந்துவரச் செய்யப்பட்டனமையின்—இவ் வம்மைப்பாற்படும் என்பர். அந்நூல்களில், இவ்விலக்கணமும் இலக்கியமும் தாவித்தாவி (இடையிட்டு) வருதலின், அவை 'தாயபனுவல்' எனவும்படும். "உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை—யற்றே தவத்திற் குரு" (குறள்)—இஃது இலக்கணங்கூறியது; "யானோக்குங் காலை நிலனோக்கும் நோக்காக்காற்—றானோக்கி மெல்ல நகும்" இஃது இலக்கியங்கூறியது. இங்ஙனமே ஏனை நூல்களினுங் காண்க. (2) அழகென்பது, திரிசொற்பயிலாது சீர்புனைந்து யாக்கப்படுவது; அகநானூறு முதலிய பண்டைநூல்கள் இப்பகுதியன என்பர். (3) தொன்மை என்பது, உரைவிரவிப் பழையகதை* பொருளாகச் செய்யப்படுவது; பெருந்தேவனாற் செய்யப்பட்ட பாரதமும், தகடூர்யாத்திரையும் இப்பகுதியினவாம். (4) தோல் என்பது, மெல்லென்றசொற்களால் விழுமியபொருளைக் கூறுவதும் ஆசிரியப்பாட்டாற் பழையகதையொன்றன்மேல் தொடுக்கப்படுவது மாகும். இது சிந்தாமணி முதலியன என்பர். (5) விருந்தென்பது புதிதாகச் செய்யப்படுவது; அந்தாதி கலம்பகமுதலியனவெல்லாம் இவ்விருந்தின் பகுதியாகும். (6) இயைபென்பது, ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்ற பதினொரு புள்ளியீற்றினுள் ஒன்றையிறுதியாகவைத்துப் பொருட்டொடராகவும் சொற்றொடராகவும் செய்வது; மணிமேகலை பெருங்கதை முதலியவற்றுள் அமைந்த பாடல்கள் னகரவொற்றீற்றான் முடிந்து இப்

* உரைதழுவிவரும் இலக்கியம் வடமொழியில் "சம்பு" எனப்படும்.

பகுதியவாதல் காண்க; "மற்றவிற்றான் வருவனவற்றுக்கும் ஈண் டிலக்கணமுண்மையின் இலக்கியம்பெற்றவழிக் கொள்க; இப்பொழுது அவை வீழ்ந்தனபோலும்" என்பர் பேராசிரியர். (7) புலன் என்பது ஒருவகை நாடகச்செய்யுள். (8) இழைபு—இஃது ஒருவகை யிசைப்பாட்டாம். ஆக எட்டு வனப்பும் முறையே கண்டுகொள்க.

இனி, சிறப்புடைய இருபத்தாறும் சிறப்பில்லாத எட்டும் ஆகிய முப்பத்துநான்கு உறுப்புக்களின் இலக்கணங்களும் அவற்றின் வகை விரிகளும் இச்செய்யுளியலின்கண்ணே விரித்துக்கூறப்படுகின்றன. இவ் வியற்கு எழுதப்பட்டுள்ள பேராசிரியருரை அருமை பெருமை வாய்ந்ததாகும். இவ்வுறுப்புக்களையெல்லாம் அவற்றின் உரைநயங்களுடன் முறையே இங்குக் கூறுமிடத்து மிகப்பெருகும். ஆதலின், யாம் மேலே கூறிப்போந்தவைகொண்டு, இவ்வியலிற் கூறப்படுவன இன்ன என்பது சுருக்கமாக ஒருவாறு கண்டுகொள்க.

---

## VIII. மரபியல்.

உலகவழக்குக்கும் செய்யுள்வழக்குக்கும் பொதுவாகிய மரபுகளைத் தொல்காப்பியனார் ஒன்பதாமியலிற் கூறுகின்றார். மரபாவது—"எப்பொருளெச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்—செப்பினர் அப்படிச் செப்புதல்" ஆகும். தொல்காப்பியத்தே, சொல்லதிகாரக் கிளவியாக்கத்து மரபென்று வரையறுத்து ஓதப்பட்டனவும் செய்யுளியலுள் மரபென்று ஓதப்பட்டனவுமன்றி, இருதிணைப்பொருள்களின் குணங்களாகிய இளமையும் ஆண்மையும் பெருண்மையும்பற்றிய வாலாற்றுமுறையும், உயர்திணை நான்குசாதியும்பற்றிய மரபும், அஃறிணைப் புல்லும் மரனும் பற்றிய மரபும், அவைபற்றிவழங்கும் உலகியன்மரபும் நூன்மரபும் ஆகிய இவையெல்லாம் இம்மரபியலிற் கூறப்படுவனவாம். அவற்றுள், இளமை ஆண்மை பெருண்மைகள்பற்றி ஆசிரியர்கூறிய மரபுகளை ஆராயுமிடத்து, அவற்றிற் சில இலக்கியம்பெற்று வழங்குவனவேனும், பல, கடைச்சங்ககாலிலே வீழ்ந்தன என்பது தெரியலாம். உதாரணமாக— குழவி என்ற பெயர் (மக்கட்கு இக்காலத்து வழங்கினும்), குஞ்சரம் ஆ எருமை கடமை மரை குரங்கு முசு ஊகம் முதலிய விலங்குகட்கும் ஆசிரியர்காலத்துப் பெருவழக்காயிருந்ததென்பது சுஅ—உஉ சூத்திரங்

ளால் அறியலாம். இவ்வழக்குப்படி, குஞ்சரக்குழவி, ஆக்குழவி, எருமைக்குழவி, குரங்குக்குழவி, முசுக்குழவி என்றிவ்வாறு வழங்கின வாதல்வேண்டும். இதுபோலவே, அப்பர் மூடு கடமை என்பவை யாட்டுக்கும், பாட்டி என்பது பன்றி நாய் நரிகட்கும் ஆசிரியர் காலத்து வழக்குக்களாகத் தெரிகின்றன (சஎ, சுசு, சுசு). உரைகாரர், 'இவற்றுக்கெல்லாம் இலக்கியம் முற்காலத்தே வீழ்ந்தன' என்று எழுதிச்செல்லுதலால், கடைச்சங்கத்தார்காலத்துக்கு முன்பே இவ் வழக்குக்கள் அருகினவாதல்வேண்டுமெனக. இக்காலத்தோ எனின், ஆசிரியர்கூறிய மரபுகளிற் பெரும்பாலவும் பழையனவாகவே கழிந்தன; இதற்கு இரண்டுதாரணம் வருமாறு:—'பறப்பனவற்றின் ஆண்பாற்கெல் லாம் சேவற்பெயருரித்து, ஆயின், மயிலுக்குமட்டும் அப்பெயர் ஆகாது' என்னுங் கருத்துப்பட ஆசிரியர் "சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும்—மாயிருந் தூவி மயிலலங் கடையே" (சுO ௬) என்றார். கடைச்சங்க காலத்தே வழங்கிய இம்மரபு "எழுந்து மூன்னுறு மஞ்ஞையஞ் சேவன் மேலேறி" என்ற கந்தபுராணக்கூற்றில் (தேவகாண். தெய்வயானை திரு மணப்—கசுஉ) "மஞ்ஞையஞ் சேவல்" எனப் பின்னுளில் மாறிவழங்கி யமை காணலாம். இதுபற்றிப்போலும் உரைகாரர், "செவ்வேளூர்ந்த மயிற்காயின் அதுவும் (சேவலும்) நேரவும் படும்" என்று அமைத்த தூஉம் என்க. இங்ஙனமே, அளகென்ற பெண்பாற்சொல், கோழி கூகை மயில் என்ற மூன்றற்குமன்றி வழங்காதென்பது "கோழி கூகை யாயிரண் டல்லவை—சூழுங்காலை அளகென லமையா" "அப்பெயர்க் கிழமை மயிற்கு முரித்தே" என்ற சூத்திரங்களால் (சுகக—சுகஉ) அறிய லாம். இவ்வழக்கு "அளகைப் பொறித்தகொடி யிளையோன்" எனப் பாஞ்சோதியார்திருவிளையாடற்புராணத்தே (அருச்சனைப். ௬௪) ஆண் கோழிக்கும் வந்து மாறியமை காண்க. இவ்வாறே பின்னூல்களிற் காலத்துக்கேற்ப மாறிய தொல்காப்பியமரபுகள் பலவாமெனக.

இனி, ஆசிரியர் தங்காலத்து அருகிவழங்கிய மரபுகள் சிலவற்றை யும் அடியில்வரும் சூத்திரத்தாற் குறிப்பிடுவர்.

"குரங்கி னேற்றினைக் கடுவன் என்றலும்
மரம்பயில் கூகையைக் கோட்டானென்றலும்
செவ்வாய்க் கிளியைத் தத்தை என்றலும்
வெவ்வாய் வெருகினைப் பூசை யென்றலும்

குதிரையு ளாணினைச் சேவ லென்றலும்
இருணிறப் பன்றியை யேன மென்றலும்
எருமையு ளாணினைக் கண்டி யென்றலும்
முடிய வந்த அவ்வழக் குண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே"

இதனால், தொல்காப்பியர்நாளில் ஆண்குரங்கு—கடுவனெனவும், கூகை—கோட்டான் எனவும், கிளி—தத்தையெனவும், வெருகு—பூசையெனவும், ஆண்குதிரை—சேவலெனவும், பன்றி-ஏனம் எனவும், ஆணெருமை—கண்டி எனவும் மருவிவழங்கியன என்பது விளங்கும். "முடிய வந்த அவ் வழக் குண்மையிற்-கடிய லாகா கடனறிந் தோர்க்கே" எனக் கூறப்படு வதினின்று, இம்மரபுகள் ஆசிரியர்காலத்தே அமைக்கப்பட்டு ஆன்றோர் வழக்காயின என்பது புலப்படுகின்றது. இம்மரபுப்பெயர்களுள்ளே, ஆண்குதிரையைச் சேவலென்பதும், ஆணெருமையைக் கண்டி என்ப தும் ஒழிய, ஒழிந்தவை இக்காலத்தும் வழங்குவனவே. உரைகாரர் இச்சூத்திரவுரையில் எழுதுவன குறிப்பிடற்பால:—"கடுவனு மறியு மக்கொடி யோனையே"—ஆண்குரங்கு (கடுவன் எனப்பட்டது). இதனைக் கடியலாகாதெனப்பட்ட இழுக்கென்னை எனின், மக்கட்கும் வெருகிற்கும் அக்காலத்துப் பயின்றனபோலும். * * * குதிரையைச் சேவ லென்றல் இக்காலத் தரிதாயிற்று... .எருமையேற்றினையும் கண்டி என்ப போலும்: அது காணலாயிற்றில்லை" எனக் காண்க (பக் எகூச). இவற் றால், தொல்காப்பியனார்காலத்தே குதிரைச்சேவல், எருமைக்கண்டி என ஆண்பெயர்கள் வழங்கியதோடு, நம்காலத்துப் பெருகவழங்கும் பெயர் களிற சில அவர்நாளில் அருகிவழங்கியமையும் அறியப்படும்.

உயர்திணை நான்குசாதியும்பற்றிய மரபுகள் சிலவும் ஆசிரியர் கூறுவர். அந்தணர்க்குரிய கருவிகள்—முந்நூல், குண்டிகை (கரகம்), முக்கோல், மணை (ஆதனம்) என்பன; அரசர்க்குரிய கருவிகள்:—படை கொடி குடை முரசு புரவி களிறு தேர் தார் முடி முதலியன. இவற்றுள் அந்தணர்க்குரிய வேள்விக்கருவிகள் அரசர்க்குரியவாகவும் வரும். இனிப் பாடாண்டிணையுள், பரிசில்வேண்டுவதும் விடுப்பதுமாகிய துறைக ளிலே, கொடுக்குந்தலைவனுக்கு வழங்கும காளை இளையோன் நெடுந்தகை செம்மல் என்ற சொற்கள் அரசர்க்குச சாதிவகையாற் சொல்லத்தக்கன. அந்தணர்க்காயின், புனைந்துரைவகையானே அவை கூறப்படும். எல்லா

வருணத்தாரும் அவரவர் ஊர்ப்பெயர் கருவிப்பெயர் என்பனவற்றைச் சார்த்தி இயற்பெயர்வழங்கப்பெறுவர். நான்குசாதியையுஞ் சிறப்பிக்குமிடத்து அந்தணரைப் பிரமனோடும், அரசனை மாயனோடும், வணிகரை நிதியின்கிழவனோடும் (குபேரன்), வேளாளரை வருணனோடும் ஒப்பித்துக் கூறல் மரபாம். இனிப் படைத்தொழிற்கு உரியவர், அந்தணரும் வேளாளரு மொழிந்த அரசரும் வணிகருமேயாவர். இவருள் வைசியருடைய சாதித்தொழில், வாணிகவாழ்க்கையும் எண்வகைக்கூலமாகிய பயறு உழுந்து முதலியன விளைத்தலுமாகும். இவர்க்குச் சூடும் பூவும் குலப்பூவும் தனியே உண்டு. இனி, வேளாண்மாந்தர் பலவகைத் தொழிலினராயினும், உழுதூண்தொழிலே மிகுதியுமுடையர். அன்றி, வேந்தர் அபிமானித்துக் கொடுக்குமிடத்து இவர்க்குப் படை கண்ணி (முடிப்பூ) களும் உரியன. அரசர் இல்லாவிடத்து, அந்தணரே அவ்வரசியல்பூண்டு நாடாளுதற்கு உரியர்: குறுநிலமன்னர்க்கும் மேற்குறித்த அரசர்க்குரிய பகுதிகள் கொள்ளப்படுமாயினும், இழிந்தோராகிய திணைநிலைமக்களுக்கு இவை கூறப்படா என்பர் (௬௨௬-௬௪0).

அஃறிணைக்குரிய மரபுகளாக இவ்வியலிற் கூறப்பட்டனவற்றுட் சிறந்தன சில வருமாறு:—புறத்தில் வயிரமுடையபனை தெங்கு கமுகு முதலியனவெல்லாம் 'புல்' என்றும், அகத்து வயிரமுடைய இருப்பை புளி ஆச்சாமுதலியவை 'மரம்' என்றும் வழங்கப்படும். இவற்றுள், புற்சாதியின் உறுப்புக்கள் தோடு மடல் முதலியன; மரச்சாதியின் உறுப்புக்கள் இலை முறி முதலியன; இவையிரண்டற்கும் பொதுவாக வழங்கும் உறுப்புக்கள் காய் பழ முதலியனவாம் (௬௪௧-௬௪௪).

இனி, ஆசிரியர், உலகவழக்குக்களும் மரபுநிலைதிரியாமற் கூறவேண்டுமென்றும், அம்மரபு திரியவழங்கப்படுமாயின் உலகத்துச் சொல்லெல்லாம் பொருளிழந்து பிறிதுபிறிதாகுமென்றும், உலகநிழ்ச்சியெல்லாம் உயர்ந்தோரைப்பற்றியே நிகழ்வனவாதலின் "வழக்கெனப்படுவது உயர்ந்தோர் மேற்றே" என்றும், பிறவுங் கூறுவர். உலகியலெல்லாம் மரபிற்றிரியாச்சொல்லொடுதழுவிவரல்வேண்டுமெனக் கூறப்படுஞ் சூத்திரத்தே (௬௪௫) "நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்—கலந்த மயக்கம் உலகம்" என்று ஆசிரியர் கூறுவர். அதனால், இவர் பஞ்சபூதக்கோட்பாடுடைய வைதிகமதத்தவர் என்பது தேற்றமாம்.*

*பௌத்தர் நான்குபூதவகையே கொள்வர்.

இவ்வாறே "அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே," "மறையோராறே", "அந்தணர் திறத்தும் ஐயர் பாங்கினும்", "தந்தைய ரொப்பர் மக்களென் பதனால்", 'முக்கோல்....அந்தணர்க் குரிய' எனத் தம் வைதிகச்சார்பை எண்ணிறந்த விடங்களில் ஆசிரியர் குறிப்பிட்டுப்போவர்.

நன்னூலார் பாயிரத்துக்கூறியதுபோல, ஆசிரியர், நூன்மரபுகள் பலவும் இவ்வியலின் இறுதியில் விரித்தோதுவர். அவை நூலினிலக் கணமும், முதனூல் வழிநூல் என்ற அதன்பகுதியும், தொகுத்தல் வகுத்தல் தொகைவிரி மொழிபெயர்ப்பு என்னும் வழிநூற் பிரிவுகளும் தந்திரவுத்தியும் பிறவுமாம். "மொழிபெயர்த்து அதர்ப்பட யாத்தல்" என்பதனையும் வழிநூல்வகையாக ஆசிரியர் கூறுதலால், அவர்காலத்தே வடநூலினின்று தமிழில் நேர்படப் பெயர்க்கப்பட்ட நூல்கள் வழங்கி யமை நன்குணரப்படும். தொல்காப்பியமுடிவிற் கூறப்பட்ட தந்திரவுத்தி முப்பத்திரண்டும், கௌடில்ய - அர்த்தசாஸ்திரத்தின் இறுதியத்தியா யத்தில் அதுவே தலைப்பெயருடன் கூறப்பட்டிருத்தல் ஆராய்ந்து கொள்ளத்தக்கது.*.

மேற்கூறியவாறு, சூத்திரங்களாற் குறிக்கப்பட்ட வழக்குக்களே யன்றி, உரைகாரர்கூற்றுக்களால் அறியக்கிடப்பனவும் பலவாம். இவ்விய லில்வரும் "மரபுநிலைதிரிதல்" என்ற சூத்திரவுரையில், உரைகாரர் மிறைக் கவி (சித்திரகவி)களைப்பற்றிக் கூறுமிடத்து, "இனி, நிறைமொழி மாந் தர், மறைமொழி போல்வனசில மிறைக்கவி பாடினாருளரென்பதேபற்றி, அல்லாதாரும் அவ்வாறுசெய்தல் மரபன்று என்றற்கும் இது கூறினான் என்பது; அவை-சக்கரம், சுழிகுளம், கோமூத்திரிகை, ஏகபாதம், எழுகூற்றிருக்கை, மாலைமாற்று என்றாற்போல்வன. இவை, மந்திர வகையானன்றி, வாளாது மக்களைச் செய்யுள்செய்வார்க்கும் அகனைந் திணைக்கும் மரபன்றென்பது கருத்து; அல்லாதார், இவற்றை எல்லார்க் கும் செய்தற்குரியவென இழியக்கருதி, அன்னவகையான் வேறுசில பெய்துகொண்டு அவற்றுக்கும் இலக்கணம் சொல்லுப. அவை இத்துணை என்று வரையறுக்கலாகா: என்னை? ஒற்றை இரட்டை

*இச்செய்தியை முதன்முதற் கண்டு எனக்கு அன்புடன் அறிவித்தவர், சென்னை யூனிவர்ஸிடி - தமிழ் - லெக்ஸிகன் - ஆபீஸ் தலைவர் ஸ்ரீமாந். எஸ். வையாபுரிபிள்ளையவர்களாவர்.

புத்தி வித்தாரம் என்றாற்போல்வன பலவுங் கட்டிக்கொண்டு, அவற் றானே செய்யுள்செய்யினுங் கடியலாகாமையின் அவற்றிற்கு வரையறை வகையான் இலக்கணங் கூறலாகா என்பது" என்று எழுதுவர். இத னால், சக்கரம் சுழிகுளம் ஏகபாதமுதலிய சித்திரகவிகள் (மிறைக்கவி) மந்திரவகையால் தேவர்பொருட்டுச் செய்யப்படுவனவன்றி, மக்கட்குரி யனவாக முற்காலத்தார் கருதினரல்லர் என்பது போதரும். தேவார முதலியவற்றில் ஏகபாதம், எழுகூற்றிருக்கை, மாலைமாற்று முதலிய மிறைக்கவிகள், மேற்கூறியவாறே தேவரைப்பற்றியே அமைந்திருத்த லுங் கண்டுகொள்க.

இன்னும், இம் மரபியற்சூத்திரங்களாலும் உரைகளாலும் அறியப் படும் மரபுகள் பலவேனும், சிறப்பும் சரித்திரக்குறிப்பு முடையனவே ஈண்டு எடுத்துரைக்கப்பட்டன. ஏனையவற்றை ஈண்டு உரைப்பிற் பெருகும்.

முற்றும்.

---

ஸ்ரீ:

# பொருட்குறிப்பு.



# பிழையுந் திருத்தமும்.



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 9 | 17 | மிகுந்து | மிக்கு |
| 27 | 9 | இப்பிரிவு | இப்பிரிவுகள் |
| ,, | ,, | முரித்தாம் | முரியவாம் |
| 38 | 16 | சடைச்சங்கத்து | கடைச்சங்கத்து |
| 54 | 9-10 | செவ்விபார்த்தாயினும் | செவ்விக்கணுயினும் |
| ,, | 28 | கொம்புடையதோர் | கொம்புடைய |
| 55 | 6 | தினைப்புனேங் | தினைப்புனங் |
| 59 | 32 | கேற்றது. | கேற்றது, |
| 60 | 16 | வரைவுகடவா | வரைவுகடாவ |
| 62 | 30 | அழிழ்ந்த | அமிழ்ந்த |
| 63 | 29 | புலனுகின்றது. | புலனுகின்றன. |
| 66 | 17 | பிறவாலாறுகளும் | பிறவாறுகவும் |
| 73 | 10 | ராஜரிஷி | ராஜருஷி |
| 76 | 2 | காரணம் | காரணம். |
| 77 | 30 | மாதங்கா | மாதங்கர் |
| 82 | 11 | மூன்றிரவு | மூன்றிரவு |
| 86 | 8 | மணிமேகலையிற் | சிலப்பதிகார மணிமேகலைகளிற் |
| 101 | 7 | இந்நூல் அதனை | அந்நூல் இதனை |
| 103 | 30 | நச்சினர்க்கியர் | நச்சினர்க்கினியர் |
| 104 | 27 | இக்காத்தை | இக்காரந்தை |
| 107 | 11 | சொடைநிலை | கொடைநிலை |
| ,, | 24 | வேண்டியேர்க்கு | வேண்டியோர்க்கு |
| 117 | 19 | கொமுநரை | கொழுநரை |
| 119 | 21 | உரியன. | உரியது. |
| 121 | 7 | கூடாததா | கூடாதவா |
| 134 | 28 | ஒருவர்தானே | ஒருவர்தாமே |
| 140 | 27 | ஆராயற்பாலன | ஆராயற்பாலது |
| 144 | 6 | மென்பது, | மென்க. |

# பிழையுந் திருத்தமும்.



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 17 | மிகுந்து | மிக்கு |
| 27 | 9 | இப்பிரிவு | இப்பிரிவுகள் |
| ,, | ,, | முரித்தாம் | முரியவாம் |
| 38 | 16 | சடைச்சங்கத்து | கடைச்சங்கத்து |
| 54 | 9-10 | செவ்விபார்த்தாயினும் | செவ்விக்கண்ணுயினும் |
| ,, | 28 | கொம்புடையதோர் | கொம்புடைய |
| 55 | 6 | தினைபபுனங் | தினைப்புனங் |
| 59 | 32 | கேற்றது. | கேற்றது, |
| 60 | 16 | வரைவுகடவா | வரைவுகடாவ |
| 62 | 30 | அழிழ்ந்த | அமிழ்ந்த |
| 63 | 29 | புலனுகின்றது. | புலனுகின்றன. |
| 66 | 17 | பிறவாலாறுகளும் | பிறவாறுகவும் |
| 73 | 10 | ராஜரிஷி | ராஜருஷி |
| 76 | 2 | காரணம | காரணம். |
| 77 | 30 | மாதங்கா | மாதங்கர் |
| 82 | 11 | மூன்றிரவு | மூன்றிரவு |
| 86 | 8 | மணிமேகலையிற் | சிலப்பதிகார மணிமேகலைகளிற் |
| 101 | 7 | இந்நூல் அதனை | அந்நூல் இதனை |
| 103 | 30 | நசசினுர்க்கியர் | நச்சினுர்க்கினியர் |
| 104 | 27 | இக்காரத்தை | இக்காரந்தை |
| 107 | 11 | சொடைநிலை | கொடைநிலை |
| ,, | 24 | வேண்டியேர்க்கு | வேண்டியோர்க்கு |
| 117 | 19 | கொமுநரை | கொழுநரை |
| 119 | 21 | உரியன. | உரியது. |
| 121 | 7 | கூடாததா | கூடாதவா |
| 134 | 28 | ஒருவர்தானே | ஒருவர்தாமே |
| 140 | 27 | ஆராயற்பாலன | ஆராயற்பாலது |
| 144 | 6 | மென்பது, | மென்க. |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 26. | திருத்தணிகைத்திருவிருத்தம் ... ... | ... | 0 | 1 | 0 |
| 27. | *மதுரைத்திருப்பணிமாலை ... | ... | | | |
| 28. | *சந்திராலோகம் ... ... | ... | | | |
| 29. | சோழவம்சசரித்திரச்சுருக்கம் ... | ... | 1 | 0 | 0 |
| 30. | ஞானாமிர்தக்கட்டளை ... ... | ... | 0 | 3 | 0 |
| 31. | பாண்டியம் ... ... ... | ... | 0 | 4 | 0 |
| 32. | மதிஷாபஞ்சகம் ... ... | ... | 0 | 8 | 0 |
| 33. | வேளிர்வரலாறு ... ... | ... | 0 | 8 | 0 |
| 34. | அகப்பொருள்விளக்கம் ... ... | ... | 1 | 4 | 0 |
| 35.* | திருமந்திரநூறுபாட்டுக்குரை ... | ... | | | |
| 36. | உவமானசங்கிரகம் ... ... | ... | 0 | 1 | 6 |
| 37.* | மாறனலங்காரமூலமும் உரையும் ... | ... | | | |
| 38. | திருப்புல்லாணிமாலை ... ... | ... | 0 | 2 | 0 |
| 39. | பழமொழிமூலமும் பழைய உரையும் ... (முதல் 100 செய்யுள்) | } | 1 | 0 | 0 |
| 40. | திருமாலிருஞ்சோலைமலை அழகர்பிள்ளைத்தமிழ் | ... | 0 | 8 | 0 |
| 41. | பொருட்டொகைநிகண்டு ... | ... | 0 | 6 | 0 |
| 42. | அகராதிநிகண்டு .. ... | ... | 0 | 12 | 0 |
| 43. | மேகவிடுதூது ... ... | ... | 0 | 2 | 0 |
| 44. | திருக்குற்றாலமாலை ... ... | ... | 0 | 2 | 0 |
| 45. | தண்டலையார்சதகம் .. ... | ... | 0 | 4 | 0 |
| 46. | இராமோதந்தம் ... ... | ... | 0 | 3 | 0 |
| 47. | பழமொழிமூலமும் பழைய உரையும் ... (இரண்டாவது 100 செய்யுள்) | } | 1 | 0 | 0 |
| 48. | சேதுநாடுந் தமிழும் ... | | 0 | 6 | 0 |
| 49. | கடைவள்ளலார் காலம் ... | ... | 0 | 6 | 0 |
| 50. | தமிழரும் ஆந்திரரும் ... ... | ... | 0 | 4 | 0 |
| 51. | மதங்கசூளாமணி ... ... | ... | 1 | 0 | 0 |

## வேறுபதிப்பு.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | சேரன் செங்குட்டுவன் ... ... | ... | 1 | 0 | 0 |
| 2 | வஞ்சிமாநகர் ... ... | ... | 0 | 8 | 0 |
| 3. | ஜோதிமாலை (தமிழ்நாவல்) . | ... | 0 | 4 | 0 |
| 4. | சிவஞானசுவாமிகள்மீது இரட்டைமணிமாலை | ... | 0 | 1 | 0 |

* இவ்வடையாளமிடப்பட்டவை இப்போது கைவசமில்லை.

குறிப்பு:—

1. சங்கத்திலிருந்து மாதமொருமுறை அரிய பெரிய விஷயங்களை‹ கொண்டு வெளியாகிவரும் "செந்தமிழ்ப்" பத்திரிகைக்கு வருஷச்சந்: ரூ 4—0—0. தனிப்பிரதியின் கிரயம் அணா 8. வெளிநாடுகளுக்கு வருஷ‹ சந்தா ரூ 4—8—0. இதுவரை 25 தொகுதிகள் பூர்த்தியாயிருக்கின்றன இவற்றுள் 1, 2, 3, 7, 8, 9, 10, 16-ம் தொகுதிகள் கைவசமில்லை, பைண் செய்யப்பெறாத தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—0—0-வீதமும், பைண் செய்யப்பெற்ற தொகுதிகள் தொகுதி 1-க்கு ரூ 4—12—0 வீதமும் விற்க பெறும். வி. பி. சார்ஜ் பிரத்தியேகம்.

2. சங்கப்பிரசுரம் ஒன்றில் ஒரேதடவையில் 10 பிரதிகளும் அதற்குமே பட்டும் வாங்குவோர்கட்கு மொத்தக்கிரயத்தொகையில் 100க்கு 10 வீதம் கமி ஷன் தள்ளிக் கொடுக்கப்படும்.

லெக்ஷ்மீநாராயணையர்.